வேதாந்தம்.
வழி நூல்கள்.
ஸ்ரீ லலிதா த்ரிசதி ஸ்தோத்ரம்.

21-5

"ஸ்ரீ சங்கர க்ருபா அனுபந்தம்"

அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி வெளியீடு

॥ श्रीः ॥

# श्रीजगद्गुरुग्रन्थमाला-४

॥ श्रीः ॥







# ஸ்ரீ ஜகத்குரு க்ரந்தமாலா

## 4

அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி வெளியீடு

॥ श्रीः ॥



"एषा शंकरभारती विजयते निर्वाणसौख्यप्रदा"

# श्रीजगद्गुरुग्रन्थमाला-४

## (श्रीललितात्रिशतीस्तोत्रम्)

द्वितीयो भागः ।



# ஸ்ரீ ஜகத்குரு க்ரந்தமாலா—4

## ஸ்ரீ லலிதாத்ரிசதீ ஸ்தோத்திரம்

(இரண்டாம் பாகம்)

ஸ்ரீ வாணீ விலாஸ் பிரஸ்

ஸ்ரீரங்கம்

அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி வெளியீடு

॥ श्रीः ॥



"एषा शंकरभारती विजयते निर्वाणसौख्यप्रदा"

# श्रीजगद्गुरुग्रन्थमाला–४

## (श्रीललितात्रिशतीस्तोत्रम्)

द्वितीयो भागः ।



# ஸ்ரீ ஜகத்குரு க்ரந்தமாலா–4

## ஸ்ரீ லலிதாத்ரிசதீ ஸ்தோத்திரம்

(இரண்டாம் பாகம்)

ஸ்ரீ வாணீ விலாஸ் பிரஸ்
ஸ்ரீரங்கம்



॥ श्रीगुरुभ्यो नमः ॥

## ॥ समर्पणम् ॥

श्रीमच्छंकरदेशिकस्य महिता मूर्तिद्वयी या स्थिता
तत्रैका हि तिरोबभूव विजने केदारनाथस्थले ।
अन्या वर्णमयी तु भाष्यनिचयस्तोत्रप्रबन्धात्मना
सर्वत्रैव समुज्ज्वला विजयते ताभ्यां तनुभ्यां नमः ॥ १ ॥

यस्तत्रास्ति लघुप्रबन्धनिचयः स्तोत्राणि भूयांसि वा
तेषां द्राविडभाषयाऽनुवदनं विद्वद्वरैः कारितम् ।
श्रीमच्छंकरसेविनी सुसमितिः सम्यक्प्रकाश्याधुना
विद्यातीर्थपदे समर्पयति तत् लोकोपकारक्षमम् ॥ २ ॥

शंकरगुरुसंस्थापितसर्वजगद्वन्द्यशारदापीठम् ।
शंकरसेवासमितिः प्रकरणमालार्पणादलंकुरुते ॥ ३ ॥

शंकरगुरुवररचितप्रकरणमालां शुभानुवादयुताम् ।
शंकरपरंपरागतविद्यातीर्थे समार्पिपत्समितिः ॥ ४ ॥

शंकरसेवारसिकाः शांकरसिद्धान्तसारसर्वस्वम् ।
शंकरसेवासमितिप्रकटनमालां सदाऽपि सेवन्ताम् ॥ ५ ॥

हकाररूपा हलधृक्पूजिता हरिणेक्षणा ।
हरप्रिया हराराध्या हरिब्रह्मेन्द्रवन्दिता ॥ २० ॥

ஹகார ரூபா ஹலத்ருக் பூஜிதா ஹரிணேக்ஷணா ।
ஹரப்ரியா ஹராராத்யா ஹரிப்ரஹ்மேந்த்ர வந்திதா ॥

हकाररूपा ।
**ஹகாரரூபா** 101

(i) தன் சரீரமான காதி வித்யையில் ह (ஹ) என்ற அக்ஷரத்தை ஆறுவது அவயவமாய்க் கொண்டிருப்பவள்.

(ii) மூலவித்யையிலுள்ள ஆறுவது அக்ஷரமான ஹகாரத்தால் கூறப்படுபவள்.

ओं हकाररूपायै नमः ।
ஓம் ஹகாரரூபாயை நம: (101)

हलधृक्पूजिता ।
**ஹலத்ருக்பூஜிதா** 102

கலப்பையை ஆயுதமாகக்கொண்ட பலராமரால் ஆராதிக்கப்பட்டவள்.

விவரணம் :— மஹாவிஷ்ணுவின் அம்சபூதரான பலராமருக்கு வீர்யசௌர்யாதி சக்திகளைக் கொடுத்தது போல் தனது பக்தர்கள் அனைவருக்கும் பராசக்தி மேன்மையைக் கொடுக்கிறாள் என்பது பொருள்.

ओं हलधृक्पूजितायै नमः ।
ஓம் ஹலத்ருக் பூஜிதாயை நம: (102)

हरिणेक्षणा ।
**ஹரிணேக்ஷணா** 103

(i) பெண்மானின் விழியுடன் கூடியவள். (உவகையின் பூரிப்பினால் மிரண்ட கண்களுள்ளவள்).

(ii) எக்காலமும் எங்கும் எல்லாவற்றையும் காண்கிறவள். (பராசக்தியின் திருஷ்டியிலிருந்து ஒன்றையும் மறைக்கமுடியாது என்பது கருத்து).

(iii) (பக்தர்கள்பால் ஆதரவினால்) மான் விழியைப் போல் பார்வையுடன் கூடியவள்.

ओं हरिणेक्षणायै नमः ।

ஓம் ஹரிணேக்ஷணாயை நம: (103)

हरप्रिया ।

**ஹரப்ரியா** 104

(i) பரமசிவனுடைய பிராண நாயகி.

(ii) பரமசிவன் யாருக்குப் பிரியமாயுள்ளவரோ அவள்.

விவரணம் :— பதி பத்னீ பாவத்திற்குமேல் பிரியத்தின் அளவு ஒன்றிலும் இருக்க முடியாதாகையால், சிவ சக்திகளுக்கிடையே அது குறிக்கப்பட்டிருக்கிறது.

ओं हरप्रियायै नमः ।

ஓம் ஹரப்ரியாயை நம: (104)

हराराध्या ।

**ஹராராத்யா** 105

(பராசக்தி கேவல ஸச்சிதானந்த ஸ்வரூபிணியாக இருப்பதால்) தனது பர்த்தாவாகிய பரமசிவனால் ஆராதிக்கப்படும் யோக்கியதை பெற்றவள்.

குறிப்பு :—104, 105வது நாமாக்களிலிருந்து மணாளனுக்கும், மனைவிக்குமிடையே அறநெறி எங்ஙனம் இருக்க வேண்டும் என்பது தெரியவருகிறது.

ओं हराराध्यायै नमः ।

ஓம் ஹராராத்யாயை நம : (105)

हरिब्रह्मेन्द्रवन्दिता ।

**ஹரிப்ரஹ்மேந்த்ரவந்திதா** 106

21-5



விஷ்ணு, ப்ரஹ்மா, இந்திரன் இவர்களால் நமஸ்கரிக்கப் படுபவள்.

விவரணம் :—'ஹரி' என்றால் மஹாவிஷ்ணு, லக்ஷ்மீ காந்தன். 'பிரம்மா' ஸரஸ்வதீகாந்தன். இந்திரன் தேவர்களுக்கு அரசன். இவர்கள் மூவரையும் குறிப்பிட்ட தால் எல்லாத்தேவர்களையும் குறிப்பிட்டதாக ஆகிறது. எல்லா தேவர்களாலும் நமஸ்கரிக்கப்பட்டவள் என்பது கருத்து. தேவர்களே தங்கள் நன்மையைக் கருதிப் பராசக்தியை வழிபடுகிறார்கள் என்பதால் மாந்தர் வழிபடு வதன் அவசியம் வெகு தெளிவுடன் விளங்கும்.

ओं हरिब्रह्मेन्द्रवन्दितायै नमः ।

ஓம் ஹரிப்ரஹ்மேந்த்ரவந்திதாயை நம: (106)

हयारूढासेविताङ्घ्रिर्हयमेधसमर्चिता ।
हर्यक्षवाहना हंसवाहना हतदानवा ॥ २१ ॥

ஹயாரூடா ஸேவிதாங்க்ரி: ஹயமேத ஸமர்ச்சிதா ।
ஹர்யக்ஷ வாஹநா ஹம்ஸ வாஹநா ஹத தாநவா ॥

हयारूढासेविताङ्घ्रिः ।

**ஹயாரூடா ஸேவிதாங்க்ரி:** 107

(i) ரதம், கஜம், துரகம் பதாதி என்ற நால்வகை ஸைன்யங்களுக்குள் துரகமென்ற குதிரைப்படைக்கு நாயகி யான ஹயாரூடா என்ற சக்தியம்சத்தினால் வணங்கப்படும் பராசக்தி.

விவரணம் :—அம்பாளுடைய ஸைன்யங்களில் குதிரைப்படைக்குத் தலைமை வகிக்கும் சக்திக்கு 'ஹயாரூடா' என்று பெயர். இவளை உபாஸிப்பவர்களுக்கு எல்லாம் வசமாகும்.

(ii) ஜகன் மாயையினால் ஸேவிக்கப்படுபவள்.

விவரணம் :— 'ஹயம்' என்றால் குதிரை. பிருஹதாரண்யக உபநிஷத்தில் 'उषा वा अश्वस्य मेध्यस्य शिरः' (1-1-1) என்று துவக்கப்படும் பிராஹ்மணத்தில் ஜகத்தின் உறுப்புகள் குதிரையின் உறுப்புகளுக்கு உவமையாகக் கூறப்பட்டிருக்கின்றன. 'ஆரூடா' என்றால் மேலே உட்கார்ந்துகொண்டிருப்பவள் என்று பொருள். அதாவது குதிரையை ஓட்டுபவள். ஜகத்தின் ஸஞ்சாரத்திற்குப் ப்ரகிருதிஅல்லது மாயையே காரணமாதலால், 'ஹயாரூடா' என்றபதம் ஜகன்மாயையைக் குறிக்கும். இந்த மாயாசக்தி, பராசக்தியின் அம்சமாதலால், பராசக்தி அவளால் வணங்கப்படுவதாகக் கூறப்படுகிறாள்.

ॐ हयारूढासेविताङ्घ्र्यै नमः ।

ஓம் ஹயாரூடா ஸேவிதாங்க்ர்யை நம: (107)

**हयमेधसमर्चिता ।**

**ஹயமேதஸமர்ச்சிதா** 108

அசுவமேதயாகத்தால் பூஜிக்கப்படுபவள்.

விவரணம் :— எல்லா யாகங்களிலும் சிறந்தது அசுவமேத யாகம். இதைப் பாண்டவர் முதலிய சக்ரவர்த்திகளாலேதான் நிர்வகித்து நடத்தமுடியும். அசுவமேத யாகம் விரும்பிய பலனெல்லாவற்றையும் தரும் சக்தி வாய்ந்தது. இளா முதலியவர்கள் புருஷனாக மாறுவதற்கு அசுவமேத யாகம் செய்து தமது விருப்பத்தை நிறைவேற்றிக் கொண்டனர் என்று தேவீபாகவதத்தில் சொல்லப்படுகிறது. பராசக்தியைச் சிறந்த முறையில் வழிபடவேண்டும் என்பது பொதுக் கருத்து.

ॐ हयमेधसमर्चितायै नमः ।

ஓம் ஹயமேதஸமர்ச்சிதாயை நம: (108)

**हर्यक्षवाहना ।**

**ஹர்யக்ஷவாஹநா** 109

ஸிம்மத்தை வாஹநமாகக்கொண்டவள். மஹாலக்ஷ்மி ரூபங்களில் துர்க்கையாக விளங்குபவள்.

விவரணம் :—துஷ்டர்களை அழிக்கும் பொருட்டுத் துர்க்கையின் ரூபத்தை மஹாலக்ஷ்மி எடுக்கிருள். துர்க்கை என்ற பெயர் வந்ததற்குக் காரணம் தேவீ மாஹாத்மியத்திலுள்ள கீழ்க்கண்ட சுலோகத்திலிருந்து விளங்கும் :—

तत्रैव च वधिष्यामि दुर्गमाख्यं महासुरम् ।
दुर्गा देवीति विख्यातं तन्मे नाम भविष्यति ॥ (१२–८)

"ஒரு காலத்தில் துர்கமன் என்ற மாஹாசுரனை நான் கொல்லப்போகிறேன். அப்பொழுது எனக்குத் துர்க்கா தேவியென்ற புகழ்ப்பெயர் விளங்கும்". துர்க்கையை ஸ்மரித்தால் பயமனைத்தும் விலகிவிடும்.

दुर्गे स्मृता हरसि भीतिमशेषजन्तोः ॥ (४–१७)

என்பதும் தேவீமாஹாத்மியத்திலுள்ள வாக்கு.

ओं हर्यक्षवाहनायै नमः ।
ஓம் ஹர்யக்ஷவாஹநாயை நம : (109)

हंसवाहना ।
ஹம்ஸவாஹநா 110

(i) ஸூரியனும் பிராணனும் எந்தப் பராசக்தியை விளக்குகிருர்களோ அவள்.

விவரணம் :— 'ஹம்ஸ:' என்ற பதம் 'ஹந்தி' (செல்லுவது) என்பதிலிருந்து வந்திருப்பதாகக்கொண்டு, அதற்கு அர்த்தம் 'சூரியன்' அல்லது 'பிராணன்' என்பது கிடைக்கிறது. 'வாஹனம்' என்ருல் எது சுமக்கிறதோ, அதாவது ஆதாரமாக விளங்குகிறதோ அல்லது விளக்கும் வஸ்துவாக நிற்கிறதோ அது. ஸூரியனும் பிராணனும் பராசக்தியை விளக்கும் வஸ்துக்களாக இருக்கின்றன

என்பது கருத்து. [1]'स यश्चायं पुरुषे। यश्चासावादित्ये। स एकः' (நம்மில் இருக்கும் ஆத்ம சக்தியும் ஸூரியனிடத்தில் இருக்கும் சக்தியும் பிரம்மமே) என்பது சுருதி வாக்கியம்.

अन्तस्तद्धर्मोपदेशात् (1-1-20) अत एव प्राणः (1-1-23) என்ற இரண்டு பிரம்மஸூத்திர வாக்கியங்களும் முறையே ஸூரியனில் விளங்கும் ஜோதியும், பிராணனில் விளங்கும் சக்தியும் பிரம்மமேயென்று சொல்லுகின்றன.

(ii) அன்னத்தை வாஹனமாக உடைய 'ப்ராஹ்மீ' யென்ற பிரஹ்ம சக்தி.

விவரணம் :— சும்ப நிசும்பாதிகளை அழிக்கப் பராசக்தி 'சண்டிகை' என்ற ரூபத்துடன் புறப்பட்டபொழுது, பிரம்மா, ருத்ரன், ஸ்கந்தர், விஷ்ணு, இந்திரன் முதலியவர்களுடைய சக்திகள் தத்தம் ரூபம், சின்னம் முதலியவற்றுடன் வெளிக்கிளம்பி, சண்டிகைக்கு உதவியாக நின்று போர் வகுத்தார்கள் என்று கூறப்பட்டிருக்கிறது. 'பிரஹ்மாணி'யென்ற சக்தி கீழ்கண்டவாறு [1]தேவீ மாஹாத்மியத்தில் வர்ணிக்கப்பட்டிருக்கிறது :—

हंसयुक्तविमानस्था साक्षसूत्रकमण्डलुः ।
आयाता ब्रह्मणः शक्तिः ब्रह्माणीत्यभिधीयते ॥ (८–५)

"அன்னம் பூட்டிய விமானத்தில் வீற்று, ருத்ராக்ஷத்தையும் பூணூலையும் பூண்டு, கமண்டலத்தைக் கையில் ஏந்தி பிரம்ம சக்தியானவள் (சண்டிகையிடம்) வந்தாள். அவளுக்குப் 'பிரம்மாணி'யென்று பெயர்". பராசக்தி, 'வைஷ்ணவீ', 'பவானி', 'இந்திராணி'யென்ற அம்ச சக்திகளாக விளங்குகிறாள் என்பது கருத்து.

ओं हंसवाहनायै नमः ।

ஓம் ஹம்ஸவாஹநாயை நமः (110)

1. தைத்திரீய உபநிஷத் ஆனந்தவல்லி அநு. 8.

हतदानवा ।

**ஹததாநவா** 111

அஸுரர்களைக் கொன்றவள்.

விவரணம் :— 'தனு' என்பவள் கசியபப் பிரஜாபதியினுடைய பதின்மூன்று மனைவிகளில் ஒருவள். இந்தப் பதின்மூன்று பெண்களும் தக்ஷனுக்கும் அஸிக்னி என்பவளுக்கும் பிறந்த அறுபது பெண்களில் அடங்கியுள்ளவர்கள். கசியபருக்கும் தனுவுக்கும் அறுபத்தோறு புத்திரர்கள் உண்டாயினர். அவர்கள் வம்சம் தழைத்து 'தானவர்' என்ற அசுரகுலம் விருத்தியடைந்தது. தானவர்கள் தமோ குணம் மிகுந்து நினைத்த உருவத்தை எடுக்கும் மாயாசக்தியுடன் கூடியவர்கள்.

ஸ்ரீமத் பாகவதத்தில் கசியபருக்கும் அவருடைய மனைவிகளில் ஒருத்தியாகிய 'திதி' என்பவளுக்கும் 'திதி' யினுடைய காமாவஸ்தையினால் கச்யபர் நிர்பந்திக்கப்பட்டு ருத்ரன் ஸஞ்சரிக்கும் ஸந்தியாகாலத்தில், புணர்ச்சி ஏற்பட்டதால், ஹிரண்யாக்ஷன், ஹிரண்யகசிபு என்ற அசுரர்கள் பிறந்தனர் என்று உரைக்கப்பட்டிருக்கிறது. நற்குணம் வாய்ந்த குழந்தைகள் வேண்டுமாயின் விதி ஸம்ஸ்கார பூர்வமாக பதி பத்னிகள் நிர்தோஷமான காலங்களிலேயே சேரவேண்டுமென்பது தெளிவாகும்.

ப்ரச்னோபநிஷத்தில் காலமானது ப்ராண புஷ்டி உள்ளதும், ப்ராணக்குறைவுள்ளதுமாக வகுக்கப்பட்டிருக்கிறது. வருஷத்தின் விபாகங்களாகிய உத்தராயண தக்ஷிணாயனங்களும், மாதத்தின் விபாகங்களாகிய சுக்ல பக்ஷ கிருஷ்ணபக்ஷங்களும், தினத்தின் விபாகங்களாகிய பகல் இரவுகளும், முறையே ப்ராண புஷ்டியுள்ளதும் ப்ராணக்குறைவுள்ளதும் ஆவன. ப்ராணபுஷ்டியிருக்கும் வேளைகளில் புணருதல் ப்ராணனையே இழக்கும் தன்மையது

என்று சொல்லப்பட்டிருக்கிறது. [1]प्राणं वा एते प्रस्कन्दन्ति ये दिवा रत्या संयुज्यन्ते' என்ற சுருதி வாக்கியத்தின் கருத்து இதுவே.

அஸுர குணத்துடன் ஸந்ததி இல்லாதிருக்க வேண்டுமாயின், இந்த ரகஸியத்தை அறிந்துகொள்ளுதல் அவசியம் இது முக்கியமான விஷயமாதலால் விவரித்து எழுதப்பட்டது.

ओं हतदानवायै नमः ।

ஓம் ஹததாநவாயை நம: (111)

हत्यादिपापशमनी हरिदश्वादिसेविता ।

हस्तिकुम्भोत्तुङ्गकुचा हस्तिकृत्तिप्रियाङ्गना ॥ २२ ॥

ஹத்யாதிபாபஶமநீ ஹரிதஶ்வாதிஸேவிதா ।

ஹஸ்திகும்போத்துங்ககுசா ஹஸ்திக்ருத்தி ப்ரியாங்கநா ॥

हत्यादिपापशमनी ।

**ஹத்யாதிபாபஶமநீ** 112

ப்ரம்மஹத்தி முதலிய தோஷங்களைப் போக்கடிப்பவள்.

விவரணம் :— **हरिर्हरति पापानि** என்பது ஸ்மிருதி வசனம். விஷ்ணு, பாபங்களைப் போக்கடிக்கிறுர் என்பது பொருள். ஆகையாலேதான் மஹாவிஷ்ணுவுடைய நாமங்களாகிய 'ராம' 'கிருஷ்ண' 'முகுந்தா' என்ற நாமாக்களை ஸங்கீர்த்தனம் செய்கிருர்கள். எல்லா தேவதைகளும் ஒரே பராசக்தியின் ஸ்வரூபமானதால் இது பராசக்திக்கும் பொருந்தும். பராசக்தியினிடம் பக்தி செய்பவர்கள் பாப காரியங்களைச் செய்ய நடுங்குவார்கள் என்ற பொருளும் கிடைக்கிறது.

ओं हत्यादिपापशमन्यै नमः ।

ஓம் ஹத்யாதிபாபஶமந்யை நம: (112)

---

1. ப்ரச்னோபநிஷத் 1-13.

ओं हरिदश्वादिसेविता ।

**ஹரிதஶ்வாதிஸேவிதா** 113

இந்திரன் முதலிய திக்பாலகர்களினுல் ஸேவிக்கப் படுபவள்.

விவரணம் :— 'ஹரித்' என்ருல் மரகதம்போன்ற பச்சை நிறம். 'அசுவம்' என்ருல் குதிரை. பச்சைக் குதிரையை உடையவன் இந்திரன். இந்திரன் கிழக்குத் திசைக்கு அதிபதி. வருணன் மேற்கு திசைக்கு நான்கு முக்கிய திசைகளும் வடமேற்கு என்பதுபோன்ற நான்கு இடைத்திசைகளும் உள்ளன. இவ்வெட்டுத் திசைகளுக்கும் எட்டு திக்பாலகர்கள் உண்டு. அவர்கள் வேலையாட்களாக நின்றுகொண்டு பராசக்தியின் கட்டளைகளை எதிர் பார்க்கிருர்கள் என்பது கருத்து.

ओं हरिदश्वादिसेवितायै नमः ।

ஓம் ஹரிதஶ்வாதி ஸேவிதாயை நம: (113)

हस्तिकुम्भोत्तुङ्गकुचा ।

**ஹஸ்திகும்போத்துங்ககுசா** 114

யானையின் தலையிலுள்ள இரண்டு பருத்த உருண்டை வடிவங்களைப்போலுள்ள ஸ்தனங்களையுடையவள்.

ओं हस्तिकुम्भोत्तुङ्गकुचायै नमः ।

ஓம் ஹஸ்திகும்போத்துங்ககுசாயை நம: (114)

हस्तिकृत्तिप्रियाङ्गना ।

**ஹஸ்திக்ருத்திப்ரியாங்கநா** 115

யானைத்தோலையுடைய பரமசிவனுடைய காந்தை.

ओं हस्तिकृत्तिप्रियाङ्गनायै नमः ।

ஓம் ஹஸ்திக்ருத்திப்ரியாங்கநாயை நம: (115)

हरिद्राकुङ्कुमादिग्धा हर्यश्वाद्यमरार्चिता ।

हरिकेशसखी हादिविद्या हालामदालसा ॥ २३ ॥

ஹரித்ர குங்குமாதிக்தா ஹர்யஶ்வாத்யமரார்சிதா ।
ஹரிகேஶஸகீ ஹாதிவித்யா ஹாலாமதாலஸா ॥

हरिद्राकुङ्कुमादिग्धा ।

**ஹரித்ராகுங்குமாதிக்தா** 116

மஞ்சள் குங்குமம் இவற்ருல் பூசப்பட்ட மேனியை உடையவள்.

விவரணம் :— மஞ்சள், குங்குமம் என்ற பதங்களினுல் கஸ்தூரி பத்ரம் முதலியவையும் குறிக்கப்பட்டுள்ளன. ஸுமங்கலிகளுக்கு மஞ்சள், குங்குமம் இவை முக்கியமானது.

ओं हरिद्राकुङ्कुमादिग्धायै नमः ।

ஓம் ஹரித்ராகுங்குமாதிக்தாயை நம: (116)

हर्यश्वाद्यमरार्चिता ।

**ஹர்யஶ்வாத்யமரார்சிதா** 117

இந்திராதி தேவர்களினுல் பூஜிக்கப்பட்டவள்.

விவரணம் :— பச்சைக் குதிரையையுடைய இந்திரனும் மற்ற தேவர்களும் தத்தம் அலுவல்களைச் செய்துகொண்டு ஜகத்தை ரக்ஷிக்கிருர்கள். அவர்களுடைய அலுவல்களை வகுத்தது பராசக்தியே. தேவர்கள் அவளுடைய வேலையாட்களாக இருக்கின்றனர்.

[1] भीषाऽस्मात् वातः पवते। भीषोदेति सूर्यः ।
(பரமேசுவரனுக்குப் பயந்து காற்று (வாயுதேவன்) அடிக்கிறது. சூரியன் உதிக்கிருன்) என்பது சுருதி.

ओं हर्यश्वाद्यमरार्चितायै नमः ।

ஓம் ஹர்யஶ்வாத்யமரார்சிதாயை நம: (117)

हरिकेशसखी ।

**ஹரிகேஶஸகீ** 118

(i) பொன்னிறமான ஜடைகளையுடைய பரமசிவனுக்கு உயிர்த்தோழியாக இருப்பவள்.

---

1. தைத்திரீய உபநிஷத் ஆனந்தவல்லி 8.

(ii) மஹாவிஷ்ணுவின் நிறம்போல் கருப்பு நிறமுள்ள கேசங்களுடன்கூடிய, ஸுந்தரவடிவமும் எப்பொழுதும் யௌவனப்பருவமுமுள்ள காமேசுவரருடைய பிராணநாயகி.

ओं हरिकेशसख्यै नमः ।
ஓம் ஹரிகேஶஸக்யை நம: (118)

हादिविद्या ।
**ஹாதிவித்யா** 119

(லோபா முத்ரையால் உபாஸிக்கப்பட்ட) ஹாதி வித்யையாக விளங்குபவள்.

குறிப்பு :— ஹாதி வித்யையைப்பற்றி முன்னுரையில் பார்க்கவும்.

ओं हादिविद्यायै नमः ।
ஓம் ஹாதிவித்யாயை நம: (119)

हालामदालसा ।
**ஹாலாமதாலஸா** 120

'வாருணீ' என்ற வடிவமாயிருந்து ஆனந்தப் பெருக்கினால் சற்றுச் சிவந்த கடைக்கண்ணும், மயிர்ச்சிலிர்ப்பும் உடையவள்.

விவரணம் :— தேவர்களும் அசுரர்களும் திருப்பாற்கடலைக் கடைந்தபொழுது வாருணீதேவி கன்னிகையாய்க் கமலக் கண்களை உடையவளாய் வெளிவந்தாள் என்று ஸ்ரீமத் பாகவதத்தில் சொல்லப்படுகிறது. இவளுக்கு முன் லக்ஷ்மி வெளிவந்தாள். அவளை அசுரர்கள் அடையமுயன்று பயனற்றுப்போனதால், வாருணீ என்பவளைக் கிரஹித்துக் கொண்டார்கள். இதை விஷ்ணுவும் அனுமதித்தார்.

'வாருணீ' என்பதற்கு 'ஸுரை' அல்லது 'மது' என்றும் பொருள் கூறப்படுகிறது. இந்தப் பொருளைச் சார்ந்து "வாருணீயென்ற மதுமயக்கத்தினால் ஆனந்தத்தில் ஆழ்ந்து மெய்ம்மறந்திருப்பவள்" என்று இந்த

நாமாவளிக்கு அர்த்தம் பண்ணுவது சரியன்று. ஏனெனில் எந்தப் பதத்திற்கும் பிரக்ருதத் (context)தையொட்டிப் பொருள்படுத்தவேண்டும். 'ஸைந்தவம்' என்ற பதத்திற்குக் 'குதிரை', 'உப்பு' என்ற இரண்டு அர்த்தங்கள் உள்ளன. ஆனால் ஒருவன் சாப்பிடும்பொழுது 'ஸைந்தவம் ஆனய' (ஸைந்தவம் கொண்டு வா) என்றால் உப்பைக் கொண்டுவரவேண்டுமே தவிர குதிரையைக் கொண்டு நிறுத்தக்கூடாது என்பதுபோல், பராசக்தி ஸ்வயம்பிரகாசமாய், ஆனந்தமாய் இருக்கும்பொழுது, அவள் ஸுராபானத்திலிருந்து விளையும் மோஹானந்தத்தை அடைகிறாளென்று நினைப்பது மிகவும் விருத்தம். ஸத்துவகுணமற்ற அசுரர்கள் மனத்தில் வியாமோஹத்தை உண்டுபண்ணிய 'வாருணீ' என்ற மாயாசக்தியாக விளங்குபவள் என்று பொருள் கூறுவது உசிதமேயாகும்.

ओं हालामदालसायै नमः ।
ஓம் ஹாலாமதாலஸாயை நம: (120)

सकाररूपा सर्वज्ञा सर्वेशी सर्वमङ्गला ।
सर्वकर्त्री सर्वभर्त्री सर्वहन्त्री सनातना ॥ २४ ॥

ஸகார ரூபா ஸர்வக்ஞா ஸர்வேஶீ ஸர்வ மங்களா।
ஸர்வ கர்த்ரீ ஸர்வ பர்த்ரீ ஸர்வ ஹந்த்ரீ ஸநாதநா ॥

**सकाररूपा ।**

**ஸகாரரூபா** 121

'ஸ' கார வடிவமாயிருப்பவள்.

விவரணம் :— முதல் 100 மந்திரங்கள் சேர்ந்தது முதல் தொகுதி. இரண்டாம் தொகுதியில் முதல் வடிவம் 'ஹ' காரம். இரண்டாம் வடிவம் 'ஸ' காரம். இது காதி வித்யையில் அமைந்து பராசக்தியை ஞாபகப்படுத்துவதாக நிற்கிறது.

ओं सकाररूपायै नमः
ஓம் ஸகாரரூபாயை நம: (121)

सर्वज्ञा ।

**ஸர்வக்ஞா** 122

சிறிதளவும் குறைவற்று எக்காலத்திலும் ப்ரகாசிக்கும் ஞானவடிவமாக இருந்து அனைத்தையும் அறிபவள். 'यः सर्वज्ञः सर्ववित्' என்பது முண்டக ச்ருதி.

ओं सर्वज्ञायै नमः ।

ஓம் ஸர்வக்ஞாயை நம: (122)

सर्वेशी ।

**ஸர்வேஶீ** 123

அனைத்திலும் உட்சக்தியாக இருந்துகொண்டு செயல்களைத் தூண்டுபவள்.

ओं सर्वेश्यै नमः ।

ஓம் ஸர்வேஶ்யை நம: (123)

सर्वमङ्गला ।

**ஸர்வமங்களா** 124

(i) எல்லா விதத்திலும் பரமானந்த ஸ்வரூபிணியாக விளங்குபவள்.

விவரணம்:— சுத்த சைதன்யமாக இருக்கும் வஸ்துவில் பரமானந்தத்தைத் தவிர வேறு என்ன இருக்கக் கூடும்?

(ii) எல்லோருக்கும் மங்களம் (க்ஷேமம், நன்மை முதலியன) யாரிடத்திலிருந்து உண்டாகின்றதோ, அவள்.

விவரணம்:— பராசக்தியைக் குறித்துப் பக்தி விலாசங்களான, த்யானம், நாமஸங்கீர்த்தனம் பூஜை, நமஸ்காரம், அர்ச்சனை முதலியவற்றைச் சிரத்தையுடன் செய்பவர்கள் மூடர்களாக இருப்பினும், அவர்களுக்கும் பராசக்தி க்ஷேமத்தைக் கொடுக்கிறாள் எனில் விவேகிகளுக்குப் பதின்மடங்கு க்ஷேமத்தைத் தருகிறாள் என்று சொல்லவும் வேண்டுமா?

(iii) ஆத்ம ரூபமாய் விளங்கும் ஸுகம் யாரைச் சார்ந்திருக்கிறதோ அவள்.

விவரணம் :— நல்ல கானத்தைக் கேட்கும்பொழுது 'ஹா என்ன ஆனந்தம்! என்ன சௌக்கியம்!' என்கிறான். ஆழ்ந்த நித்திரையிலிருந்து விழித்தவன், 'எவ்வளவு ஸுகமாய்த் தூங்கினேன்!' என்கிறான். நித்திரையில் இந்திரியங்கள், மனது முதலியன எல்லாம் ஜீவாத்மாவில் ஒடுங்கிவிடுகின்றன. அப்பொழுது ஸுகாநுபவம் ஆத்மாவைச் சார்ந்திருக்கிறது. கானத்தைக் கேட்கும் பொழுது விளையும் ஆனந்தமுங்கூட ஆத்மாவையே சார்ந்துள்ளது. இந்திரியங்கள் வாகனங்களேயாவன ஜீவாத்மா என்பது பரமாத்மா அல்லது பராசக்தியின் நிழல். ஒரு பொருள் இல்லாவிட்டால் அதன் நிழல் எப்படிக் கிடையாதோ, அதைப்போல் பரமாத்மா இல்லாவிட்டால் ஜீவாத்மா கிடையாது. ஆகையால் ஆத்ம ஸுகம் பரமாத்மாவையே அடிப்படையாகச் சார்ந்துள்ளது

(iv) பரமசிவனுக்கு ஸுகாநுபவம் யாரிடமிருந்து விளைகிறதோ அவள்.

விவரணம் :— 'ஸர்வம்' என்ற பதத்திற்கு எல்லாவற்றிற்கும் காரணமாயிருக்கும் பரமசிவன் என்று அர்த்தம். மங்களம் என்றால் ஸுகாநுபவம். பரமசிவன் 'ஜகத்' என்ற லீலையை ஸாக்ஷியாகப் பார்த்துக்கொண்டு அநுபவிக்கிறான். ஜகத்தின் தோற்றத்திற்கு பராசக்தியே காரணம் என்று பன்முறை முன்பு கூறப்பட்டுள்ளது. ஆகையால் பரமசிவனுடைய ஸுகாநுபவம் பராசக்தியிடமிருந்து விளைகிறது என்பது உசிதமே.

सच्चिन्मयः शिवः साक्षात्तस्यानन्दमयी शिवा ।

என்ற வசனத்தைக் கவனிக்கலாம்.

(v) எல்லா பிராணிகளுக்கும் மங்களத்திற்குக் காரணமான ஸ்திரீகள் எவளைச் சேர்ந்தவர்களோ அந்தப் பராசக்தி.

விவரணம் :— எல்லாப் பிராணிகளிடையிலும் ஸ்திரீகளே மங்கள மூர்த்திகள். மங்களத்தை உண்டு பண்ணுவதற்குக் காரணமாகவும் இருக்கிறார்கள். இதற்குக் காரணம் ஸச்சிதானந்தஸ்வரூபமான பராசக்தியின் அம்சமாக இருப்பதுதான் 'स्त्रियस्समस्ताः तव देवि भेदाः' என்பது தேவீமாஹாத்ம்ய வசனம்.

"एतस्यैवानन्दस्य अन्यानि भूतानि मात्रां उपजीवन्ति"

(ஆனந்தமயமாகிய பரமாத்மாவின் ஓர் அம்சத்தை அணுகி ஜகத் வஸ்துக்கள் அனைத்தும் ஜீவிக்கின்றன) என்பது சுருதி.

अशुभानि निराचष्टे तनोति शुभसंततिम् ।
स्मृतिमात्रेण यत्पुंसां ब्रह्म तन्मङ्गलं विदुः ॥

"மானவர்களுக்கு நினைத்தமாத்திரத்தில் கஷ்டங்களைத் தவிர்த்து மங்களப்பெருக்கை அளிப்பதால் ப்ரஹ்மம் மங்களரூபம்".

अतिकल्याणरूपत्वात् नित्यकल्याणसंश्रयात् ।
स्मर्तॄणां वरदत्वाच्च ब्रह्म तन्मङ्गलं विदुः ॥

"சோபன குணங்களின் ரூபமாக நின்று, எல்லா மங்களங்களுக்கும் இருப்பிடமாயும், தன்னை உபாஸிப்பவர்களுக்கு வரன்களை அளிப்பதாகவும் இருக்கும் பிரம்மத்தை மங்களம் என்றே சான்றோர் அறிகின்றனர்".

ஆகையால் பராசக்தியே ஸர்வமங்களரூபிணீ.

ओं सर्वमङ्गलायै नमः ।
ஓம் ஸர்வமங்களாயை நம: (124)

सर्वकर्त्री ।
**ஸர்வகர்த்ரீ** 125

ஜகத் அனைத்தையும் தனது மாயாசக்தியினால் தோன்றும்படி செய்பவள்.

ओं सर्वकर्त्र्यै नमः ।
ஓம் ஸர்வகர்த்ர்யை நம: (125)

सर्वभर्त्री ।

**ஸர்வபர்த்ரீ** 126

ஜகத் அனைத்தையும் தனது சக்தியினால் தாங்கி நிற்பவள்.

ओं सर्वभर्त्र्यै नमः ।

ஓம் ஸர்வபர்த்ர்யை நமஃ (126)

सर्वहन्त्री ।

**ஸர்வஹந்த்ரீ** 127

ஜகத்தனைத்தையும் ஸம்ஹரிப்பவள்.

விவரணம் :— 125, 126, 127 மந்திரங்களின் கருத்து முன்னுரையில் 4-வது பாகத்தில் "यतो वा इमानि ......" என்ற சுருதி வாக்கியத்துடன் விவரிக்கப்பட்டிருக்கிறது. பரமாத்மாவின் தடஸ்த லக்ஷணம் இம்மூன்று மந்திரங்களினால் விளங்குகிறது. மந்திரம் 24-னுடைய நான்காம் அர்த்தத்தில் விவரணத்தைப் பார்க்கவும்.

ओं सर्वहन्त्र्यै नमः ।

ஓம் ஸர்வஹந்த்ர்யை நமஃ (127)

सनातना ।

**ஸநாதநா** 128

என்றும் நிலைத்திருக்கும் தன்மை வாய்ந்தவள்.

விவரணம் :— अजो नित्यः शाश्वतोऽयं पुराणः (2-6)

(பிறப்பற்று என்றும் நிலைத்து, புராணமாயுள்ளது.) என்று கடோபநிஷத் கூறுகிறது.

'புராணம்' என்பதற்கு "पुरापि नवं" அதாவது அநாதியாகப் பழைமை பொருந்தியதாயினும் புதிதாகத் தோன்றுவது என்பது பொருள்.

ओं सनातनायै नमः ।

ஓம் ஸநாதநாயை நமஃ (128)

सर्वानवद्या सर्वाङ्गसुन्दरी सर्वसाक्षिणी ।

सर्वात्मिका सर्वसौख्यदात्री सर्वविमोहिनी ॥ २५ ॥

ஸர்வாநவத்யா ஸர்வாங்க ஸுந்தரீ ஸர்வஸாக்ஷிணீ ।
ஸர்வாத்மிகா ஸர்வ ஸௌக்ய தாத்ரீ ஸர்வ
விமோஹிநீ ॥

सर्वानवद्या ।

**ஸர்வாநவத்யா** 129

(i) ஞானம் ஐசுவர்யம் முதலான எல்லா குணங்களோடும் கூடியிருப்பதால் ஒருவித தோஷமுமில்லாதவள். ஸச்சிதானந்த ஸ்வரூபி.

(ii) எல்லோருடைய விருப்பங்களையும் நிறைவேற்றும் சக்தி வாய்ந்தவள். ஆதலால் எல்லோராலும் போற்றப் படுபவள்.

விவரணம்: — ‘அவத்யா’ என்றால் வித்யை யின்மை, அஞ்ஞானம், மூடத்தன்மை இவைகளுடன் கூடியது. ‘அனவத்யா’ என்றால் இவை இல்லாதிருத்தல். இதனின்று முதல் அர்த்தம் கிடைக்கிறது.

‘அனவத்யா’ என்றால் ‘குற்றம் குறைவற்றது’ என்றும் பொருள். இவ்விடத்தில் பூர்ணசக்தி வாய்ந்திருக்கும் தன்மையென்று பொருள். இதிலிருந்து இரண்டாவது பொருள் கிடைக்கிறது.

ओं सर्वानवद्यायै नमः ।

ஓம் ஸர்வாநவத்யாயை நம: (129)

सर्वाङ्गसुन्दरी ।

**ஸர்வாங்க ஸுந்தரீ** 130

(i) யாருடைய அவயவங்களெல்லாம் கூடுதல் குறைவு இல்லாமல் ஸாமுத்ரிகா சாஸ்திரத்திற்கு ஒவ்வ லக்ஷணங்களுடன் அமைந்து அதனால் அதிக லாவண்யத்துடன் விளங்குகின்றனவோ அவள்.

(ii) எல்லோருடைய சரீரங்களிலும் ஆத்மாவென்ற ப்ரம்ம ரூபமாக நின்று, அழகுவாய்ந்த பொருளை எப்படி ஒருவன் பிரியாதவண்ணம் தன்னிடமே வைத்திருக்க ஆசைப்படுவானோ அதைப்போன்று ஆசைக்கு உரித்தான வஸ்துவாய் விளங்குபவள்.

விவரணம் :— ஒருவனும் ஜீவனை இழக்க விரும்ப மாட்டான். அத்தகைய ஆத்மாவாக பராசக்தி விளங்குகிறாள்.

ओं सर्वाङ्गसुन्दर्यै नमः ।

ஓம் ஸர்வாங்கஸுந்தர்யை நம: (130)

सर्वसाक्षिणी ।

**ஸர்வஸாக்ஷிணீ** 131

(i) அறிவுக்கு அறிவாக விளங்குபவள்.

விவரணம் :— வஸ்துக்கள் ஒருவனால் அறியப்படுவது அவனுடைய உள்ளறிவின் சக்தியினால். இவ்வுள்ளறிவுக்கு இவ்விதச் சக்தியைக் கொடுப்பது பராசக்தி எனப்பொருள். 'तस्य भासा सर्वमिदं विभाति' (கடோபநிஷத் 5-15) ப்ரம்மத்தின் ஸ்வயம்ப்ரகாசத்தினால் அனைத்தும் ப்ரகாசிக்கின்றன.

(ii) எல்லாவற்றையும் கண்கூடாகப் பார்ப்பவள்.

விவரணம் :— கடவுளின் பார்வையினின்று ஒன்றையும் மறைக்கமுடியாது ஆகையால் பாபகாரியத்தை நினைக்கவும் கூடாது, செய்யவும் கூடாது. செய்தால் அதற்கு ப்ரதிபலன் கிடைத்தே தீரும்.

ओं सर्वसाक्षिण्यै नमः ।

ஓம் ஸர்வஸாக்ஷிண்யை நம: (131)

सर्वात्मिका ।

**ஸர்வாத்மிகா** 132

எல்லோரிடத்திலும் ஆத்மரூபமாக விளங்குபவள்.

விவரணம் :— 'ஆத்மா' என்ற பதம் பின்வரும் சுலோகத்தால் விளக்கப்பட்டிருக்கிறது :—

यच्चाप्नोति यदादत्ते यच्चात्ति विषयानिह ।
यच्चास्य संततो भावः तस्मादात्मेति गीयते ॥

'எந்த வஸ்து, விஷயங்களை அடைந்து, அவைகளைத் தன்வசம் இழுத்து அவைகளை அநுபவிக்கிறதோ,

எந்த வஸ்து ஒருவனுடைய இடைவிடாது நிற்கும் தன்மை வாய்ந்ததோ அதுவே ஆத்மா எனப்படும்.'' அறிந்து அநுபவிக்கும் தன்மையுள்ளதினால் ஆத்மாவுக்கு விஷயங்களுடன் தொடர்பு உண்டாகிறது. மேலும் பிறக்கும் முன்னும், ஜீவித்திருக்கும் தசையில், நித்திரை, ஸ்வப்னம், விழிப்பு என்ற மூன்று அவஸ்தைகளிலும், இறந்தபின்னும், ஆத்மா ஒரே வஸ்துவாக இருந்துகொண்டு விளங்குகிறது என்பது கருத்து.

மேலும் பராசக்தி எல்லோரிடத்திலும் ஒரே ஆத்மாவாக விளங்குகிறாள் என்பதால், ஜீவாத்மாக்கள் அனைத்தும் ஒன்றேயென்றும், உபாதிபேதங்களினால் வேற்றுமைப்பட்டவைகளாகத் தோன்றுகின்றன என்பதும் தெளிவாகிறது.

ओं सर्वात्मिकायै नमः ।

ஓம் ஸர்வாத்மிகாயை நம: (132)

सर्वसौख्यदात्री ।

**ஸர்வஸௌக்ய தாத்ரீ** 133

(i) எல்லாவித ஸுகங்களையும் அளிப்பவள்.

விவரணம் :— ஸுகத்தின் அளவை நான்கு படிகளாக வகுத்திருக்கிறார்கள்.

1. இஷ்டமான வஸ்துவைப் பார்ப்பதனின்று விளையும் ஸுகத்திற்குப் 'பிரியம்' என்று பெயர்.

2. அதை அடைந்தவுடன் உண்டாகும் ஸுகத்தை 'மோதம்' என்பர்.

3. அதை அநுபவித்தலால் உண்டாகும் ஸுகத்தைப் 'பிரமோதம்' என்பர்.

4. பிரிய வஸ்துக்கள் அனைத்தையும் பார்த்து அடைந்து அநுபவிக்கும் சக்தியிலிருந்து 'ஆனந்தம்' உண்டாகிறது. 'அவாப்த ஸமஸ்தகாமன்' ஆக ஆகி விடுகிறான்.

ஜீவனாக இருக்கும் போக்தாவுக்குப் பராசக்தி மேற்கூறிய ஸுகங்களையளிக்கிறாள்.

(ii) தியானிப்பதாலோ, வேறு எவ்வித ஈடுபாட்டி னாலோ இன்பத்தையளிப்பவள்.

விவரணம் :— தியானம் முதலிய ஈடுபாடுகள் பக்தியின் லக்ஷணங்கள் ஆகும். பக்தியினின்று விளையும் ஸுகத்தை அனைவரும் சிற்சில சமயங்களில் அநுபவிக்கிறோம். இந்த ஸுகத்தைப் பராசக்தி யளிக்கிறாள் என்பது மற்றொரு பொருள்.

(iii) ப்ரஹ்மம் முதல் ஸ்தம்பம் புல் பூண்டு வரை யிலும் உள்ள எல்லாவற்றிற்கும் அவரவர்கள் செய்திருக்கும் கர்மா, உபாஸனை இவைகளுக்குத் தக்கவாறு ஞான, ஐச் வரியங்களுடன் அவற்றினின்று விளையும் ஸுகாநுபவத்தை யும் அளிப்பவள் 'एष ह्येवानन्दयाति' 'இதுவே (பரமாத்மாவே) ஆனந்தத்தைத் தருவது'. (தைத்திரீய உபநிஷத்)

ॐ सर्वसौख्यदात्र्यै नमः ।

ஓம் ஸர்வஸௌக்யதாத்ர்யை நமः 133

सर्वविमोहिनी ।

**ஸர்வவிமோஹிநீ** 134

எல்லோருக்கும், உண்மையை மறைத்து விபரீதமான அறிவை உண்டுபண்ணுபவள்.

விவரணம் :— கயிற்றைக் கண்டால் பாம்பு என்ற அறிவு உண்டாவதுபோலவும், மணல் வெளியில் மத்தி யான்ன வெயிலில் நீர்ப்பரப்புத் தோன்றுவதுபோலவும், அனைவருக்கும் உடல், இந்திரியங்கள் முதலியவைகள் உண்மை என்றும், அந்தர்யாமியாக இருக்கும் ஆத்மா இல்லாததுபோலவும் தோன்றுகிறது. இது மாயையின் ஆவரண சக்தியின் விளைவு. இதைப்பற்றி விஸ்தரித்து முன்னுரையில் எழுதப்பட்டிருக்கிறது. பராசக்தி இவ்வித மாயாசக்தியாக விளங்குகிறாள். மாயை பராசக்தியின் ஸ்வரூபமாகிய ஸத், சித்து என்ற லக்ஷணங்களையே ஆதார மாகக்கொண்டிருக்கிறது; எப்படிச் சித்திரத்தைத் தாங்கி நிற்கும் திரை இல்லாவிடில் சித்திரம் கலைந்துவிடுமோ அதுபோல,

மாயையை வென்றவர்கள் பலர் இருப்பினும், 'ஸர்வ' என்ற பதம், உபசாரமாகக் கூறப்பட்டது; அதை ஜயிப்பது அரிது என்று உணர்த்துவதற்காக.

अज्ञानेनावृतं ज्ञानं तेन मुह्यन्ति जन्तवः ।

(ஞானம் அஞ்ஞானத்தினால் மறைக்கப்பட்டிருப்பதால் ஜந்துக்கள் ஏமாறிவிடுகிறார்கள்.)—கீதை 5-15.

[1] अनृतेन हि प्रत्यूढाः (உண்மையை அறிவதனின்றும்) பொய்யினால் தடை செய்யப்பட்டிருக்கிறார்கள்.

[2] "ज्ञानिनामपि चेतांसि ......" என்ற வாக்கியத்தை முன்னுரையில் பார்த்துக்கொள்ளவும்.

ओं सर्वविमोहिन्यै नमः ।

ஓம் ஸர்வவிமோஹின்யை நமः (134)

सर्वाधारा सर्वगता सर्वावगुणवर्जिता ।

सर्वारुणा सर्वमाता सर्वभूषणभूषिता ॥ २६ ॥

ஸர்வாதாரா ஸர்வகதா ஸர்வாவகுண வர்ஜிதா ।

ஸர்வாருணா ஸர்வமாதா ஸர்வபூஷண பூஷிதா ॥

सर्वाधारा ।

ஸர்வாதாரா 135

(i) எல்லாவற்றிற்கும் ஆதாரமாக இருப்பவள். 'ஜகத்' யாரை ஆதாரமாகக்கொண்டு விளங்குகிறதோ அவள்.

விவரணம் :— ஆதியந்தமற்று என்றும் நிலைத்திருக்கும் 'ஸத்' இல்லாதாயின், அநித்யமாயிருக்கும் ஜகத்திற்கு ஆதாரம் இல்லாமற்போய்விடும். சுத்த சைதன்யம் என்ற பேரறிவு இல்லாதாயின் நமக்கு சிற்றறிவு உண்டாகாது. பேரின்பம் ஒன்று இல்லாதாயின் நமக்கு சிற்றின்பங்கள் உண்டாகா; கடல் இல்லாதாயின் அலைகள் எப்படி உண்டாகாதோ, ஆகாயம் இல்லாதிருப்பின் உஷ்ணம், வெளிச்சம், மின் அலைகள் இவைகளுக்கு வியாப்தி எப்படி

1. சாந்தோக்யம் 8-3 2. தேவீமாஹாத்மியம்.

ஏற்படாதோ அதுபோல். 'ब्रह्म पुच्छं प्रतिष्ठा' 'பிரம்மமே ஆதாரஸ்தானமாயிருக்கிறது' (தைத்திரீயம் ஆனந்தவல்லி)

(ii) யாரை உபாஸிக்க எல்லாப் பிராணிகளிடத்திலும் ஹ்ருதயம் என்ற ஆதாரஸ்தானம் அமைந்திருக்கிறதோ அந்தப் பராசக்தி.

விவரணம் :— ப்ரம்மத்தைக் கண்கூடாகப் பார்க்க வேண்டுமானல், தத்தம் இருதயத்தில் காண்பது எளிது. மற்ற இடங்களில் காண்பது மிகவும் அரிது.

[1]'हृदयं तद्विजानीयात् विश्वस्यायतनं महत् ।

" இருதயம் ப்ரம்மத்தினுடைய உயர்ந்த இருப்பிடம் "

ओं सर्वाधारायै नमः ।

ஓம் ஸர்வாதாராயை நம: (135)

सर्वगता ।

ஸர்வகதா 136

எங்கும் வ்யாபித்திருப்பவள்.

விவரணம் :—[1] " अन्तर्बहिश्च तत्सर्वं व्याप्य नारायणः स्थितः " " அனைத்திலும் உள்ளும்புறமும் நாராயணன் வ்யாபித்திருக்கிறன். (நாராயணஉபநிஷத்) प्राणो विराट् " ப்ராணசக்தி எங்கும் வ்யாபித்திருக்கிறது " இப்படியில்லாதிருப்பின், கோடிக்கணக்கான ஜீவராசிகள் உண்டாவதும் அழிவதும் ஏற்படாது.

" अनेन जीवेन आत्मनानुप्रविश्य " (சாந்தோக்யம் 6–3) (தன்னுடைய ஜீவாத்மசக்தியினல் அனைத்திலும் உட்புகுந்து.) அவ்யக்தத்திலிருந்து 'ஜகத்' உண்டானவிதம் முன்னுரையில் விளக்கப்பட்டிருக்கிறது. அதில் ஜீவனைப் பற்றிய விவரத்தைக் கவனிக்கவும்.

ओं सर्वगतायै नमः ।

ஓம் ஸர்வகதாயை நம: (136)

सर्वावगुणवर्जिता ।

ஸர்வாவகுணவர்ஜிதா 137

---

1. நாராயண உபநிஷத்.

தாழ்ந்த குணங்கள் அனைத்துமில்லாதவள்.

விவரணம்:—பரமாத்மாவின் ப்ரகிருதியினின்றும் ஜகத் தோன்றுகிறதென்றும், ப்ரகிருதி ஸத்வ, ரஜஸ், தமோ குணங்களின் ஸ்வரூபம் என்றும், இந்தக் குணங்கள் ஆத்மாவில் ஆரோபணம் செய்யப்படுவதால் குன்றிய அவஸ்தையாகிய ஜீவாத்ம அநுபவம் உண்டாகிறதென்றும் முன்னுரையிலிருந்து தெரியும். இது ஜகத்தின் பொதுத் தத்வம், 'ஸமஷ்டி' தத்வம். ஒவ்வொரு ஜீவாத்மாவின் அவஸ்தை, சித்த குணங்களாகிய காமம், க்ரோதம் முதலியவைகளால் பாதிக்கப்பட்டது இது 'வ்யஷ்டி'யின் தன்மை. அதாவது, ஒவ்வொரு ஜீவனின் ப்ரத்யேக தத்வம். இந்தக் குணங்களெல்லாம் பரமாத்ம ஸ்வரூபத்தை மறைத்துத் தாழ்மையைத் தருவதால் அவைகள் "அவகுணா:" அதாவது அவமானப்படுத்தும் குணங்கள் என்று வர்ணிக்கப்பட்டன. இக்குணங்கள் எல்லாம் அந்தர்யாமியாயும், ஸர்வவ்யாபியாயுமான பரமாத்மாவை உண்மையில் பாதிப்பதேயில்லை. அனைத்தும் அத்யாஸம், அல்லது ஆரோபணம். அஞ்ஞானம் அல்லது மாயையின் விளைவு. எப்படிப் பானையில் உள்ள ஆகாசம் பானையினால் பாதிக்கப்படாதோ, உறையிலுள்ள வாள், உறையினால் பாதிக்கப்படாதோ அதுவே போல் பராசக்தி இவ்வித அவகுணங்களினால் பாதிக்கப் படுவதில்லை. நிர்மலமாகவும், நிர்க்குணமாகவும் இருக்கிறாள்.

[1] सूर्यो यथा सर्वलोकस्य चक्षुः न लिप्यते चाक्षुषैर्बाह्यदोषैः ।
एकस्तथा सर्वभूतान्तरात्मा न लिप्यते लोकदुःखेन बाह्यः ॥

"எப்படி உலகம் அனைத்திற்கும் கண்ணாக விளங்கும் சூரியன் கண்ணின் ரோகங்களாகிய காமாலை முதலியவற்றால் பாதிக்கப்படுவதில்லையோ அதைப்போல் ஒன்றாகவும், எல்லாவற்றிலும் அந்தர்யாமியாகவும், ஸர்வவியாபியாகவும் விளங்கும் பரமாத்மா பூதகணங்களின் வேற்றுமைகளினால் பாதிக்கப்படுவதில்லை"

1. கடோபநிஷத் 5-11.

ओं सर्वावगुणवर्जितायै नमः ।

ஓம் ஸர்வாவகுணவர்ஜிதாயை நம: (137)

सर्वारुणा ।

**ஸர்வாருணா** 138

அங்கங்கள் அனைத்திலும் சிறிது சிவப்பு நிறம் பொருந்தியவள்.

விவரணம் :— காலையில் அருணோதய காலத்தில் கிழக்குத் திசையில் சிறிது சிவப்புடன்கூடிய பிரகாசத்தைப் பார்க்கிறோம். பராசக்தி அவ்வித நிறம் பொருந்தியவள். அதாவது மனோக்ஞமான நிறம் வாய்ந்தவள்.

ओं सर्वारुणायै नमः ।

ஓம் ஸர்வாருணாயை நம: (138)

सर्वमाता ।

**ஸர்வமாதா** 139

(i) ஜகத்திற்குத் தாயாராக இருப்பவள்.

விவரணம் :— '[1] यतो वा इमानि भूतानि जायन्ते ' (யாரிடத்திலிருந்து இந்தப் பிரபஞ்சம் பிறந்ததோ) என்ற சுருதி வாக்கியத்திலிருந்து இந்தப் பொருள் கிடைக்கிறது.

(ii) செய்யப்படும் பொருளிலிருந்து செய்பவனை எப்படி ஊகிக்க முடிகிறதோ, அதைப்போல் ஜகத்தைக் கொண்டு அதனின்றும் வேறுபடாத பொருளாக எந்தப் பராசக்தி ஊகிக்கப்படுகிறாளோ அவள்.

விவரணம் :— பராசக்தியிடமிருந்து ஜகத் தோன்றுகிறது. நூலிலிருந்து துணி உண்டாகிறது. ஆனால் துணிக்கும் நூலுக்கும், பெயர், உருவம் இவ்விரண்டு வேற்றுமை களைத்தவிர வேறு வேற்றுமை ஒன்றும் கிடையாது. அதைப் போல் மண்ணும், பானையும் உண்மையில் ஒன்றே அதைப் போல் பரமாத்மாவும், ஜகத்தும் உண்மையில் ஒன்று. நாம ரூப வேற்றுமைகளைத்தவிர வேறு ஒருவித வேற்றுமையும் இவ்விரண்டிற்கும் கிடையாது. பராசக்தி ஜகத்திற்கும்

1. தைத்திரீயோபநிஷத் பிருகுவல்லி.

தனக்கும் வேற்றுமையற்ற ரூபமாக விளங்குகிறுள் என்பது பொருள்.

இந்தச் சந்தர்ப்பத்தில் ஒருவகை ஐயப்பாடு உண்டாகலாம். துணியைச் செய்ய, நூல்வேண்டும், நெய்பவனும் வேண்டும். அதைப்போல் பானையைச்செய்ய மண்ணும், குயவனும் வேண்டும். பிரபஞ்சத்தை உண்டு பண்ண மண், நீர், நெருப்பு, முதலிய தன் மாத்திரைகளும், செய்யும் சக்தியுடன் கூடிய ஒருவனும் வேண்டுமே. இவற்றில் பரமாத்மா எது? செய்பவனை நிமித்த காரண மாகவும் (Sufficient cause) அவன் உபயோகப்படுத்தும் நூல், மண்போன்ற பொருள்களை உபாதான காரண மாகவும் (material cause) சொல்லுவார்கள். பிரம்மம் இவற்றில் எது? இவற்றில் ஒன்றுமட்டுமேயாயின் ஜகத் திற்கும், பிரம்மத்திற்கும் வேற்றுமை இல்லையென்று சொல்லுவது எங்ஙனம் தகும்?

என்றல்; அவ்யக்தத்திலிருந்து வியக்தம் உண்டாகிறது என்று முன்னுரையில் சொன்னேம். ஸூக்ஷ்மம் ஸ்தூல மாகும் தன்மையும் (evolution), ஸ்தூலம் ஸூக்ஷ்மமாகும் தன்மையும் பிரம்மத்தினிடம் இருக்கிறதென்றும் சொல்லப் பட்டது. ஆகையால் நிமித்த உபாதான காரணங்கள் இரண்டும் பிரம்மமேயாகும். உபாதானம் என்று பிரஹ்மத் திற்குப் புறம்பாக ஒன்றும் கிடையாது. பிரம்மத்தின் சக்தி யாகிய மாயையின் விலாசத்தினுல், ஜகத் என்பது பிரம்மத் தின்மேல் ஆரோபணம் செய்யப்படும் தோற்றம். இதுவே வேதாந்திகளின் கொள்கை. ஆகையால் பிரம்மத்திற்கும் ஜகத்திற்கும் பேதமின்மையென்பது விளங்குகிறது.

ओं सर्वमात्रे नमः ।

ஓம் ஸர்வமாத்ரே நம: (139)

सर्वभूषणभूषिता ।

**ஸர்வபூஷணபூஷிதா** 140

(i) எந்த எந்தப் ப்ராணிகளால் எந்த எந்த அலங்கார வஸ்துக்களோ, போஜனுதிகளோ ஸ்வாநுபவத்திற்காக தேடிக்கொள்ளப்படுகின்றனவோ, அவ்வனைத்தினுலும் பரா

சக்தியே அலங்காரஞ்செய்யப்பட்டவளாக இருந்து, அனைத்தையும் அநுபவிக்கிருள்.

விவரணம்:— பராசக்தியே எல்லோரிடத்திலும் இருக்கும் ஆத்மஸ்வரூபமாக விளங்குகிருள். [1]आत्मनस्तु कामाय सर्वं प्रियं भवति' என்ற ச்ருதி "ஒருவனுக்கு ஒரு பொருளில் ப்ரியம் ஏற்படுவது தன்னிடத்தில் தான் வைத்துள்ள ப்ரியத்திளுலேயே" என்று கூறுகிறது. ஆகவே, தன்னுள் விளங்கும் பராசக்தியே ப்ரியமான பொருள்களை அநுபவிக்கிருள்.

(ii) எல்லா பக்த ஜனங்களிளுலும் தங்கள் தங்கள் இஷ்ட தேவதைகளுக்குச் செய்யப்படும் எல்லா பூஷணங்களாலும் அலங்காரம் செய்யப்படுபவள்.

விவரணம்:— பராசக்தியே எல்லா தேவதாசக்தியாக விளங்குவதளுல் இந்தப் பொருள் கிடைக்கிறது.

(iii) பராசக்தி மஹாராணி (எல்லாம் அவள் ஸ்வாதீனமாயிருப்பதால்). ஒன்றிலும் அவளுக்குப் பற்றுதல் கிடையாது. ஆயினும் அவளுடைய அவயவங்கள் எல்லாவித உத்தம அலங்காரங்களுடன் கூடியிருப்பதாகப் பக்தர்களால் த்யானிக்கப்படுகிருள்.

(iv) பல்வேறு தேசங்கள், காலங்கள், ஜனங்கள் உள்ளன. அவை அனைத்திலும் இடம், பொருள், ஏவலுக்குத் தக்கவாறு எந்த எந்த ஆபரணங்கள், தாழ்ந்ததும், உயர்ந்ததுமாக, உண்டோ, மனிதர்களுக்குமட்டுமல்லாது, யானை, குதிரை முதலிய ப்ராணிகளுக்குங்கூட எந்த எந்த அலங்காரங்கள் செய்யப்படுகின்றனவோ, அவைகள் அனைத்தையும் பராசக்தி தனக்குச்செய்வதாகப் பாவித்து, ஒன்றிலும் வெறுப்பின்றி அங்கீகரிக்கிருள்.

விவரணம்:— மேற்கூறிய பூஷணங்கள் அனைத்தும் ப்ரீதியிலிருந்து விளைகின்றன. அந்தப் ப்ரீதி தத்தம் ஆத்மாவினிடம் உள்ள ப்ரீதியின் சாயையே ஆகும்.

(v) பூஷணங்கள் போன்ற 'தத்வமஸி' முதலிய எல்லா மஹாவாக்கியங்களிளுலும் விளக்கப்பட்டு ஒரே பரம்

---

1. ப்ருஹதாரண்யகம் 2-4-5.

பொருளாகத் தீர்மானிக்கப்பட்டு நிற்கும் பொருளே பராசக்தியென்பது மற்றொரு அர்த்தம்.

ओं सर्वभूषणभूषितायै नमः ।

ஓம் ஸர்வபூஷணபூஷிதாயை நம: (140)

ककारार्था कालहन्त्री कामेशी कामितार्थदा ।

कामसंजीविनी कल्या कठिनस्तनमण्डला ॥ २७ ॥

ககாரார்த்தா கால ஹந்த்ரீ காமேஶீ காமிதார்த்ததா ।

காம ஸஞ்ஜீவிநீ கல்யா கடின ஸ்தந மண்டலா ॥

ककारार्था ।

**ககாரார்த்தா** 141

பரப்பிரம்மமாக விளங்குபவள்.

விவரணம் :—'कं ब्रह्म' (சாந்தோக்யம் 4-10) என்ற ச்ருதிப்ரகாரம், 'க' காரத்திற்குப் ப்ரஹ்மம் என்று பொருள். பராசக்தி ப்ரஹ்மமேயாவள்.

ओं ककारार्थायै नमः ।

ஓம் ககாரார்த்தாயை நம: (141)

कालहन्त्री ।

**காலஹந்த்ரீ** 142

(i) காலத்தை (time) அழிப்பவள். அதாவது காலத்திற்கு அப்பால் இருப்பவள். என்றும் நிலைத்திருக்கும் தன்மைவாய்ந்தவள்.

(ii) 'அஜபா' என்று ஓர் மந்திரம் இருக்கிறது. அது 'हंसः सोहम्' என்பது. அது ப்ராணனுடைய உச்வாஸ நிச்வாஸ இணைப்புடன் செய்யவேண்டிய மந்த்ரம். அதைச் செய்வதால் ஆத்ம ப்ரஹ்ம ஐக்கியம் உண்டாகிறது. மேலும், சாதாரணமாக ஒரு நாளில் விடும் சுவாஸங்களின் எண்ணிக்கை வைத்திய சாஸ்திரத்தில் கணக்கிடப்பட்டிருக்கிறது. அஜபா மந்த்ர யோகாப்யாஸத்தினால் இந்த எண்ணிக்கையைக் குறைத்து ஆயுளை எவ்வளவு வேண்டுமானாலும் அதிகரித்துக்கொள்ள முடியுமென்று சொல்லப்படுகிறது. காலமென்பது க்ரியா சக்தி ரூபமாய்

உள்ளது. ஆத்ம பிரஹ்ம ஐக்கிய நிலையில் சித்தம் முற்றும் ஸ்தம்பித்து, கிரியாசக்தி முற்றும் ஒடுங்கிவிடும்பொழுது, 'காலம்' என்பதும் ஆத்ம பிரஹ்மத்தில் ஒடுங்கி அழிந்து விடுகிறது இவ்விதமாகப் பராசக்தி விளங்குகிருள் என்று மற்றொரு பொருள்.

விவரணம் :—'கம்' என்ற பிரஹ்மத்தில் 'லய'த்தை அடைவதால் 'காலம்' என்ற காரணப் பெயர் வந்திருப்பதாகச் சொல்லுவது பொருத்தமே.

[1] पृथिव्यप्तेजोऽनिलखे समुत्थिते पञ्चात्मके योगगुणे प्रवृत्ते ।
न तस्य रोगो न जरा न मृत्युः प्राप्तस्य योगाग्निमयं शरीरम् ॥

"யோகாக்கினி மயமான சரீரத்தையடைந்தவனுக்கு வியாதி, முதுமை, இறப்பு ஒன்றும் கிடையாது. ஏனென்ருல் பஞ்சபூதங்களும் விகாரங்களை இழந்துவிடுகின்றன".

[2] अध्यात्मयोगाधिगमेन देवं मत्वा धीरो हर्षशोकौ जहाति ।

"அத்யாத்ம யோக ஸித்தியைப்பெற்ற தீரன் தனது தெய்வத் தன்மையை உணர்ந்து இன்பதுன்பங்களினின்றும் விடுபடுகிருன்".

**ततः संवत्सरो अजायत ।** "(பிரம்மத்தினின்றும்) வருஷம் என்ற காலமாறுபாடுகள் உண்டாயின"

**ओं कालहन्त्र्यै नमः ।**
ஓம் காலஹந்த்ர்யை நமः (142)

**कामेशी ।**
**காமேசீ** 143

பிராணிகள் அநுபவிக்க ஆவல்கொள்ளும் போக்கிய வஸ்துக்களைப்பெற அவரவர் அதிருஷ்டத்திற்குத் தக்கவாறு தூண்டுபவள். பலப் பிராப்திக்குப் பிராணிகள் கருவிகளாக இருக்கின்றனர். பலனை அளிக்கும் அதிகாரம் பராசக்தியிடமே உள்ளது என்று பொருள். **कर्मफलप्रदा** என்ற 20வது மந்திரத்தின் பொருளைப் பார்க்கவும்.

---

1. சுவேதாச்வதரம் 2–12. 2. கடோபநிஷத் 2–12.

ॐ कामेश्यै नमः ।

ஓம் காமேம்யை நம: (143)

कामितार्थदा ।

காமிதார்த்ததா 144

(i) அடைவதற்குரிய ஆசைகளை நிறைவேற்றுபவள். நிறைவேற்றும் சக்தி பராசக்தியிடம் இருப்பதால் இங்ஙனம் வர்ணிக்கப்படுகிருள். பிரஹ்மம் "आप्तकामः" "அனைத்தை யும் அடைந்தவன்" என்று வர்ணிக்கப்படுகிறது.

(ii) முக்தியைத் தருபவள்.

விவரணம்:— தனது ஆத்ம தத்துவத்தை உணருவதே முக்தியெனப்படும். இது ஆத்யந்திக ஸுகரூபமாய் இருப்பதால் எல்லோராலும் விரும்பப்படுகிறது. ஆகையால் அது 'காமிதார்த்தம்' என்று சொல்லப்படும். மனிதன் தன்னிடமேயுள்ள இந்த ஆத்மபாவத்தை மறந்து தனக்குப் புறம்பாக இருப்பதாக எண்ணி அதை அடைய ஆவல் கொள்கிருன். பராசக்தி ஸ்வயம்பிரகாச சக்தியாதலால், அடைந்ததை அடைவதுபோல் அவனுக்கு அந்த ஆத்மாநு பவத்தை அளிக்கிருள்.

ॐ कामितार्थदायै नमः ।

ஓம் காமிதார்த்ததாயை நம: (144)

कामसंजीविनी ।

காமஸஞ்ஜீவிநீ 145

பரமேசுவரனுடைய நெற்றிக்கண்ணால் எரிக்கப்பட்ட மன்மதனைத் தன் கடைக்கண் பார்வையினால் பிழைக்கும்படி செய்து வரங்களை அளித்தவள்.

விவரணம்:— மன்மதன் சாம்பலாக்கப்பட்டபின் பண்டாசுரனாக வெகுகாலம் இருந்தான். ரதிதேவி அம்பாளைத் தீவிரமாகப் பிரார்த்தித்துத் தவம் புரிந்தாள். அம்பாள் கருணைகொண்டு மன்மதனைப் பிழைப்பித்தாள். அதன் பயனாகக் காமசாஸ்திரம் பூமியில் இப்பவும் விளங்கிக்கொண்டிருக்கிறது.

ओं कामसंजीविन्यै नमः ।

ஓம் காமஸஞ்ஜீவிந்யை நம: (145)

फल्या ।

கல்யா 146

(i) த்யானத்திற்கு உத்தமமான வஸ்துவாய் விளங்குபவள்.

(ii) கலியில் காமதேனுபோல் நின்று இஷ்டங்களைப் பூர்த்திசெய்பவள்.

ओं कल्यायै नमः ।

ஓம் கல்யாயை நம: (146)

कठिनस्तनमण्डला ।

கடின ஸ்தநமண்டலா 147

அசையாது கடினமாயுள்ள ஸ்தனங்களையுடையவள். ஸ்தனங்களின் லாவண்யத்தைக் காட்டுகிறது.

ओं कठिनस्तनमण्डलायै नमः ।

ஓம் கடினஸ்தனமண்டலாயை நம: (147)

करभोरूः कलानाथमुखी कचजिताम्बुदा ।

कटाक्षस्यन्दिकरुणा कपालिप्राणनायिका ॥ २८ ॥

கரபோரூ: கலாநாத முகீ கச ஜிதாம்புதா ।

கடாக்ஷஸ்யந்தி கருணா கபாலி ப்ராணநாயிகா ॥

करभोरूः ।

கரபோரூ: 148

மணிக்கட்டிலிருந்து சுண்டுவிரலின் ஆரம்பம்வரையுள்ள கையின் வெளிப்பக்கத்திற்குக் 'கரபம்' என்று பெயர். அதன் வடிவத்திற்கு ஸமமான வடிவத்துடன் விளங்கும் துடைகளையுடையவள். வடிவத்திற்கு மட்டுமே இது உவமையாகக் குறிக்கப்பட்டுள்ளது. பரிமாணத்திற்கு இது உவமையன்று.

ओं करभोरवे नमः ।

ஓம் கரபோரவே நம: (148)

कलानाथमुखी ।
**கலாநாதமுகீ** 149

(i) கலைகளை வெளிவிடுத்த முகத்துடன் கூடியவள்.

விவரணம் :— பராசக்தி 64 கலைகளும் வெளிவருவதற்குக் காரணமாயிருக்கிறாள். 'निःश्वसितमेतद्यदृग्वेदो यजुर्वेदः सामवेदः' என்பது சுருதி. "ரிக், யஜுஸ், ஸாமம் இவைகளெல்லாம் பராசக்தியின் மூச்சுக்காற்றாகும்" शास्त्रयोनित्वात् (1–1–3) என்பது பிரம்ம சூத்ரம். "வேதங்களுக்கும் பிரஹ்மமே காரணம்" என்பது பொருள்.

(ii) சந்திரனைப்போன்ற முகத்தையுடையவள்.

ओं कलानाथमुख्यै नमः ।
ஓம் கலாநாதமுக்யை நம: (149)

कचजिताम्बुदा ।
**கசஜிதாம்புதா** 150

மேகத்தை வெல்லும் கூந்தலையுடையவள்.

விவரணம் :— 'வெல்லும்' என்பதால் நிறத்தில் வெற்றிபெறுவதென்று ஒரு பொருள். அதாவது மேகத்தை விடக் கறுத்த கூந்தலையுடையவள் என்பது. அல்லது, மேகத்தைவிட உயர்ந்து அளாவி நிற்கும் கூந்தலையுடையவள். அதாவது நீலஆகாசத்தைக் கூந்தலாக உடையவள் என்றும் பொருள்படுத்தலாம்.

ओं कचजिताम्बुदायै नमः ।
ஓம் கசஜிதாம்புதாயை நம: (150)

कटाक्षस्यन्दिकरुणा ।
**கடாக்ஷஸ்யந்திகருணா** 151

கருணையை அருவிபோல் வெளிவிடும் கடைக்கண் பார்வையுடன் கூடியவள்.

விவரணம் :— கருணையென்பது ஏழைகளைக் காப்பாற்ற வேண்டுமென்ற எண்ணம். இது மஹான்கள், தேவர்கள் முதலியோரின் இயல்பு. இது ஆத்ம குணமாதலால்

ஒருவன் உள்ளத்தில் மறைந்து நிற்கும் தன்மையது. ஆயினும் அன்புமிகுந்த கண்ணோட்டம், புன்னகை, இனிய சொல் இவைகள்போன்ற அடையாளங்களினால், ஊகிக்கப் படும் தன்மைவாய்ந்தது. தவிர, கருணையென்பது ஒன்பது வகை ரஸங்களில் ஒன்று. ரஸம் என்ற பதத்தினாலேயே கருப்பஞ்சாறு முதலிய மதுர ரஸத்துடன்கூடிய திரவ பதார்த்தங்கள் தொனிக்கின்றன. ஆகையால் கருணையை த்ரவரூபமாகக் கல்பித்து, கடைக்கண்ணோட்டம் முதலிய இங்கிதங்களிலிருந்து பெருகுவதாகக் கருதி இந்த மந்திரம் சொல்லப்பட்டிருக்கிறது.

ॐ कटाक्षस्यन्दिकरुणायै नमः ।

ஓம் கடாக்ஷஸ்யந்திகருணாயை நம: (151)

कपालिप्राणनायिका ।

**கபாலிப்ராணநாயிகா** 152

(i) ஆனந்தபைரவரின் ஆத்மாவாக விளங்கிக் கொண்டு அவரைத் தூண்டுபவள்.

விவரணம் :— 'கபாலம்' என்றால் மண்டையோடு. அதைக் கையில் ஏந்தியிருப்பவர் 'கபாலி'. ஆனந்த பைரவரென்ற பரமசிவன், அனைத்தையும் ஸம்ஹாரம் செய்துவிட்டு, மண்டையோட்டைத் தவிர வேறு ஒன்றும் இல்லாதவராய், அதைக் கையில் வைத்துக்கொண்டு ஆனந்த நடனம் புரிகிறார் என்பது கருத்து. ஸம்ஹார மூர்த்தி என்பதால் ஸ்ருஷ்டியும், ஸ்திதியும் அவருடைய விலாஸங்களே என்பது தொனிக்கிறது. பிறகு ஸ்ருஷ்டிக் கிரியையைச் செய்வதற்குத் தூண்டுபவள் 'கபாலி' யின் அதிஷ்டான ரூபியாயிருக்கும் பராசக்தியே என்பது பொருள். 'ப்ராணன்' என்ற பதத்தினால் ப்ராணன், அபானன், வ்யானன், உதானன், ஸமானன் என்ற ஐந்து ப்ராணன்களும் குறிக்கப்பட்டன. இவைகளைத் தூண்டு பவள் பராசக்தி.

न प्राणेन नापानेन मर्त्यो जीवति कश्चन ।

इतरेण तु जीवन्ति यस्मिन्नेतावुपाश्रितौ ॥ (कठोपनिषत् ५-५)

" பிராணன், அபானன் முதலியவற்றினால் ப்ராணிகள் ஜீவிக்கவில்லை. இவற்றிற்கு அந்நியமாக ஒன்று இருக்கிறது. அதைத்தான் இவைகள் சார்ந்திருக்கின்றன. அதனாலே தான் ப்ராணிகள் ஜீவிக்கின்றன". அதுவே ஆத்மா என்பது.

(ii) கபாலியின் ப்ரியத்திற்கு உரித்தானவள்.

ओं कपालिप्राणनायिकायै नमः ।

ஓம் கபாலிப்ராணநாயிகாயை நம: (152)

कारुण्यविग्रहा कान्ता कान्तिधूतजपावलिः ।
कलालापा कम्बुकण्ठी करनिर्जितपल्लवा ॥ २९ ॥

காருண்ய விக்ரஹா காந்தா காந்தி தூத ஜபாவளி: |
கலாலாபா கம்புகண்டீ கர நிர்ஜித பல்லவா ||

कारुण्यविग्रहा ।

**காருண்யவிக்ரஹா** 153

கருணையானது யாருடைய மூர்த்தியாக விளங்குகிறதோ அவள்.

விவரணம்:— கருணையென்பது அந்தக்கரணத்தின் விருத்திகளில் ஒன்று. அது அன்பு ததும்பும் கடைக்கண்ணோட்டம், புன்னகை, இனியவாக்கு இவைகளினால் வெளிப்படுகிறது. ஆயினும், அதன் பயன் அபீஷ்டங்களை நிறைவேற்றிவைப்பதனாலேயே விளையும். இதைச்செய்ய சரீர அவயவங்கள் தேவையென்பதை உலக இயல்பில் காண்கிறோம். ஜகத்தை உண்டுபண்ண, ப்ரஹ்மம், மாயா சக்திமூலமாய் இச்சாமாத்திரத்தினால் கர்மபந்தமின்றி ஸச்சிதானந்தமாய் விளங்கும் தன்மையால் மாத்திரமே செய்யக்கூடுமாயினும், பக்தர்கள் எளிதில் தியானம் செய்வதற்காகவும் அவர்கள் மனத்திற்குக் கோசரமாய் இருப்பதற்காகவும் ஸகுணோபாஸ்ய மூர்த்தியாக வேத மந்திரங்களால் விளக்கப்படுகிறது. உதாஹரணமாக वज्रहस्तः पुरन्दरः (இந்திரன் வஜ்ராயுதத்தைக் கையில் ஏந்தியிருக்கிறான்) என்று வேதமந்திரம் உள்ளது,

ஆகையால் வஜ்ரஹஸ்தத்துடன் கூடியதாக தேவேந்திரனை தியானிப்பது வேதத்திலுல் அங்கீகரிக்கப்பட்டதே. மற்றொர் உதாரணம் "बहुशोभमानां उमां हैमवतीम्" என்ற கேனோபநிஷத் வாக்கியத்திற்கு "ஸ்வர்ண ஆபரணங்களை அணிந்து அதிசயப் பிரகாசத்துடன் விளங்குபவள்" என்றோ, "ஹிமவானுடைய புத்திரியாக, அளவற்ற பிரகாசத்துடன் விளங்குபவள்" என்றோ அர்த்தம் பண்ணலாம். இருவிதத்திலும், பராசக்தி திவ்ய விக்கிரஹத்துடன் கூடியவளாகச் சொல்லப்படுகிறாள். ஆகையால் மஹாநுபாவர்களால், ஸ்வயம் ஜோதியுடன் விளங்கும் திரிமூர்த்திகளைத் தியானிக்க அவர்களை அவ்விதமான அவயவங்களுடன்கூடிய ரூபம் பொருந்தியதாக வைத்துக் கொள்ளல் ஒருவிதத்திலும் அனுசிதமன்று. அது ஸச்சிதானந்த வடிவமான பரமேசுவரனை எவ்விதத்திலும் மறுப்பதாகவோ, பாதிப்பதாகவோ ஆகாது.

ॐ कारुण्यविग्रहायै नमः ।

ஓம் காருண்ய விக்ரஹாயை நமः (153)

कान्ता ।

காந்தா 154

(i) அளவற்ற அழகுவாய்ந்து மனக்கவர்ச்சியை யுண்டுபண்ணுபவள்.

(ii) மதனகோபால வடிவமாய் விளங்குபவள்.

कदाचिदाद्या ललिता पुंरूपा कृष्णविग्रहा ।

वंशनादविनोदेन करोति विवशं जगत् ॥

"எப்பொழுதாவது பராசக்தி கிருஷ்ண ரூபமாக அவதரித்து வேணுகானத்தினுல் ஜகத்தை மெய்மறந்த ஆனந்தத்தில் ஆழ்த்துகிறாள்" என்று த்ரிபுரதாபநீய உபநிஷத்தில் கூறப்பட்டிருக்கிறது.

ॐ कान्तायै नमः ।

ஓம் காந்தாயை நமः (154)

कान्तिधूतजपावलिः ।

காந்திதூதஜபாவலிः 155

யார் தன்னொளியினால் ஜபா புஷ்பத் தொகுதிகளை மங்கும்படி செய்கிறாளோ அவள்.

விவரணம் :— ஜபா புஷ்பம் வெண்ணிறம்கூடிய சிவப்பு வர்ணமுடையது. இதைப்போல் நிறமமைந்துள்ள ஏனைய புஷ்பங்களும் 'ஜபா'வென்ற பதத்தினால் குறிக்கப் பட்டுள்ளன. 'ஆவளி:' என்றால் 'வரிசை', 'தொகுதி'. பராசக்தியின் காந்திக்கு உவமை இயற்கையிலோ, செயற்கையிலோ இல்லை. அது தூய்மை வாய்ந்ததும், பரமானந்த சைதன்யத்தின் பிரகாசமுமாகும். அதனால் ஜபாவளியினுடைய ஒளி மங்கிவிடுகிறது என்பது பொருள். **नहि महान्तो नीचैरुपमीयन्ते** என்பது நியாயம். அதாவது "மஹிமை வாய்ந்தவர்களுக்கோ, வஸ்துக்களுக்கோ, தாழ்மையுள்ளவைகள் உவமையாகா".

**ओं कान्तिधूतजपावल्यै नमः ।**

ஓம் காந்திதூதஜபாவல்யை நம: (155)

**कलालापा ।**

**கலாலாபா** 156

(i) 64 கலைகளும் யாருடைய தன்மைகளைப்பற்றிக் கூறுகின்றனவோ அவள்.

விவரணம் :— இந்த அர்த்தம் பின்வரும் வாக்கியத்தைச் சார்ந்துள்ளது. "**वेदशास्त्रमयी वाणी यस्याः सा परदेवता**" "எவளைப்பற்றிய ஞானமானது வேதங்கள், சாஸ்திரங்கள் என்பவைகளாக அமைந்துள்ளதோ அவளே பரதேவதை".

(ii) யாருடைய ஸல்லாபமானது (வாக்கானது) சொல்லுதற்கரிய இனிமையுடனும், கருத்துடனும் கூடியதாக இருக்கிறதோ அவள்.

விவரணம் :— ஸாமுத்ரிகா லக்ஷணங்களில், மஹான்களுடைய வாக்கு, கருத்துநிறைந்ததாகவும், மிகுந்த சுவையுடன் கூடியதாகவும் இருக்குமென்று சொல்லப்படுகிறது.

**ओं कलालापायै नमः ।**

ஓம் கலாலாபாயை நம: (156)



कम्बुकण्ठी ।

கம்புகண்டீ 157

சங்கத்தில் (conch) இருக்கும் மூன்று வரிகளுக்கு இணையான மூன்று வரிகளையுடைய கழுத்தையுடையவள்.

விவரணம்:— சங்கத்திற்கு வெண்மை, ஒலிக்கும் தன்மை, மூன்று வரிகளுடன் கூடியிருத்தல் என்ற மூன்று லக்ஷணங்கள் உண்டு. பராசக்தியின் கழுத்து இம்மூன்று லக்ஷணங்களையும் கொண்டிருப்பதால் உவமை கூறப் பட்டது.

ओं कम्बुकण्ठ्यै नमः ।

ஓம் கம்புகண்ட்யை நமః (157)

करनिर्जितपल्लवा ।

கரநிர்ஜிதபல்லவா 158

யாருடைய உள்ளங்கையினால் இளம்தளிர் வெல்லப் பட்டதோ அவள்.

விவரணம்:— இளம்தளிர், மிருதுவாயும், சிறிது வெண்மை கலந்த சிவப்பு நிறமாயும் இருப்பதுபோல், பராசக்தியின் உள்ளங்கை அதிமிருதுவாயும், வெண்சிவப்பு வர்ணத்துடனும் இருக்கிறது என்பது பொருள். உள்ளங் கைக்கும், தளிருக்கும் இடையே (மேற்கூறிய அம்சங்களில்) எது எதை வெல்லுகிறதென்று சொல்லமுடியாத வண்ணமாக உவமை பொருந்தியிருக்கிறது என்ற அர்த்தமும் தொனிக்கிறது. विवाहश्च विवादश्च समयोरेव शोभते (விவாஹமும் வியவஹார வாதமும் ஒருவருக்கொருவர் துல்யமாயுள்ளவர்களிடையேதான் சோபிக்கும்) என்ற வசனம் இங்கே குறிப்பிடத்தக்கது.

ओं करनिर्जितपल्लवायै नमः ।

ஓம் கரநிர்ஜிதபல்லவாயை நமః (158)

कल्पवल्लीसमभुजा कस्तूरीतिलकाञ्चिता ।

हकारार्था हंसगतिर्हाटकाभरणोज्ज्वला ॥ ३० ॥

கல்பவல்லீ ஸமபுஜா கஸ்தூரீ திலகாஞ்சிதா ।

ஹகாரார்த்தா ஹம்ஸகதிர் ஹாடகாபரணோஜ்வலா ॥

कल्पवल्लीसमभुजा ।
**கல்பவல்லீஸமபுஜா** 159

கல்பக விருக்ஷத்தைச் சுற்றியிருக்கும் கொடிகளுக்கு இணையாயுள்ள கைகளையுடையவள்.

விவரணம் :— தேவேந்திரனுடைய உத்யான வனத்திற்கு 'நந்தனம்' என்று பெயர். அங்கே தேவலோக மரமாகிய கல்பக விருக்ஷங்கள் என்று ப்ரஸித்திவாய்ந்த மரங்கள் இருக்கின்றன. அவற்றிற்கு அலங்காரமாகக் கல்பகக் கொடிகள் படர்ந்திருக்கின்றன. 'கல்பம்' என்ற பதத்திற்கு கேட்டதைக் கொடுக்கும் தன்மை பொருந்தியது என்பது பொருள். உத்தம லக்ஷணங்களுடன் கூடிய பெண்களின் கைகளைக் கொடிக்கு இணையாகச் சொல்லுவது கவிகளின் வழக்கம். பராசக்தியின் கைகள் பக்தர்களின் வேண்டுகோளைப் பூர்த்திசெய்யும் குணமுள்ளன. கல்பகக் கொடிகளும் அவைகளுக்குரிய சைதன்யத்துடன்கூடி கேட்ட வரன்களை அளிக்கும் தன்மை பொருந்தியவை. ஆகையால் மந்திரத்தில் இரண்டுக்கும் இடையே குறிப்பிட்டிருக்கும் ஸமத்வம் மிகவும் பொருத்தமுள்ளது. பராசக்தியின் புஜங்களுக்கு இணையே கிடையாது; எப்படி ஸமத்வம் சொல்லமுடியுமென்றால், நிரவயவமாகிய பராசக்தி கைகளுடன் கூடியவள் என்று சொல்லும்பொழுது, அவளுடைய வெளித்தோற்றம் கல்பிக்கப்படுகிறது. எல்லாத் தோற்றங்களிலும் உள்ளிருப்பது ஸச்சிதானந்த வஸ்துவே. அதைப்போல கல்பகக் கொடியினுள்ளும் அதே சைதன்யம் ப்ரகாசிக்கிறது. ஆகையால் நாமரூபம் பொருந்திய இரண்டு பொருள்களுக்குள் ஸமத்வம் இருப்பதாகச் சொல்லுவது உசிதமேயாகும்.

[1] 'एकस्तथा सर्वभूतान्तरात्मा रूपंरूपं प्रतिरूपो बहिश्च'

"நாமரூபம் வாய்ந்த பொருள்கள் அனைத்திலும் அந்தராத்மாவாக இருப்பது ஒன்றே. வெளித்தோற்றங்கள் அனைத்தும் அதனுடைய ப்ரதிபிம்பங்களேயாவன.

---

1. கடோபநிஷத் 5-9.

'तत्तदेवावगच्छ त्वं मम तेजोंशसंभवम्'

"ப்ரபஞ்ச வஸ்துக்கள் எனது சக்தியின் அம்சங்கள் என்று அறிந்துகொள்". (கீதை 10-41)

ओं कल्पवल्लीसमभुजायै नमः।

ஓம் கல்பவல்லீஸமபுஜாயை நமஃ (159)

कस्तूरीतिलकाञ्चिता

**கஸ்தூரீதிலகாஞ்சிதா** 160

கஸ்தூரீ திலகத்தை நெற்றியில் அணிந்துகொண்டிருப்பவள்.

விவரணம் :— நெற்றியில் பொட்டு, புருவங்களுக்கு இடையே இடப்படுகிறது அங்கே ஸாம்பபரமேசுவரன் வீற்றிருக்கும் 'ஆக்ஞா' சக்ரம் இருக்கிறது. ஒருவனைக் கண்டு ஸம்பாஷிக்கும்பொழுது நாம் அவனுடைய புருவங்களுக்கிடையேதான் நமது பார்வையைச் செலுத்துகிறோம். அதாவது அவனது 'ஆக்ஞை - உட்கருத்து' என்ன என்பதை அறிய விரும்புகிறோம். அந்த இடத்தில் திலகத்தையணிவதால், நம்மை ரக்ஷித்துக்கொள்ளுவது மல்லாமல், நமது ஆக்ஞை வலுவடைகிறது. முக்கியமாக ஸுமங்கலிகள் புருவங்களுக்கிடையே கஸ்தூரிப் பொட்டையோ, குங்குமப்பொட்டையோ ப்ரகாசமாக அணிந்துகொள்ளுதல் அவசியம்.

ओं कस्तूरीतिलकाञ्चितायै नमः।

ஓம் கஸ்தூரீதிலகாஞ்சிதாயை நமஃ (160)

हकारार्था।

**ஹகாரார்த்தா** 161

ஆகாசபீஜமாகிய 'ஹ' காரத்தைத் தனது விக்ரஹமாக உடையவள்.

[1]'आकाशो ह वै नाम नामरूपयोः निर्वहिता ते यदन्तरा तद्ब्रह्म'

"நாமரூபங்களுடன் கூடியவனைத்தும் ஆகாசத்தில் நிலைபெற்றிருக்கின்றன. அவைகள் எதற்குள்

1. சாந்தோக்யம் 8-14.

இருக்கின்றனவோ அது ப்ரம்மம்". ஆகையால் ப்ரம்மத்தின் உடலாக ஆகாசம் விளங்குகிறது.

ओं हकारार्थायै नमः ।

ஓம் ஹகாரார்த்தாயை நம: (161)

हंसगतिः ।

**ஹம்ஸகதி:** 162

(i) பிராணனுடைய உச்சுவாஸ நிச்வாஸங்கள் யாரைச் சார்ந்திருக்கின்றனவோ அவள்.

விவரணம் :— 'ஹந்தி' என்றால் 'செல்லுகிறது' என்று பொருள். ஆகையால் 'ஹம்ஸ:' என்ற பதத்திற்குப் 'பிராணன்' என்றும் 'ஸூரியன்' என்றும் பொருள். பிராணனின் கதியைச் சார்ந்த 'ஹம்ஸஸ்ஸோஹம்' என்ற 'அஜபா' மந்திரத்தின் வடிவமாகப் பராசக்தி விளங்குகிறாள். 'அஜபா' என்பதைப்பற்றி 142-வது மந்திரத்தில் பார்க்கவும்.

'हकारेण बहिर्याति सकारेण पुनर्विशेत् ।'

'ஹ' என்ற தியானத்துடன் மூச்சு வெளியே சென்று, 'ஸ' என்ற தியானத்துடன் உட்புகுதல் வேண்டும்.

(ii) காலத்தின் ஸ்வரூபமாக விளங்குபவள்.

விவரணம் :— 1-வது அர்த்தத்தில் விளக்கியதுபோல் 'ஹம்ஸ:' என்பது ஸூரியனைக் குறிக்கும். ஸூரியனுடைய சஞ்சாரத்தைக் காலமென்பது சார்ந்திருப்பதால், காலத்தின் ரூபமாகப் பராசக்தியிருக்கிறாள் என்ற பொருள் கிடைக்கிறது.

(iii) ஜீவனுடைய கடைசி ஸ்தானமாகிய மோக்ஷமாய் இருப்பவள்.

விவரணம் :— திரும்பத்திரும்ப ஒரு தேஹத்தை விடுத்து மற்றொரு தேஹத்தைப்பெறும் ஜீவாத்மாவை 'ஹம்ஸ:' என்ற பதம் குறிக்கும். இத்தகைய ஜீவனுக்கு 'கதி:' 'கடைசி நிலை' முக்தியெனப்படும். அதாகப் பராசக்தி விளங்குகிறாள்.

"ब्रह्मविदाप्नोति परम्" "ப்ரம்மஞானம் ஏற்பட்டால்

ப்ரம்மத்துடன் ஐக்யம், அதாவது முக்தி, ஏற்படுகிறது". (தைத்திரீயோபநிஷத்)

"यद्गत्वा न निवर्तन्ते" "எதை அடைந்தால் மறு பிறவியில்லையோ". (கீதை.)

(iv) சரணமென்று யார் அடையப்படுகிறளோ அவள்.

விவரணம்:— அர்த்தம் 1-ல் 'ஹம்ஸ:' என்பதற்குச் செல்லும் பொருள் என்று சொல்லப்பட்டது. அதாவது தன்னிடத்திலிருந்து உண்டான ப்ரபஞ்சத்தில் தானே ப்ரவேசிக்கும் வஸ்து. அதாவது 'பரமாத்மா'. இந்தப் பரமாத்ம வஸ்து நான்குவகை பக்தர்களினுல் சரணமென்று நாடப்படுகிறது. "आर्तः अर्थार्थी जिज्ञासुः ज्ञानी" "துயரம் அநுபவிப்பவன், அவாவுடையவன், ஞானத்தை விரும்புபவன், ஞானத்தையடைந்தவன்" இந்நால்வரும் பக்தர்கள் ஆவார்கள்.

"हंसः शुचिषत्" "சோகமடைந்தவர்களுக்குப் பரமேசுவரனே கதி". (கடோபநிஷத் 5-2)

(v) ப்ரம்மாவின் வாஹனமாகிய அன்னப்பக்ஷியின் நடைபோல் நடையையுடையவள்.

விவரணம்:— 'அன்ன நடையாள்' என்று உத்தம ஸ்திரீகள் கவிகளினுல் வர்ணிக்கப்படுகின்றனர்.

(vi) யாருடைய பாதாரவிந்தங்கள் நூபுரங்களால் அலங்கரிக்கப்பட்டிருக்கின்றனவோ அவள்.

விவரணம்:— 'ஹம்ஸம்' என்பது பாதஸரத்தைக் குறிக்கும். 'கதி:' என்ருல் பாதம்.

(viii) ஸந்நியாஸிகளால் யார் கண்கூடாக அறியப்படுகிறளோ அவள்.

விவரணம்:— நித்யம், அநித்யம், ஊர்ஜிதத்வம், ஹீநத்வம், சேதனம், அசேதனம் முதலிய குணுகுணங்களை அறிவதில் தேர்ந்தவர்களாகிய பரமஹம்ஸர்கள் ஊருராய், தேசந்தேசமாய்ச் சென்று, ஆசை அனைத்தையும் துறந்து, உலகத்தாருக்கு ஞானேபதேசம் செய்து, பரிவ்ராஜகர்கள் என்ற புகழுடன் விளங்குகிருர்கள். அவர்களுக்குக் கதியாக

அதாவது, அவர்களால் பரமானந்த அநுபவத்துடன் நேருக்குநேர் காணப்படும் பொருளாகப் பராசக்தி விளங்குகிருள் என்பது கருத்து.

"सन्यासयोगात् यतयः शुद्धसत्वाः" (ஸந்நியாஸ யோகத்தினுல் பரிசுத்த ஆத்மாக்களாக விளங்கும் யதீசுவரர்கள்— முண்டகோபநிஷத் 3-2-6

"ये पूर्वे वेदा ऋषयश्च तद्विदुः ते तन्मया अमृता बभूवुः"

(ஆதியில் எந்தப் பொருளை வேதங்களும் ரிஷிகளும் விளக்கினவோ, அந்தப் பொருளாகவே தங்களையும் அறிந்தவர்கள் ஜனனமரணமின்றி முக்தர்களானுர்கள்.)

ओं हंसगत्यै नमः ।

ஓம் ஹம்ஸகத்யை நம: (162)

हाटकाभरणोज्ज्वला ।

ஹாடகாபரணோஜ்வலா 163

(i) தங்க நகைகளினுல் அலங்கரிக்கப்பட்டுப் பிரகாசிப்பவள்.

(ii) அண்டங்கள் தோன்றுவதற்குமுன் தங்க வர்ணத்துடன்கூடிய ஹிரண்யகர்ப்ப வடிவமாயிருந்த பிரம்மாண்டத்திற்கு நிலைத்து நிற்கும் தன்மையை அளித்தவள்.

(iii) தங்க நகைகளுடனும், திருமங்கல்யச் சரடுகளுடனும் விளங்கும் ஸுவாஸினிகளிடையே ஆபரணம் போல் பிரகாசித்து விளங்குபவள்.

(iv) அஷ்ட ஐசுவரியங்களையும், அவற்றினின்று பயக்கும் செல்வங்களையும் தானம் செய்வதாலோ, அல்லது அவற்றின் உருவத்துடன்கூட விளங்குவதாலோ, அதிசயிக்கத்தக்க பிரகாசத்துடன் கூடியவள்.

விவரணம்:— அஷ்ட வஸுக்களும் பிரகாசிக்கும் தன்மை வாய்ந்தன. உதாஹரணமாக வித்யை, சீலம், ஸத்வம் இவைகளினுல் முகம் தெளிவையும், பிரகாசத்தையும் அடைகிறது. இந்த பிரகாசம் பராசக்தியின் ஸ்வரூபமே,

இவற்றை ஒருவனுக்கு தானம் செய்தால் அவன் பிரகாசத்தையடைகிறான். பராசக்தி அவனிடம் விளங்குகிறாள்.

1 ‘वसुरन्तरिक्षसत्’ (பஞ்சபூதங்களிலும் அந்தரிக்ஷம் என்று சொல்லப்படும் ஆகாசமே நிர்மலமாகவும் பிரகாசமாகவும் இருப்பதால், அஷ்ட வஸுக்களும் ஆகாசத்தையே சார்ந்திருக்கின்றன). உதாஹரணமாக, நக்ஷத்ரகணங்களெல்லாம் ஆகாசத்தையே இருப்பிடமாக உடையன.

ओं हाटकाभरणोज्ज्वलायै नमः ।

ஓம் ஹாடகாபரணோஜ்வலாயை நம: (163)

हारहारिकुचाभोगा हाकिनी हल्यवर्जिता ।

हरित्पतिसमाराध्या हठात्कारहतासुरा ॥ ३१ ॥

ஹார ஹாரி குசாபோகா ஹாகிநீ ஹல்ய வர்ஜிதா ॥
ஹரித்பதி ஸமாராத்யா ஹடாத்கார ஹதாஸுரா ॥

हारहारिकुचाभोगा ।

**ஹாரஹாரிகுசாபோகா** 164

(i) பரமேசுவரனுடைய ஈசுவரத்வம், ஆப்தகாமத்வம், நித்யதிருப்தத்வம் முதலிய பிரஸித்த குணங்களைப் போக்கும் தன்மை வாய்ந்த ஸ்தனமண்டலங்களையுடையவள்.

விவரணம்:— ‘ஹர:’ என்றால் பரமேசுவரன். ஹரனுக்கு ஸம்பந்தப்பட்டது ‘ஹார:’ இவ்விடத்தில் ‘ஹாரா:’ என்பதால் பரமேசுவரனுடைய ஈசுவரத்வாதி குணங்கள் குறிக்கப்பட்டன. பரமேசுவரனையும் மோஹத்திற்கு உட்படுத்தி, அவனை வசப்படுத்தும் அழகு வாய்ந்தவளாகப் பராசக்தி விளங்குகிறாள் என்பது பொருள். மோஹமென்பது அக்ஞானம், அல்லது மாயையென்பதன் விளைவு. அதற்குப் பாத்யப்படும்பொழுது ஈசுவரனும் ஜீவன்போல் ஆகிறான். ஜீவன் எப்படி இதர வஸ்துக்களை அடையவிரும்புகிறானோ, அதைப்போல் ஈசுவரன் புவனம் அனைத்தையும் தன்வசம் வைத்திருப்பினும், பராசக்தியிடம்

1 கடோபநிஷத் 5-2.

வாஞ்சைப் பெருக்கு உடையவனாக இருக்கிறான். இதனால் பராசக்தியின் அதிசயமான மேன்மை விளங்குகிறது.

(ii) முத்துமாலைகளை ஸ்தனப்ரதேசத்தில் அணிந்து கொண்டிருப்பவள்.

ओं हारहारिकुचाभोगायै नमः ।

ஓம் ஹாரஹாரிகுசாபோகாயை நம: (164)

हाकिनी ।

**ஹாகினீ** 165

ஜனனமரணத்தை அகற்றுபவள். அதாவது முக்தியைத் தருபவள்.

விவரணம் :— 'ஹாக்' என்ற தாதுவுக்கு துண்டித்தல் என்று பொருள்

ओं हाकिन्यै नमः ।

ஓம் ஹாகின்யை நம: (165)

हल्यवर्जिता ।

**ஹல்யவர்ஜிதா** 166

(i) விவசாய மூலமாய் விளையும் பொருள்களில் ஆசையற்றவள்.

விவரணம் :— 'ஹல:' என்றால் கலப்பை. அதனால் விவசாயம் என்ற அர்த்தம் கிடைக்கிறது. 'ஹல்யம்' என்பது 'விவசாயத்தின் பயன், அதாவது விளைபொருள்' சுத்தசைதன்ய ரூபமாயிருக்கும் பராசக்திக்குப் பௌதிக வஸ்துக்களின் அவசியம் எப்படியிருக்கக்கூடும் ?

(ii) கபடமற்றவள்.

'ஹல்யம்' என்பதற்குக் கபடமென்று ஒரு பொருள். அதாவது நண்பர்களிடமுங்கூடத் தன் உட்கருத்தை மறைத்துக் காட்டும் இயல்பு. ஆத்ம ஸ்வரூபமாக நின்று அக்ஞான லேசமுமின்றி விளங்கும் சுத்தசைதன்ய வஸ்துவுக்குக் கபடம்போன்ற விகாரங்கள் எங்ஙனம் இருக்கக்கூடும் ?

ओं हल्यवर्जितायै नमः ।

ஓம் ஹல்யவர்ஜிதாயை நம: (166)

**हरित्पतिसमाराध्या ।**

**ஹரித்பதிஸமாராத்யா** 167

திக்பாலகர்களினுல் சிரத்தையுடன் ஆராதிக்கப் படுவதற்குச் சக்திவாய்ந்தவள்.

விவரணம்:— 'ஹரித்' என்ருல் திசை. கிழக்குத் திசைக்கு இந்திரன் பாலகன். இதைப்போல் எட்டு திக் பாலகர்கள் உண்டு. அவர்களுடைய சத்ருக்களாகிய அசுரர்களைக் கொன்று அவர்களுடைய விருப்பங்களை நிறைவேற்றுவதால் அவர்களுடைய பக்திக்குப் பராசக்தி உரிமைகொண்டவள்.

ओं हरित्पतिसमाराध्यायै नमः ।

ஓம் ஹரித்பதிஸமாராத்யாயை நம: (167)

**हठात्कारहतासुरा ।**

**ஹடாத்காரஹதாஸுரா** 168

நொடிப்பொழுதில் அசுரர்களைக் கொல்லுபவள்.

விவரணம்:— ஸம பலம் பொருந்திய சத்துருக் களுக்குள், ஒருவரை ஒருவர் வெல்லவேண்டுமாஞல், ஸாம பேதாதிகளைக் கையாளுதல் அவசியம். வெகுகாலமும் வேண்டும். சிங்கம் ஆட்டைக் கொல்லுவது எவ்வளவு எளிதோ அதைப்போல் எளிதாகப் பராசக்தி அசுரர்களைக் கொல்லுகிருள். ஏனைய துஷ்ட மாந்தர்களை அழித்தல் அவளுக்கு மிகவும் எளிது என்று சொல்லவேண்டியதில்லை.

ओं हठात्कारहतासुरायै नमः ।

ஓம் ஹடாத்காரஹதாஸுராயை நம: (168)

हर्षप्रदा हविर्भोक्त्री हार्दसंतमसापहा ।

हल्लीसलास्यसंतुष्टा हंसमन्त्रार्थरूपिणी ॥ ३२ ॥

ஹர்ஷப்ரதா ஹவிர்போக்த்ரீ ஹார்தஸந்தமஸாபஹா

ஹல்லீஸ லாஸ்ய ஸந்துஷ்டா ஹம்ஸ மந்த்ரார்த்த
ரூபிணீ ||

हर्षप्रदा ।

**ஹர்ஷப்ரதா** 169

(i) இன்பமென்று சொல்லப்படும் சித்தவிருத்தி விலாஸத்தையளிப்பவள்.

விவரணம் :— முகமலர்ச்சி முதலியவற்ருல் ஒருவன் சித்தவிருத்தி ஊகிக்கப்படும். சித்தவிருத்திகளில் ஆனந்தம் என்பது ஒன்று. இது தன்னைக் கௌரவித்தல், பிறரைத் தாழ்த்துதல் முதலிய பல காரணங்களினுல் ஒருவனுக்கு உண்டாகிறது. இச்சிற்றின்பங்கள் பேரின்ப வடிவமாகிய பராசக்தியின் பிரபாவத்தினுல் உண்டாகின்றன என்பது கருத்து.

(ii) தனம், யௌவனம் முதலிய ஸுகங்களை மக்கள், மனைவி முதலிய ரூபங்களைக்கொண்டும் போகாதி அநுபவங்கள் மூலமாயும் குறைப்பவள்.

விவரணம் :— இந்த அர்த்தம் 'த்யதி' (द्यति) என்ற பதத்திற்கு 'கண்டயதி' (खण्डयति) என்ற அர்த்தத்தினின்றும் விளைகிறது. ஸுகாநுபவங்கள் மூலமாய்ப் பிராரப்த புண்ணியங்கள் அழிகின்றன.

ओं हर्षप्रदायै नमः ।

ஓம் ஹர்ஷப்ரதாயை நமః (169)

हविर्भोक्त्री ।

**ஹவிர்போக்த்ரீ** 170

(i) வஸு, ருத்ர, ஆதித்யர்களாக இருந்துகொண்டு, யஜமானனுல் அக்னியில் ஆஹுதி செய்யப்பட்ட ஹவிஸ்ஸுகளை 'ஸ்வாஹா' என்ற மந்த்ர வாயிலாகத் தன் வசம் ஆக்கிக்கொள்ளுபவள்.

விவரணம் :— எந்தத் தேவதையைக் குறித்து ஆஹுதி இட்டாலும், பராசக்தியே அந்த அந்தத் தேவதா ரூபமாக இருந்து ஸ்வீகரித்துக்கொள்ளுகிருள் என்பது கருத்து,

'स ब्रह्म स शिवः स हरिः सेन्द्रः सोऽक्षरः परमः स्वराट्'
அதாவது "பரமாத்ம சக்தியே பற்பல தேவதா ரூபமாக விளங்குகிறது. அவனே பிரம்மா, அவனே சிவன், அவனே விஷ்ணு, அவனே இந்திரன், அவனே நித்யமான உண்மைப் பொருள், அவனே பரமன், அவனே ஜகத் ரூபமாக விளங்குபவன்".

(ii) ஆஹுதி செய்யப்பட்ட ஹவிஸ்ஸுகளை ரக்ஷிக்கிறவள்.

விவரணம்:— ஆஹுதிகளுக்குப் பிற்காலங்களில் பயனளிக்கும் சக்தியுண்டு. இவைகள் மறைந்து நின்று ஸூக்ஷ்மரூபமாய் யஜமானனின் ஜீவனில் சேர்ந்து வாஸனைகள், பஞ்சபூத ஸூக்ஷ்ம தன்மாத்திரைகள் என்ற மாறுபாடுகளையடைந்து மாயை, அவித்யை என்று சொல்லப்படும் இயல்பாகவோ, முக்தியைத்தரும் இயல்பு உடையனவாகவோ விளங்குகின்றன. இவற்றைக் காத்துத் தத்தம் பயனை அளிக்குமாறு பராசக்தி செய்கிருள். இதை ஒப்புக்கொள்ளாவிடில், காரணமின்றி ஜகத் தோன்றியதென்று ஏற்பட்டுவிடும்.

தவிர, இந்த மந்திரத்திலிருந்து ஔபாஸனம், அக்னிஹோத்ரம், சிராத்தாதிகள் முதலிய கர்மாக்களின் உட்கருத்து விளங்குகிறது.

ओं हविर्भोक्त्र्यै नमः ।
ஓம் ஹவிர்போக்த்ர்யை நம: (170)

हार्दसंतमसापहा ।
**ஹார்தஸந்தமஸாப்ஹா** 171

ஹ்ருதயத்தில் குடியிருக்கும் அஞ்ஞானமாகிய இருளைப் போக்கடிப்பவள்.

விவரணம்:— 'ஹ்ருதய' ஸம்பந்தமுள்ளது 'ஹார்தம்' எனப்படும். அந்தராத்மாவைப்பற்றிய தத்வஞானத்தை மறைத்து விபரீதபுத்தியை உண்டாக்கும் அஞ்ஞானம் ஹ்ருதயத்தில் குடியிருக்கிறது. அதாவது ஒவ்வொருவனும் தான் ப்ரம்மம் இல்லையென்றும், ஸம்ஸாரத்தில் ஓர் அங்கம்

என்றும் ஸ்வயம்பிரகாசமற்றவனென்றும் நினைத்துக்கொள்கிறன். அப்படி எண்ணுவதால் தேஹேந்திரியாதிகளையே தானகப் பாவித்து, உற்ருர் உறவினரைத் தனதென்று எண்ணி, விஷயாதிகளிலேயே ஆனந்தம் இருப்பதாகக் கருதுகிருன். பராசக்தி இந்த அஞ்ஞானத்தை அகற்றுகிருள். எப்படியெனின், ஒவ்வொருவனும் தான் ஸச்சிதானந்தரூபியாகவும் ப்ரம்மமாகவும் இருக்கிருன் என்ற ப்ரக்ஞையைத் தருகிருள்.

यो वेद निहितं गुहायां '(பரமாத்மா எங்கும் வ்யாபித்து இருப்பினும்) நமது உள்ளறிவுக்குக் கோசரமாக ஹ்ருதய குஹையில் வீற்றிருக்கிருன்'.—தைத்திரீயோபநிஷத்.

नेह नाना (பலவாகத் தோன்றுவது உண்மையில் ஒரே வஸ்துவே). —பிருஹதாரண்யகம்.

ओं हार्दसंतमसापहायै नमः ।

ஓம் ஹார்தஸந்தமஸாபஹாயை நமః (171)

हल्लीसलास्यसन्तुष्टा ।

**ஹல்லீஸலாஸ்யஸந்துஷ்டா** 172

கோலாட்டம் அடித்துக்கொண்டு கன்னிகைகள் தாளக்கிரமத்துடன் ஆடும் நர்த்தனங்களினுல் சந்தோஷம் அடைபவள்.

விவரணம்:— 'ஹல்லீஸ' என்ருல் கோலாட்டக் குச்சி. 'லாஸ்யம்' என்பது தாளயுக்தமான நர்த்தனம். "नारीणां मण्डलीनृत्यं बुधा हल्लीसकं विदुः" (பெண்கள் வட்டமிட்டு இடும் நர்த்தனத்தை அறிஞர் 'ஹல்லீஸம்' என்கின்றனர்.)

ओं हल्लीसलास्यसन्तुष्टायै नमः ।

ஓம் ஹல்லீஸலாஸ்யஸந்துஷ்டாயை நமః (172)

हंसमन्त्रार्थरूपिणी ।

**ஹம்ஸமந்த்ரார்த்தரூபிணி** 173

(i) பரமஹம்ஸர்களினுல் உபாஸிக்கப்படும் பிரணவ

மந்த்ரத்தின் தத்வார்த்தமாக விளங்குபவள். அதாவது அந்தத் தத்வார்த்த ஸ்வரூபமாக அறியப்படுபவள்.

(ii) "ஹம்ஸஸ்ஸோஹம்" என்ற அஜபா மந்திரத்தின் தத்வார்த்த ரூபமாக விளங்குபவள்.

விவரணம் :— 'அஜபா' மந்திரத்தைப்பற்றி 142-வது மந்திரத்தின் விவரணத்தில் பார்க்கவும். 'ஹம்ஸ:' என்பதும் 'தத்வமஸி' என்ற வாக்கியமும் ஒரே உண்மையைத்தான் குறிக்கின்றன. 'தத்வமஸி' என்றால் 'நீயே அது' 'ஹம்ஸ:' என்றால் 'நானே அவன்' என்பது. இப்பொழுது, 'நான்' 'நீ' 'அவன் அல்லது அது' என்பவை உண்மையில் ஒன்றேதான் என்ற பொருள் கிடைக்கிறது. 'நான்', 'நீ', 'அவன் அல்லது அது' என்பன தத்தம் கால, தேச, குண, வடிவ இயல்புகளினால் வேற்றுமைப்பட்டுள்ளனவாயினும், இவ்வேற்றுமைகளை அகற்றிவிட்டால், வேறுபாடற்ற ஒரே பரமாத்ம வஸ்து இம்மூன்றிலும் அடிப்படையாயிருப்பதாக விளங்கும். வேற்றுமைகளை அகற்றுவதற்கு **भागत्यागः** என்று வேதாந்திகள் கூறுவர். 'நான்', 'நீ', 'அவன் அல்லது அது' என்ற பதங்களை 'பாகத்யாகம்' என்ற முறையில் ஸ்புடம் அல்லது பரிசோதனை செய்வதால், ஏகமாயும், நித்தியமாயும், நிர்க்குணமாயும், நிஷ்பிரபஞ்சமாயுமுள்ள பரமாத்ம வஸ்து ஸித்திக்கும்.

**ओं हंसमन्त्रार्थरूपिण्यै नमः ।**

ஓம் ஹம்ஸமந்த்ரார்த்தரூபிண்யை நம: (173)

**हानोपादाननिर्मुक्ता हर्षिणी हरिसोदरी ।**

**हाहाहूहूमुखस्तुत्या हानिवृद्धिविवर्जिता ॥ ३३ ॥**

ஹாநோபாதாந நிர்முக்தா ஹர்ஷிணீ ஹரிஸோதரீ ।
ஹாஹா ஹூஹூ முகஸ்துத்யா ஹாநிவ்ருத்தி
விவர்ஜிதா ॥

**हानोपादाननिर्मुक्ता ।**

ஹாநோபாதாநநிர்முக்தா 174

அப்ரியத்தைத் தள்ளுவதினின்றும், ப்ரியத்தை ஏற்றுக் கொள்வதனின்றும் முற்றும் விலகினவள்.

விவரணம்:— அப்ரியமான வஸ்துக்களில் வெறுப்பு அடைந்து, அவற்றை அகற்றுவதற்கு 'ஹாநம்' என்று பெயர். ப்ரியமான வஸ்துக்களை ஈட்டுவதற்கு 'உபாதானம்' என்று பெயர். பராசக்திக்கு விருப்பு, வெறுப்பு முதலிய சித்த வேறுபாடுகள் கிடையாதாதலின், 'ஹாநம்', 'உபாதானம்' என்பவையற்றவள் என்று சொல்லப் படுகிறாள்.

[1] 'अप्राणो ह्यमनाः शुभ्रः' (ப்ராண, மனோவிவகாரங்கள் அற்று, தூய வடிவாய்ப் பரமாத்மா இருக்கிறான்)

[2] 'अकायम्', [3] 'अशरीरं वाव संतं न प्रियाप्रिये स्पृशतः'

'(சரீரம் முதலிய அவயவங்கள் அற்று இருப்பதால், ப்ரியம், அப்ரியம் என்பவை பரமாத்மாவுக்குக் கிடையாது')

[4] 'विमुक्तश्च विमुच्यते' '(ப்ரியம், அப்ரியம் என்பன போன்ற முரண்பாடுள்ள இரட்டிப்புக்களினின்றும்) விடுபட்டவன் முக்தியைப் பெறுகிறான்.

ओं हानोपादाननिर्मुक्तायै नमः ।

ஓம் ஹாநோபாதாநநிர்முக்தாயை நம: (174)

हर्षिणी ।

**ஹர்ஷிணீ** 175

ஆனந்தத்தைத் தருபவள்.

விவரணம்:— நித்யானந்தமென்ற முக்தியைத் தருபவள் என்றும் பொருள்படுத்தலாம். பேரின்பவடிவாய் நின்று, அதன் நிழல்போல் நிற்கும் சிற்றின்ப அநுபவத்திற்கு காரணமாயிருப்பவள் என்றும் பொருள்படுத்தலாம்.

[2] 'एष ह्येवानन्दयाति' (பரமாத்மாவே ஆனந்தத்தைத் தருகிறான்). —தைத்திரீயோபநிஷத்.

---

1. முண்டகோபநிஷத் 2-1-2. 2. ஈசாவாஸ்யோபநிஷத். 3. சாந்தோக்யம் 8-12. 4. கடோபநிஷத் 5-1,

ओं हर्षिण्यै नमः ।

ஓம் ஹர்ஷிண்யை நமஃ (175)

हरिसोदरी ।

**ஹரிஸோதரீ** 176

(i) கிருஷ்ணவதாரம் எடுத்த மஹாவிஷ்ணுவுக்கு ஸமானயாயுள்ளவள். ('உதரம்' என்பதற்குச் சிறிதளவு வேற்றுமை என்று பொருள் வைத்து இந்த அர்த்தம் கிடைக்கிறது.)

(ii) பரமாத்மாவே ஆயினும், அல்ப மாயா ஸம்பந்தமுடையவள்.

விவரணம் :—'ஹரிஃ' என்பதற்கு மஹாவிஷ்ணு எடுத்த அவதாரமாகிய கிருஷ்ணபரமாத்ம வஸ்து என்று பொருள்படுத்தி, 'ஹரிஃ' என்ற பதம் பரமாத்மாவைக் குறிப்பதாகக் கொள்ளவேண்டும். 'அரம்' என்ருல் 'மாயை'. மாயா ஸம்பந்தத்திஞல் ஜீவாத்மா போல் ஆகிருன். இந்த தன்மையை உண்டுபண்ணுபவள் பராசக்தி. ஆகையால் அவளைப் பரமாத்மாவின் மாயை என்ற உபாதியுடன் கூடியவளாகச் சொல்லப்படுகிறது. ஜகத்காரணஞக விளங்கும்பொழுது, பரமாத்மா ஈசுவரன் என்று அழைக்கப்படுகிருன்.

अपरेयं इतस्त्वन्यां प्रकृतिं विद्धि मे पराम् ।
जीवभूतां महाबाहो ययेदं धार्यते जगत् ॥ (गी. ७-५)

என்பது கீதா வசனம். இதன் பொருளை முன்னுரையில் பார்க்கவும்.

'देवात्मशक्तिं स्वगुणैर्निगूढाम्' (பரமாத்மா தன் மாயா சக்தியிஞல் எல்லா தேவதா சக்திகளையும் வசப் படுத்துகிருர்.) —சுவேதாசுவேதரோபநிஷத்

ओं हरिसोदर्यै नमः ।

ஓம் ஹரிஸோதர்யை நமஃ (176)

हाहाहूहूमुखस्तुत्या ।

**ஹாஹாஹூஹூமுகஸ்துத்யா** 177

'ஹாஹா' ஹூஹூ' என்ற உத்தம கந்தர்வர்களால் புகழ் பாடப்படுபவள்.

விவரணம்:— இங்கே 'ஸ்துதி' அல்லது 'புகழ் உரை' என்பதால் இல்லாத நற்குணங்களை இருப்பதுபோல் உரைப்பதன்று. உள்ளதை உள்ளபடி உரைத்தலேயாகும்.

ॐ ह्राहाहूहूमुखस्तुत्यायै नमः ।

ஓம் ஹாஹாஹூஹூமுகஸ்துத்யாயை நம: (177)

**ह्रानिवृद्धिविवर्जिता ।**

**ஹாநிவ்ருத்திவிவர்ஜிதா** 178

குறைதல், வளருதல் முதலிய மாறுபாடுகள் அற்றவள்.

விவரணம்:— அவனவன் கர்மாவை அனுசரித்துச் சரீர, அவயவ ஸம்பந்தமான குறைதல், வளருதல் முதலிய விகாரங்கள் உண்டாகின்றன. பராசக்திக்கு கர்மாவும் அவயவங்களும் இல்லாததால், இந்த மாறுபாடுகள் இல்லை யென்பது கருத்து. என்றும் ஒரேநிலையில் இருக்கிறாள் என்பது.

ॐ ह्रानिवृद्धिविवर्जितायै नमः ।

ஓம் ஹாநிவ்ருத்திவிவர்ஜிதாயை நம: (178)

ह्य्यङ्गवीनहृदया हरिगोपारुणांशुका ।

लकाराख्या लतापूज्या लयस्थित्युद्भवेश्वरी ॥ ३४ ॥

ஹய்யங்கவீந ஹ்ருதயா ஹரிகோபாருணாம்சுகா ।

லகாராக்யா லதாபூஜ்யா லய ஸ்தித்யுத்பவேச்வரீ ॥

**ह्य्यङ्गवीनहृदया ।**

**ஹய்யங்கவீநஹ்ருதயா** 179

(i) வெண்ணெய்போல் லகுவாய் உருகும் தன்மை வாய்ந்த ஹ்ருதயத்துடன் கூடியவள். மனத்தில் கருணை ரஸத்துடன் கூடியவள்.

விவரணம்:— பராசக்திக்கு ஹ்ருதயமென்ற அவயவம் இல்லாதபோதிலும் உலகிலுள்ள எல்லாமாகவும் அவள்

இருப்பதைக்கொண்டு ஹ்ருதயமுள்ளவளாகக் கூறப் படுகிறது.

(ii) ("अवाक् अमनाः" என்ற சுருதி "வாக்கு மனம் இல்லாதது" என்று கூறுவதால்) இங்கு ஹ்ருதயம் என்ற பதத்திற்கு தயை என்ற பொருளை வைத்து ஸ்ருஷ்டி ஸங்கல்பம்போல மாயையின் பரிணாமமான தயாவிருத்தி யுடன் கூடியவள் என்று பொருள் கூறலாம்.

ओं ह्यङ्गवीनहृदयायै नमः ।

ஓம் ஹய்யங்கவீநஹ்ருதயாயை நமः (179)

**हरिगोपारुणांशुका ।**

**ஹரிகோபாருணாம்ஶுகா** 180

(i) 'ஹரிகோபம்', அல்லது 'இந்திர கோபம்' என்ற பூச்சியைப்போல் சிவந்த ஆடையை அணிந்தவள்.

(ii) 'இந்திர கோபம்' என்ற பூச்சியைப்போல் சிவந்த காந்தியையுடையவள்.

விவரணம் :— 'இந்திரகோபம்' என்ற பூச்சிகள் திருவாதிரை, மகம் என்ற இரண்டு நக்ஷத்திரங்களில் மழை காலத்தில் உண்டாகின்றனவென்று சொல்லப்படுகிறது. அவைகளுக்கு எட்டு கால்கள் உள்ளன. நல்ல சிவப்பு வர்ணமும், மென்மையாயுள்ள சரீரமுங்கூடிய ஒருவகைப் பூச்சி.

ओं हरिगोपारुणांशुकायै नमः ।

ஓம் ஹரிகோபாருணாம்ஶுகாயை நமः (180)

**लकाराख्या ।**

**லகாராக்யா** 181

(i) 'ல' என்ற அக்ஷரத்துடன்கூடிய மூலமந்த்ரம் யாரைக் குறிக்கிறதோ அவள்.

விவரணம் :— முன்னுரையில் பஞ்சதசாக்ஷரீ வித்யை யின் அமைப்பைப் பற்றிய விவரணத்தைப் பார்க்கவும்.

(ii) 'ல' என்பது தேவேந்திரனுக்கு உரித்தான பீஜாக்ஷரம், அதன் பொருளாக விளங்குபவள் என்பது

மற்றொரு பொருள். 'सैन्द्रः' (பரமாத்மாவே இந்திரன்) என்ற சுருதி வாக்கியத்தைக் கவனிக்கவும்.

(iii) யாரிடத்தில் மாயை லயமடைகிறதோ அவள்.

விவரணம்:— 'லம்' என்பதற்கு 64-வது மந்திரத்தில் கூறியதுபோல 'மறைதல்' என்ற பொருளை வைத்து, மூன்றாவது அர்த்தம் கிடைக்கிறது.

**ॐ लकाराख्यायै नमः ।**

ஓம் லகாராக்யாயை நமஃ (181)

**लतापूज्या ।**

**லதாபூஜ்யா** 182

(i) என்றும் நிலைத்திருக்கும் மாங்கல்யத்தைப்பெற, அருந்ததி முதலிய உத்தம பதிவிரதைகளினால் இஷ்ட தேவ்தா ஸ்வரூபமாகப் பூஜிக்கப்படுபவள்.

விவரணம்:— 'லதா' என்பதற்கு 'அதிவிநயத்துடன் வணங்குபவர்கள்' என்று பொருள். ஆகையால் உத்தம பதிவிரதைகளைக் குறிக்கிறது.

**'समाराध्य महेशानीं भुक्तिं मुक्तिं च विन्दति'** மஹேசுவரியை நன்கு ஆராதிப்பதால், எல்லா போகங்களையும், கடைசியில் மோக்ஷத்தையும் அடைகிறான்.

(ii) வயல், வனம் முதலியவற்றிற்கு அதிஷ்டான தேவதையாய் விளங்கிக்கொண்டு, தளிர், கொடி முதலிய வன வஸ்துக்களால் அலங்கரிக்கப்படுபவள்.

விவரணம்:— சபரீ, வனதுர்க்கை முதலிய சக்திகள் பராசக்தியின் விசேஷ அம்சங்களேயாவர். அவர்களுக்கு நெற்கதிர், பூக்கள், கொடிகள் முதலியவையே பூஜா திரவியங்கள் ஆவன. அவர்களுக்கு செய்யும் பூஜையைப் பராசக்தியே ஏற்றுக்கொண்டு தக்க பலனை அளிக்கிறாள் என்பது கருத்து. அதிவிருஷ்டி, அநாவிருஷ்டி, பூச்சி, புழுக்களினால் சேதம் ஒன்றும் உண்டாகா.

**ॐ लतापूज्यायै नमः ।**

ஓம் லதாபூஜ்யாயை நமஃ (182)

लयस्थित्युद्भवेश्वरी ।

லயஸ்திதியுத்பவேச்வரீ 188

ஜகத்தின் நாசம், இருப்பு, பிறப்பு மூன்றிற்கும் ஈசுவரியாக விளங்குபவள்.

விவரணம் :— சொல்லவேண்டிய வரிசைக் கிரமம், 'பிறப்பு, இருப்பு, அழிவு' என்றிருக்க, தலைகீழாகச் சொன்னதன் கருத்து என்னவென்னின், ஜகத்தின் தோற்றமும் அழிவும் எண்ணில் அடங்காத தடவை ஆகியிருக்கின்றன. இது அநாதியானது. அநாதியாக இருக்கும் நிகழ்ச்சிக்கு 'முன்' 'பின்' என்ற பாகுபாடு ஏது? ஆகையால், தலை கீழாகச் சொன்னதால் ஜகத்தின் சரித்திரம் அநாதியானது என்று விளங்குகிறது.

செயற்படுபொருளாக ஜகத் தோன்றும்பொழுது அதன் 'உத்பவம்' எனப்படுகிறது. காலபரிமாணத்துடன், அறிவின் சக்திக்கு உட்பட்டிருக்கும்பொழுது 'ஸ்திதி' எனப்படுகிறது. காரணத்தில் காரியமாயுள்ள 'ஜகத்' மறையும்பொழுது 'லயம்' என்கிறார்கள். இம்மூன்றும் அசேதன வஸ்துவிலிருந்து உண்டாகாவாகையால், ஒரு சேதனப்பொருளோ, பல சேதனப் பொருள்களோ ஜகத்தின் காரணமாக இருத்தல் வேண்டும். ஆனால்

'यतो वा इमानि भूतानि जायन्ते' — तैत्तिरीयोपनिषत् )

"எதிலிருந்து இந்த எல்லா வஸ்துக்களும் பிறக்கின்றனவோ" என்ற சுருதியில் यतः என்ற சப்தம் ஒருமையில் அமைந்துள்ளதால், ஜகத்தின் சேதன காரணம் ஒன்றேதான் என்று தெரிகிறது

ஆனாலும் பானையைச் செய்யக் குயவனென்ற சேதனனைத் தவிர 'மண்' என்ற பொருள் வேண்டுமே. ஜகத்தின் உற்பத்திக்கு ஈசுவரன் என்ற சேதனனைத் தவிர மண், நீர், நெருப்பு முதலிய பிரகிருதி வஸ்துக்கள் வேண்டுமேயென்றால், பிரகிருதியும் ஈசுவரனை விட்டு வேறானதன்று. ஈசுவரனே சேதனனாகவும், பிரகிருதியாகவும் ஒன்றுசேர்ந்து இருக்கிறான்.

जनिकर्तुः प्रकृतिः (6-2-5) என்பது பாணினியின் சூத்ரம். இதன் கருத்துப்படி, பிரகிருதியும் ஜகத்தின் தோற்றத்திற்குக் காரணமான ஈசுவரனிடமிருந்து பிறக்கிறது வேதாந்திகள் இந்தக் கருத்தை 'ஈசுவரன் நிமித்த காரணமாகவும் உபாதான காரணமாகவும் இருக்கிறன்' என்பார்கள்.

மேலும், ஈசுவரன் ஜகத்தாக உண்மையில் மாறுபாடு அடைகிறுனெனின், அப்படி மாறுபாடு அடையவில்லை. அடைவதாகத் தோற்றம் உண்டாகிறது உண்மையில் மாறுபாடு அடைவதற்குப் 'பரிணமம்' (Real transformation) என்றும் மாறுபாடு அடைவதாகத் தோன்றுவதற்கு 'விவர்த்தம்' (Apparant transformation) என்றும் சொல்லுவார்கள். 'எள்ளு' எண்ணெயாக மாறுவது பரிணமம் சூரியன் அசையும் ஜலத்தில் பிரதிபிம்ப ரூபமாய் பல சூரியர்களாகத் தோன்றுவது விவர்த்தம் எனப்படும். ஈசுவரன் ஜகத்திற்கு விவர்த்தகாரணம் எனப்படுவான்.

ओं लयस्थित्युद्भवेश्वर्यै नमः ।
ஓம் லயஸ்தித்யுத்பவேஶ்வர்யை நம: (183)

लास्यदर्शनसन्तुष्टा लाभालाभविवर्जिता ।
लंघ्येतराज्ञा लावण्यशालिनी लघुसिद्धिदा ॥ ३५ ॥

லாஸ்ய தர்ஶந ஸந்துஷ்டா லாபாலாப விவர்ஜிதா ।
லங்க்யேதராஜ்ஞா லாவண்ய ஶாலிநீ லகுஸித்திதா ॥

लास्यदर्शनसन्तुष्टा ।
**லாஸ்யதர்ஶநஸந்துஷ்டா** 184

(i) ஊர்வசி, ரம்பை முதலிய தேவஸ்திரீகள், தேவதாஸிகள் முதலியோரால், தாள கானங்களுடன் செய்யப்படும் நாட்டியத்தைப் பார்ப்பதனுல் ஸந்தோஷம் அடைபவள். இவ்வித நாட்டியம் பராசக்தியைப் பூஜிப்பதாகவேயாகும்.

(ii) ப்ரபஞ்ச லீலையைக்கண்டு ஆனந்தமடைபவள்.

விவரணம் :— எப்படி அரசன் வேட்டை முதலிய விநோதங்களை அநுபவிப்பதால் ஆனந்தமடைகிருனே, அதைப்போல, பராசக்திக்குப் பிரபஞ்ச நிகழ்ச்சிகளினல் யாதொரு பயனற்றிருப்பினும். ப்ராணிகள் அஞ்ஞான சோகமோஹாதிகளினல் செய்யும் சேஷ்டைகள், மன விகாரத்திஞல் விளையும் முகம் முதலிய அங்கவிகாரங் களாகிய ந்ருத்யம்போன்ற பாவனைகள் எல்லாவற்றையும் பற்றற்று ஸமநிலையுடன் கண்டு களிக்கிருள் என்பது பொருள். ஈசுவரியாதலால் அரசன் எவ்விதம் ஒவ்வொரு வனுக்கும் அவன் திறமையின் அளவுக்குத் தகுந்தபடி பரிசு வழங்குவானே, அதைப்போல் அவனவன் கர்மாவுக்குத் தகுந்தபடி பயனை அளிக்கிருள்.

ॐ लास्यदर्शनसन्तुष्टायै नमः ।

ஓம் லாஸ்யதர்ஶநஸந்துஷ்டாயை நமঃ (184)

लाभालाभविवर्जिता ।

லாபாலாபவிவர்ஜிதா 185

அடையாததை அடைவதும், யத்தனித்தபோதிலும் ஒன்றையடையாதிருத்தலும் அற்றவள்.

விவரணம் :— ஏனெனில் எல்லாம் பராசக்தியின் அதீனமாக இருக்கும்பொழுது அவள் அடையவேண்டிய தென்று ஒன்று இருத்தல் ஏது ?

'न मे पार्थास्ति कर्तव्यं त्रिषु लोकेषु किंचन ।

नानवाप्तमवाप्तव्यं वर्त एव च कर्मणि ॥' (गीता ४-२१)

"மூவுலகங்களிலும் நான் செய்யவேண்டியதும் இது வரை அடையப்படாமல் அடையடவேண்டியதும் ஒன்றும் கிடையாது, அர்ஜுனு !"

ॐ लाभालाभविवर्जितायै नमः ।

ஓம் லாபாலாபவிவர்ஜிதாயை நமঃ (185)

लङ्घ्येतराज्ञा ।

லங்க்யேதராஜ்ஞா 186

(i) குணவேற்றுமைகளுக்கு உட்பட்ட ஜீவராசிகளுக்கு உரித்தான உபாஸனு விதிகள், கர்மானுஷ்டான விதிகள் முதலியவைகளுக்கு அப்பால் இருப்பவள்.

விவரணம் :— 'ஆக்ஞை'யென்ருல் விதிரூபமான பிரேரணைகள். இவைகள் ஸத்வ, ரஜஸ், தமோகுணங்களைப் பெற்றுள்ள ஜீவர்களுக்கே விதிக்கப்பட்டுள்ளன. பராசக்தி சுத்த சைதன்ய வடிவமாதலால், இந்த விதிகள் அவள்பால் பொருத்தமற்றவையெனக் கருத்து.

(ii) தனக்கு அன்னியமான சக்திகளுடைய ஆக்ஞைக்கு உட்படாதவள்.

விவரணம் :— எல்லாச் சக்திகளும் தனக்கு உட்பட்டவைகளாதலால், அன்னிய சக்தியென்பதும், அதன் ஆக்ஞையென்பதும் எங்ஙனம் உண்டாகும்? [1] '**सर्वस्याधिपतिः सर्वस्येशानः**' என்பது சுருதி. 'பரமாத்மா அனைத்திற்கும் அதிபதி, அனைத்திற்கும் ஈசுவரன் என்று பொருள்.

ओं लंघ्येतराज्ञायै नमः ।

ஓம் லங்க்யேதராஜ்ஞாயை நம: (186)

**लावण्यशालिनी ।**

**லாவண்யசாலிநீ** 187

(i) மிகுந்த அழகுடன் விளங்குபவள். (பரமானந்த ஸ்வரூபிணியாதலால் எல்லோராலும் மிகுந்த அன்புடன் பாராட்டப்படுபவள்.)

(ii) (தனது சரீரத்திலுள்ள எல்லா அவயவங்களிலும்) மிகுந்த அழகு வாய்ந்தவள். (பராசக்தியின் வடிவத்தைத் தியானிக்கும்பொழுது, உபாஸகன் இவ்விதமாய்த் தியானிக்கிருன் என்பது கருத்து. ஸௌந்தர்யலஹரியில் பராசக்தியின் வர்ணனைகளைக் கவனிக்கவும்.)

ओं लावण्यशालिन्यै नमः ।

ஓம் லாவண்யசாலிந்யை நம: (187)

---

1. பிருஹதாரண்யகம் 4-4-22.

लघुसिद्धिदा ।

**லகுஸித்திதா** 188

(i) (தன்னை அண்டுபவர்களுடைய) கோரிக்கைகளை எளிதாக நிறைவேற்றிவைப்பவள்.

விவரணம் :— பராசக்தியின் மிகுந்த கருணையும், மிகுந்த வல்லமையும் இந்த மந்திரத்தினால் குறிக்கப் படுகின்றன.

(ii) 'லகிமா' 'மஹிமா' முதலிய எட்டு வகையான ஐசுவரியங்களையும் கொடுப்பவள்.

விவரணம் :— 47-ம் மந்திரத்தினுடைய விளக்கத்தைப் பார்க்கவும்.

(iii) அஃறிணையாகிய ஜீவராசிகளுக்குங்கூட முக்தியைக் கொடுப்பவள்.

விவரணம் :— மாந்தர், கந்தர்வர் முதலியவராய்ப் பிறந்துங்கூட, சிலர் கர்மவசத்தினால் நீசமாகிய மறு பிறப்புக்களையெடுக்க நேரிடுகிறது. அவர்களுக்குங்கூட பாபம் அழிந்தவுடன், தத்வஞானத்தை நல்கிப் பரம பதத்தைப் பராசக்தி கொடுக்கிறாள் என்பது கருத்து. ஜம்புகேசுவரம்போன்ற பல தேவாலயங்களின் ஸ்தல புராணங்களில், சிலந்தி, மயில் முதலிய ஜந்துக்களும் முக்தி அடைந்தவிதம் வர்ணிக்கப்பட்டிருக்கிறது.

ओं लघुसिद्धिदायै नमः ।

ஓம் லகுஸித்திதாயை நம: (188)

लाक्षारससवर्णाभा लक्ष्मणाग्रजपूजिता ।

लभ्येतरा लब्धभक्तिसुलभा लाङ्गलायुधा ॥ ३६ ॥

லாக்ஷாரஸஸவர்ணாபா லக்ஷ்மணாக்ரஜ பூஜிதா ।

லப்யேதரா லப்த பக்தி ஸுலபா லாங்கலாயுதா ॥

लाक्षारससवर्णाभा ।

**லாக்ஷாரஸஸவர்ணாபா** 189

நல்ல செவ்வரக்குக்கு ஒப்பான சிவந்த மேனியை உடையவள்.

ओं लाक्षारससवर्णाभायै नमः ।

ஓம் லாக்ஷாரஸஸவர்ணபாயை நம: (189)

लक्ष्मणाग्रजपूजिता ।

**லக்ஷ்மணுக்ரஜபூஜிதா** 190

ஸ்ரீ ராம, பரதர்களால் பக்தியுடன் பூஜிக்கப்படுபவள்.

விவரணம்:— ராமனுடைய ஆசாரம், நடத்தை முதலியவற்றை அவர்களுடைய தம்பிகள் எல்லோரும் பின்பற்றிவந்ததால் சக்ரவர்த்தித் திருமக்களெல்லோராலும் அவர்கள் உறவினர் அனைவராலுங்கூடப் பராசக்தி பூஜிக்கப் பட்டவள் என்ற பொருள் விளங்குகிறது. 'சிவலிங்க பிரதிஷ்டாதா' என்று ஸ்ரீராமனுக்குக் காரணப் பெயர் ஒன்று உண்டு. 'அனந்தசயனம்' என்ற திருவனந்த புரத்தில் ஸ்ரீ பத்மனபஸ்வாமி வலது கையால் லிங்கார்ச்சனை பண்ணுவதைக் காணலாம். 'லிங்கம்' என்பது எவ்விதம் பரமாத்மாவைக் குறிக்கிறது என்பதை 65-ம் மந்திரத்தின் விளக்கத்தில் காணலாம்.

ओं लक्ष्मणाग्रजपूजितायै नमः ।

ஓம் லக்ஷ்மணுக்ரஜபூஜிதாயை நம: (190)

लभ्येतरा ।

**லப்யேதரா** 191

(i) (கர்மானுஷ்டானம், உபாஸனை முதலியவைகளினுல்) அடையப்படும் பலன்களினின்றும் முற்றும் வேறுபட்டவள்.

விவரணம்:— அதாவது ஒருவனிடத்தில் இல்லாத ஒரு பலனைப் பெறுவதுபோல், பராசக்தியை அடைதல் என்பது பொருந்தாது. ஏனெனில் அவள் நமது அந்தராத்மாவாக எப்பொழுதும் விளங்கிக்கொண்டு இருக்கிருள். அவளது இருப்பை நாம் அஞ்ஞானத்தினுல் மறந்திருக்கிறோம். ஒருவள் கழுத்தில் அணிந்திருக்கும் கண்டஸரத்தை ஊர் எங்கும் தேடிப்பார்த்துக் கடைசியாக

தன் கழுத்திலேயே அது இருப்பதாக எப்படி அறிகிறுளோ, அதைப்போல் நம்மிடத்தில் எப்பொழுதும் இருக்கும் பரமாத்மாவை, ஞானேதயமானபொழுது அறிகிறோம். அதுவே மோக்ஷம் எனப்படும். பராசக்தி, நாம் கர்ம உபாஸனை முதலியவற்றின் பலன்களை அடைவதுபோல அடையப்படுகிருள் என்பது பொருந்தாது.

மேலும் கர்ம, உபாஸனை முதலியவற்றின் பலன்கள் நான்கு வகையாகும்: அவை (1) உத்பத்தி (2) சென்று அடைதல் (3) மாறுபாட்டை அடைதல் (4) ஸம்ஸ்காரம் எனப்படுவன. இவைகளுக்கு உதாரணமாக முறையே (1) வீடு, மக்கள் முதலியன (2) ஸ்வர்க்கம் முதலியன (3) அரிசி அன்னமாதல் (4) ஸ்நானம் செய்வது, அணிகலம் பூணுதலையும் சொல்லலாம். பராசக்தி (1) என்றும் நிலைத்து இருப்பதாலும் (2) அந்தர்யாமியாக எங்கும் இருப்பதாலும் (3) நிர்க்குண வடிவமாதலாலும் (4) சுத்தசைதன்ய மாதலாலும், முற்கூறிய நான்கு பலன்களினின்றும் முற்றும் வேற்றுமைப்பட்டவள். [1] 'तत्सत्यं स आत्मा' 'அதுவே என்றும் நிலைத்திருக்கும் ஆத்மவஸ்து'.

[2] नित्यो नित्यानां चेतनश्चेतनानां एको बहूनां यो विदधाति कामान् तमात्मस्थम् ।

"அழிவற்ற பொருள்களுடைய நிலைத்திருக்கும் தன்மையாயும், அறிவுடன் கூடிய பொருள்களுடைய உள் அறிவாயும், பற்பலவாய்த் தோன்றும் வஸ்துக்களுடைய ஒரே ஆதாரமாகவும், கோரிக்கைகளை நிறைவேற்றும் சக்தியாகவும் விளங்கும் வஸ்துவே ஆத்மா" [3] यत्साक्षादपरोक्षाद्ब्रह्म "நமது அறிவுக்கு நேர்முகமாக விளங்குவதால் அதுவே பிரம்மம்".

(ii) யாரிடமிருந்து தர்மம், அர்த்தம், காமம் என்ற மூன்று புருஷார்த்தங்களும், அடையப்படுகின்றனவோ அந்தப் பராசக்தி.

1. சாந்தோக்யம் 6. 2. கடோபநிஷத் 5-13.
3. பிருஹதாரண்யகம் 3-4.

விவரணம் :— நான்காவது புருஷார்த்தமாகிய மோக்ஷம் அல்லது வீடு என்பதாய்ப் பராசக்தியே இருக்கிருள். மற்ற மூன்றையும் அவள் பக்தர்களுக்கு அளிக்கிருள். முற்கூறிய 2-வது சுருதிவாக்கியத்தைப் பார்க்கவும்.

ओं लभ्येतरायै नमः ।

ஓம் லப்யேதராயை நம: (191)

**लब्धभक्तिसुलभा ।**

**லப்தபக்திஸுலபா** 192

(i) பக்தி பாவனையினால், எளிதில் அடையப்படுபவள்.

விவரணம் :— பக்தியென்பது இருவகைப்படும். அவை ஸாமான்ய பக்தி, விசேஷ பக்தி என்பன. ஸாமான்ய பக்தியென்பது, மூன்று காரணங்களினால் உண்டாவன. ஒருவன் கஷ்டப்படும்பொழுது, கஷ்ட நிவர்த்தி உண்டாவதற்காக ஈசுவரனைப் பஜிப்பான். ஞானமடையவேண்டுமென்ற அவா மேற்கொண்டு சிலர் பக்தி செய்வார்கள். ஒரு பொருளையடைய விரும்புபவனும் பக்தியில் ஈடுபடுவான். இம்மூன்று வகையான பக்தர்களுக்கும் அவரவர் கர்மாவை அநுஸரித்துப் பரமாத்மா, அந்தர்யாமியாக இருந்து பலனையளிக்கிருர்.

தத்துவஞானத்தையடைந்தவன், பிரம்மத்தை நேர்முகமாக அறிந்தவனுதலால், தானே பிரம்மமென்ற உணர்ச்சியுடன் செய்யும் பக்தி விசேஷ பக்தி எனப்படும். இவனைப்பற்றிக் கீதையில் பகவான் [1] एकभक्तिर्विशिष्यते "இடைவிடாது பக்தியைச் செய்யும் இவன் மிகவும் சிறந்தவன்" என்றும், [2] ज्ञानी तु आत्मैव मे मतम् 'ஞானியே நான் என்பது என்னுடைய தீர்மானம்' என்றும் கூறுகிருர். இவன் பராசக்தியை எளிதில் அடைகிருன் என்பதன் கருத்து, இவன் தானே பரமாத்ம வஸ்துவாக இருக்கும் உண்மையை உணருகிருன் என்பதேயாகும்.

1. கீதை 7-17. 2. கீதை 7-18.

(ii) பராசக்தி ஒவ்வொருவனிடத்திலும் அந்தர்யாமியாக விளங்கிக்கொண்டிருப்பினும், பக்தியினால் மட்டுமே அவள் எளிதில் அறியப்படுகிறாள்.

விவரணம்:— ஞானேதயத்தைத் தருபவள் பராசக்தியே. அவளுடைய கருணையைப்பெற அவள்மீது பக்தி பாராட்டவேண்டும்.

ओं लब्धभक्तिसुलभायै नमः ।

ஓம் லப்தபக்தி ஸுலபாயை நம: (192)

लाङ्गलायुधा ।

**லாங்கலாயுதா** 193

(i) கலப்பையை ஆயுதமாக உடையவள்.

விவரணம்:—ஆதிசேஷன் பலராமராகப் பிறந்தார் என்பது புராணம். பலராமனுக்குக் கலப்பை ஆயுதம். பரமாத்மா [1] अनंतश्चास्मि नागानां 'ஸர்ப்பங்களுக்குள் நான் ஆதிசேஷன்' என்று கீதையில் சொல்லுவதால், ஆதிசேஷனுக்குக் கலப்பை ஆயுதம் என்று கல்பித்து, பராசக்திக்கும் கலப்பை ஆயுதமாகக் கல்பிக்கப்படுகிறது.

(ii) கலப்பை எப்படிப் பூமியைத் தாவரங்கள் விளையும்படி பக்குவப்படுத்துகிறதோ அதைப்போல், தன்னை அண்டுபவர்கள் மனத்தைப் பக்குவம் அடையும்படி செய்து ஞானம் விளையும்படி பராசக்தி செய்கிறாள் என்றும் பொருள்படுத்தலாம்.

ओं लाङ्गलायुधायै नमः ।

ஓம் லாங்கலாயுதாயை நம: (193;

लग्नचामरहस्तश्रीशारदापरिवीजिता ।
लज्जापदसमाराध्या लंपटा लकुलेश्वरी ॥ ३७ ॥

லக்ந சாமர ஹஸ்த ஸ்ரீ ஶாரதா பரிவீஜிதா ।
லஜ்ஜாபத ஸமாராத்யா லம்படா லகுலேஶ்வரீ ॥

1. கீதை 10-29.

लग्नचामरहस्तश्रीशारदापरिवीजिता ।

**லக்நசாமரஹஸ்த ஸ்ரீ ஶாரதா பரிவீஜிதா** 194

மஹாலக்ஷ்மியாலும், சாரதா தேவியினாலும், கைகளில் ஏந்திய சாமரங்களினால் வீசப்பட்டுப்பணிவிடை செய்யப் படுபவள்.

விவரணம் :—ஸர்வக்ஞபீடம் சாரதாவின் வாஸஸ்தல மாகச் சங்கர விஜயத்தில் சொல்லப்படுகிறது. ஆகையால் சாரதாதேவி ஞானத்தைக் குறிக்கிறாள். மஹாலக்ஷ்மி அஷ்ட ஐசுவரியங்களையும் குறிக்கிறாள். ஞானமும், அஷ்ட ஐசுவரியங்களும் பராசக்தியின் அதீனமாக இருக்கின்றன என்பது பொருள்.

ओं लग्नचामरहस्तश्रीशारदापरिवीजितायै नमः ।

ஓம் லக்நசாமரஹஸ்த ஸ்ரீ ஶாரதா
பரிவீஜிதாயை நம: (194)

लज्जापदसमाराध्या ।

**லஜ்ஜாபதஸமாராத்யா** 195

(i) மனத்தினால் நல்லவண்ணமாகத் தியானிப்பதற்கு உரியவள்.

விவரணம் :— 'லஜ்ஜை' என்பது மனோதர்மங்களில் ஒன்று. அது இயற்கையில் அமைந்துள்ள ஒருவனது நாணத்தையும் குறிக்கும். அல்லது அகிருத்யத்தைச் செய்துவிட்டால், மனத்தில் வெறுப்பு உண்டாகி, அதை மறைக்க முயல்வதும் ஆகும். எப்படியிருப்பினும் அதன் இருப்பிடம் மனம், அல்லது அந்தக்கரணம். ஆகையால் 'லஜ்ஜாபதம்' என்ற பதத்தினால் 'மனது' என்ற பொருள் கிடைக்கிறது. ஏகாக்கிர சித்தத்துடன் பராசக்தியைத் தியானம் செய்யவேண்டும் என்பது பொருள். 28-வது மந்திரத்தைப் பார்க்கவும்.

[1] कामः सङ्कल्पो विचिकित्सा श्रद्धाऽश्रद्धा धृतिरधृतिर्ह्रीर्धीर्भीरित्येतत् सर्वं मन एव ।

---

1. பிருஹதாரண்யகம் 1-5-3.

"இச்சை, ஸங்கல்பம், ஸம்சயம், சிரத்தை, அசிரத்தை, தைரியம், அதைரியம், லஜ்ஜை, புத்திநுட்பம், பயம், என்பவை அனைத்தும் மனத்தின் தன்மைகளே".

[1]य आत्मनि तिष्ठन्नन्तरो यमयति

"எந்தப் பரமாத்மா அந்தர்யாமியாக நின்று சித்த விருத்திகளை அடக்கியாளுகிறதோ"

[2]गुहाहितं गह्वरेष्ठं पुराणम्

"எந்த அநாதி வஸ்து ஹ்ருதய குஹையில் இருந்து கொண்டு சிந்தையைப் பிரேரணை செய்கிறதோ"

[3]तमात्मस्थं येऽनुपश्यन्ति धीराः

"எவர்கள் தமக்குள் விளங்கும் பொருளை நேர்முகமாக அறிகிறார்களோ, அவர்களே தீரர்கள்"

(ii) ஜீவாத்மாக்களால் யாகம், முதலியவைகளினால் பூஜிக்கப்படுபவள்.

விவரணம்:— 'லஜ்ஜை' என்பது ஜீவாத்மாவின் இயல்புகளில் ஒன்றாதலால், 'லஜ்ஜாபதம்' என்பதற்கு 'ஜீவசக்கரம்' 'ஜீவமண்டலம்' என்றும் பொருள் படுத்தலாம். ஜீவராசிகளில் பராசக்தி ஆனந்தவடிவமாகப் பிரகாசிப்பதாலும், அவளை உபாஸிப்பதால் ஆனந்தம் விளைவதாலும், யாக ஜபாதிகளினால், அவள் ஜீவாத்மாக்களால் சிரத்தையுடன் ஆராதிக்கப்படுகிறாள் என்பது பொருள்.

ओं लज्जापदसमाराध्यायै नमः ।

ஓம் லஜ்ஜாபதஸமாராத்யாயை நமः (195)

लंपटा ।

லம்படா 196

(i) 'மாயை' என்ற அவித்யை யாருக்கு வசப்பட்டு இருக்கிறதோ அந்தப் பராசக்தி.

1. பிருஹதாரண்யகம் 3-7. 2. கடவல்லி 2-12
3. கடவல்லி 5-12

விவரணம் :— ‘லம்’ என்பது ப்ருதிவியின் பீஜாக்ஷரம். ஆகையால் உபலக்ஷணமாக ஜகத்தையே குறிக்கிறது. ‘படம்’ என்றால் திரை, அதாவது மறைக்கும் வஸ்து. ஜகத்தின் தத்வத்தை எது மறைக்கிறதோ அது ‘லம்படம்’. அதுவே அவித்யை என்கிற ‘மாயை’. அது பராசக்திக்கு வசப்பட்டிருக்கிறது.

(ii) கர்மானுஷ்டானங்கள், உபாஸனை முதலியவற்றின் பலனைக்கொடுப்பதில் சிறிது காலதாமதம் செய்பவள்.

விவரணம் :— ‘லம்பட’ என்றால் சோம்பல் என்று பொருள். கர்மா, உபாஸனைகளைச் செய்ய ஆரம்பித்தால் இடையூறுகள் எவ்வளவோ உண்டாகும். இடையூறுகளைப் பொருட்படுத்தாது அவைகளைச் செய்தபோதிலும் பலசித்தி விரைவில் உண்டாவதில்லை. ஓர் அரசனை அண்டிப் பணிவிடை செய்யும் பணியாட்களிடம் அரசனுக்குக் கருணை உண்டாகி, அவர்களுக்கு நன்மை பயக்கவேண்டுமென்ற கருத்து அரசனிடம் பூர்ணமாயிருந்தாலும் எப்படிச் சோம்பலினால் காலதாமதம் செய்கிறானோ, அதைப்போல், பரமேசுவரன் கருணைபுரிந்து உபாஸகனுக்கு அனுக்கிரஹம் புரிய ஆசைகொண்டாலும், பராசக்தி சிறிது காலதாமதம் உண்டுபண்ணுகிறாள். இதனால் அவளுக்குக் கருணை குறைவு என்றோ, துவேஷம் என்றோ எண்ணக்கூடாது. அரசனுக்குச் சிறிதளவு சோம்பல் இருப்பதுபோல், பரமாத்மாவுக்கும் சிறிது ஆலஸ்யம் இருக்கிறது என்பது உபசாரமாகச் சொல்லப்பட்ட கூற்று. அநுபவத்தில் சிலருக்கு முயற்சியின் அளவு பலப்பிராப்தி உண்டாகாததைப் பார்க்கிறோம்; காலதாமதத்துடன் பலனை அடைவதையும் காண்கிறோம்.

(iii) சுத்த சைதன்யமாக இருக்கும் ஆத்மாவினிடத்தில் ஸத்வ, ரஜஸ், தமோகுணங்களின் விகாரங்களை ஆரோபணம் செய்பவள்.

விவரணம் :— ‘சோம்பல்’ என்பது அந்தக்கரணத்தின் தர்மம். அது உபலக்ஷணமாக அந்தக்கரணத்தின் எல்லாத் தர்மங்களையும் குறிக்கிறது. இந்தத் தர்மங்கள்

சுத்த சைதன்யமான ஆத்மாவைச் சாராமல் இருப்பினும், அத்யாஸம் எனப்படும் மித்யாரோபண புத்தியினுல் ஆத்மாவின் தர்மங்களாகத் தோன்றுகின்றன. இந்தப் பிரமைக்குப் பராசக்தியின் மாயா சக்தியே காரணம் என்பது கருத்து.

[1] मायिनं तु महेश्वरम् "வ்யாமோஹத்தை உண்டு பண்ணுபவன் மஹேசுவரனே".

[2] य एको जालवान् "எவன் ஒருவனுய் நின்று, மந்திர ஜாலக்காரனைப்போல் நாநாவிதத் தோற்றங்களையும் உண்டுபண்ணுகிருனோ"

[3] अज्ञानेनावृतं ज्ञानं "தத்வஞானம் அக்ஞானம் என்ற திரையினுல் மறைக்கப்பட்டிருக்கிறது".

ओं लंपटायै नमः ।
ஓம் லம்படாயை நம: (196)

लकुलेश्वरी ।
லகுலேஶ்வரீ 197

(i) விகாரங்கள் அற்றும், ஈசுவரியாயும் விளங்குபவள்.

விவரணம் :— 'கு' என்ருல் ப்ருதிவீ, அல்லது பூமி. அதனுல் உபலக்ஷணமாக ஜகத்தைக் குறிக்கிறது. 'ஜகத்' எதில் லயமடைகிறதோ அது 'குலம்' என்பது. அதாவது மாயையுடன் சார்ந்திருக்கும் சைதன்யம், பிரளயத்தின் ஆதாரம். 'குலம்' எதில் லயமடைகிறதோ, அது 'லகுலம்', அதாவது மாயை சேராத, உபாதியற்ற சைதன்யம். அதாயும், ஈசுவரியாயும் விளங்குபவள் 'லகுலேசுவரீ'.

[4] यत्प्रयन्ति अभिसंविशन्ति "எதை அடைந்து அத்துடன் ஒன்ருகிவிடுகிறதோ"

(ii) விஷ்ணு ரூபமாயும், ருத்ரனுகவும் விளங்குபவள்.

---

1. சுவேதாச்வதரம் 4-10. 2. சுவேதாச்வதரம் 3-1.
3. கீதை 5-15 4. தைத்திரீய உபநிஷத் ப்ருகுவல்லி

விவரணம் :— ஸுஷும்னு நாடியில் ஆறு சக்கரங்கள் இருக்கின்றன. அவற்றில் மூலாதாரம் கீழேயுள்ள சக்கரம். அதற்கு நடராஜா நர்த்தன ஸுந்தரி இவர்கள் அதிஷ்டான தேவதைகள். இதையடுத்து மேலே இருக்கும் சக்கரங்கள் ஸ்வாதிஷ்டானம், மணிபூரகம் என்பவை. எல்லாச் சக்கரங்களிலும் பராசக்தி அந்த அந்த அதிஷ்டான தேவதையாக விளங்குகிருள். ஸ்வாதிஷ்டான, மணிபூரக சக்கரங்களில் பராசக்தி, விஷ்ணு, ருத்ரன் என்ற சக்திகளாக விளங்குகிருள். 'லகுலம்' என்ற பதத்திற்கு ஸ்வாதிஷ்டானம், மணிபூரகம் என்ற ஸ்தான விசேஷங்கள் என்று பொருள்படுவதால், இரண்டாவது அர்த்தம் கிடைக்கிறது. ஸௌந்தர்யலஹரியில் ஆறு சக்கரங்களும் வர்ணிக்கப் பட்டுள்ளன.

(iii) பஞ்சபூதங்கள் எந்த 'ஸத்' ரூபத்தில் லயம் அடைகின்றனவோ அந்த 'ஸத்' ரூபமாக விளங்குபவள்.

விவரணம் :— சுருதிகளில் பூமி ஜலத்திலும், ஜலம் அக்னியிலும், அக்னி பரமாத்மாவிடத்திலும் லயமடைவதாகக் கூறப்படுகிறது. सदायतनाः सत्प्रतिष्ठाः என்பது சுருதி. அதாவது "எல்லாம் 'ஸத்' என்பதில் அடங்கி 'ஸத்' என்ற பரமாத்மாவை ஆதாரமாகக்கொண்டுள்ளன" என்பது. இவ்விதம் விபூதி சக்திவாய்ந்தவளாகப் பராசக்தி இருக்கிருள்.

ओं लकुलेश्वर्यै नमः ।
ஓம் லகுலேஶ்வர்யை நம: (197)

लब्धमाना लब्धरसा लब्धसंपत्समुन्नतिः ।
ह्रींकारिणी ह्रींकाराद्या ह्रींमध्या ह्रींशिखामणिः ॥ ३८ ॥

லப்த மாநா லப்த ரஸா லப்த ஸம்பத் ஸமுந்நதி: ।
ஹ்ரீங்காரிணீ ஹ்ரீங்காராத்யா ஹ்ரீம்மத்யா
ஹ்ரீம்ஶிகாமணி: ॥

लब्धमाना ।
லப்தமாநா 198

(i) எல்லாப் பிராணிகளும் 'நான், எனது' என்று உணரும் அஹங்காரத்திற்கு அடிப்படையாக உள்ளவள்.

விவரணம் :— எல்லாப் பிராணிகளிடத்திலும் அந்தர்யாமியாக விளங்கும் ஆத்மா ஒன்ருயிருப்பினும், ஒவ்வொரு ஜீவனும் தன்னை இதர ஜீவர்களிடத்தினின்றும் வேறுபட்டதாகக் கருதுகிருன். அதனுல் 'நான், எனது' என்ற உணர்ச்சி உண்டாகிறது. ஆத்மாவிடம் இல்லாத ஒரு தன்மையை அதனிடம் இருப்பதாக ஆரோபணம் செய்கிறது. இதற்கு 'அத்யாஸம்' என்று பெயர். இது அக்ஞானத்திலிருந்து விளையும் பயன். இவ்வித அத்யாஸம் இல்லையாயின் உலகவியவஹாரங்களே இல்லாமல் ஆகிவிடும். பராசக்தி தனது மாயாவிலாஸத்தினுல் இந்த அத்யாஸத்திற்கு அடிப்படையாக இருக்கிருள் என்பது கருத்து.

'अभिमानात्मकः तद्वदहङ्कारः प्रकीर्त्यते' அஹங்காரமென்பது தன்மீதுள்ள அபிமானத்தின் விளைவு. பிறரிடமிருந்து தனிப்பட்டதாக எழும் உணர்ச்சி.

(ii) ஸுகத்தையுண்டுபண்ணும் தன்மைவாய்ந்த, பிறரால் தன்மீது செய்யப்படும் கௌரவம், புகழ், பூஜை, முதலியவற்றை அடைபவள்.

விவரணம் :— 'மான' என்ற பதம் 'பூஜை'யென்று பொருள்படும். ஒருவனிடம் இருக்கும் வித்யை, தனம், நற்குலப் பிறப்பு, அழகு முதலியவற்றைப் பிறர் புகழ்ந்து, அவனைக் கௌரவித்தால், அது அவனுக்கு ஆனந்தத்தை உண்டுபண்ணுகிறது. உண்மையில் இந்த ஆனந்தம், அந்தர்யாமியாயிருக்கும் ஆனந்தவடிவமாகிய பராசக்தியின் ஆனந்தத் தன்மையின் பிரதிபலித்த (reflected feeling) உணர்ச்சியினுலேயே உண்டாகிறது என்பது கருத்து. பராசக்தி அந்தர்யாமியாயிருப்பதாலும், ஆனந்த வடிவமாயிருப்பதாலும், பூஜையையும் அதனுல் ஏற்படும் ஸுகத்தையும் அவள் அடைகிருள் என்று கூறப்படுகிறது.

(iii) வஸ்துக்களின் ரூபபேதங்களை அறிவதற்குக் காரணமாயுள்ளவள்.

விவரணம் :— 'மானம்' என்ற பதத்திற்கு 'அளவு' என்று பொருள் உண்டு. அளவை வைத்துச் 'சிறியது', 'பெரியது', 'உருண்டை', 'சதுரம்' முதலிய உருவ வேற்றுமைகள் உண்டாகின்றன. இந்த வேற்றுமைகளை நாம் உணருவதால், வஸ்துபேதங்களை அறிகிறோம். பராசக்தி 'அளவு' என்ற தன்மையாக விளங்கிக்கொண்டு இவ்வித அறிவுக்குக் காரணமாக இருக்கிறாள் என்பது கருத்து. உண்மையில் பராசக்திக்கு ஒருவிதமான அளவுமில்லாவிட்டாலும் அந்தந்த சரீரத்திலுள்ள அளவுகளைக் கொண்டு இவளும் அளவு உள்ளவள்போல் தோன்றுகிறாள்.

ॐ लब्धमानायै नमः ।

ஓம் லப்தமானாயை நம: (198)

लब्धरसा । 199

லப்தரஸா

(i) ஆனந்தஸ்வரூபமாக விளங்குபவள்.

விவரணம் :— மிகவும் பிரியமான வஸ்துவை ரஸம் பொருந்தியது என்று சொல்லுவது வழக்கம். அதுவே ஆனந்தமாகும். ஆனந்தத்தைவிடப் பிரியமானது ஒன்றும் இல்லை. [1] 'रसो वै सः' என்பது சுருதி. "பரமாத்மா ஆனந்தரூபி" என்பது பொருள்.

(ii) நவரஸங்களில் உத்தமமான சிருங்கார ரஸமாக விளங்குபவள்.

விவரணம் :— சிருங்கார ரஸத்திற்கு அநுகூலமான புஷ்பம், சந்தனம், ஆபரணாதிகள் முதலியவற்றால் எப்பொழுதும் பராசக்தி விளங்குவதால் இப்படிச் சொல்லப் பட்டாள்.

(iii) (ஸத்வ, ரஜஸ், தமோ குணங்களாகிய உபாதிகளில்) ஸத்வம் என்ற சுத்தமானதும் நிர்மலமாயும் உள்ள குணத்துடன் விளங்குபவள்.

விவரணம்:— கீதையில் ஆஹாரத்தின் குணங்களை ஸத்வ, ரஜஸ், தமோ குண வேற்றுமையுள்ளனவாக

1. தைத்திரீயோபநிஷத் ஆனந்தவல்லி.

வர்ணித்து, ஸத்வ ஆஹாரத்தை ரஸம் பொருந்தியதாகக் கூறப்பட்டுள்ளது. இவ்வித ஆஹாரமே நைவேத்ய உபசாரத்திற்கு உரியதாகப் பராசக்திக்கு நிவேதனம் செய்யப்படுகிறது. பொதுவாக, பராசக்தி ஸத்வ மூர்த்தியாக ஆதரிக்கப்படவேண்டும் என்பதும், ஜீவர்களும் ஸத்வ ஸ்வபாவத்தை விருத்திசெய்துகொள்ளல் அவசியம் என்பதும் விளங்குகிறது.

[1] रस्याः स्निग्धाः स्थिरा हृद्या आहाराः सात्विकप्रियाः ।

"சுவை பொருந்தியதும் பசையுள்ளதும் நிலைத்து இருக்கக்கூடியதும், மனதிற்கு இன்பமளிப்பதுமான உணவுப்பொருள்களே, ஸாத்விகத்தன்மை பொருந்தியவர்களுக்குப் பிரியமான உணவுகள்".

ओं लब्धरसायै नमः ।

ஓம் லப்தரஸாயை நம: (199)

लब्धसंपत्समुन्नतिः ।

**லப்தஸம்பத்ஸமுந்நதி:** 200

ஸத்யகாமம், ஸத்யஸங்கல்பம் முதலிய ப்ரபாவங்களும் ஸத், சித், ஆனந்தம் என்ற ஸ்வரூப லக்ஷணங்களும் யாரிடம் ஸ்வதஸ்ஸித்தமாக இருக்கின்றனவோ, அதனால் யார் மிகவும் சிரேஷ்டமாக விளங்குகிறளோ அந்தப் பராசக்தி.

விவரணம் :— பரப்பிரம்மத்திற்கே முற்கூறிய வர்ணனை உரித்தாகும். உபாதியாகிய மூன்று குணங்களும் பிரம்மத்தின் மாயா சக்தியினுல் தோன்றி, பிரம்மத்தின் ஸர்வோத்கிருஷ்டத் தன்மையை விளக்கிக்காட்டுகின்றன. பிரம்மத்தைச் சிறிதளவும் விகாரப்படுத்துவதில்லை. 'ஜகத்' பரமாத்மாவின் மஹிமையை விளங்கச் செய்கிறது. பரமாத்மாவின் தன்மையை மாற்றுவதில்லை.

[1] तमीश्वराणां परमं महेश्वरं तं देवतानां परमं च दैवतम् ।
पतिं पतीनां परमं पुरस्तात् विदाम देवं भुवनेशमीड्यम् ॥

1. கீதை 17-8. 2. சுவேதாச்வதரம் 6-7.

"ஈசுவராதிகளுக்கு ஈசுவரனாய் விளங்கும் மஹேசுவரனை தேவதைகளுக்கும் தெய்வமாயிருக்கும் பரதேவதையை, அரசர்களுக்கு அரசனாயிருக்கும் அரசனை ஜகதீசுவரனாயும் பூஜ்யனாயும் இருக்கும் பரமாத்மாவை நேருக்கு நேராக அறிவோமாக".

[1] सत्यकामः सत्यसङ्कल्पः ।

"எவருடைய இச்சையும், ஸங்கல்பமும் மாறாமல் காரியத்தை நிறைவேற்றும் சக்தியுள்ளதோ அவர்".

[2] एष सर्वेश्वर एष सर्वज्ञ एषोऽन्तर्याम्येष योनिः सर्वस्य ।

பரமேசுவரன் ஸர்வக்ஞனாகவும், எங்கும் அந்தர்யாமியாகவும், எல்லாவற்றையும் தோன்றும்படிச் செய்யும் காரணமாகவும் விளங்குகிறான்.

[3] गतिर्भर्ता प्रभुः साक्षी

அனைத்திற்கும் முக்திநிலை அவளே. அனைத்தையும் போஷிப்பவள் அவளே. அனைத்தையும் ஆளுபவள் அவளே. அனைத்தையும் அறிபவள் அவளே.

एष नित्यो महिमा ब्राह्मणस्य ।

பிரம்மத்தின் அழிவற்ற பிரபாவம் இத்தகையது.

ओं लब्धसंपत्समुन्नत्यै नमः ।

ஓம் லப்தஸம்பத்ஸமுந்நத்யை நம: (200)

ह्रींकारिणी ।

**ஹ்ரீங்காரிணீ** 201

101 முதல் 220 முடிய உள்ள மந்திரத்தொகுதியின் கடைசி அவயவமாக விளங்கும் 'ஹ்ரீம்' என்ற பீஜாக்ஷரத்தினால் விளக்கப்படுபவள்.

ओं ह्रींकारिण्यै नमः ।

ஓம் ஹ்ரீங்காரிண்யை நம: (201)

ह्रींकाराद्या ।

**ஹ்ரீங்காராத்யா** 202

---

1. சாந்தோக்யம் 8-15. 2. மாண்டூக்யம் 3. கீதை 9-18.

வேதங்கள் உண்டாவதற்கு முன்னமேயே இருப்பவள்

விவரணம் :— 'ஹ்ரீம்காரம்' என்றால் இங்கு அதனின்றும் உண்டான வேதங்கள் என்பது பொருள். வேதங்களுக்கு முன்னமேயே, அர்த்தரீதியாகப் பார்த்தாலும் காரணரீதியாகப் பார்த்தாலும், 'ஹ்ரீம்' இருக்கிறது. ஏனெனில், ஒரு கருத்தை வெளியிடவே சப்தமுண்டாகிறது. ஆகையால் கருத்தாகிய 'ஹ்ரீம்' என்பதை வெளியிடவே சப்தமாகிய வேதங்கள் உண்டாயின. 'ஹ்ரீம்' என்பதன் கருத்து முன்பு பலவிடங்களில் விளக்கப்பட்டிருக்கிறது.

ओं ह्रींकाराद्यायै नमः ।

ஓம் ஹ்ரீங்காராத்யாயை நம: (202)

ह्रींमध्या ।

**ஹ்ரீம்மத்யா** 203

நாமரூபம் என்ற வியவஹாரத்திற்கு உட்பட்ட ஜகத்திற்குக் காரணமாயிருக்கும் மாயை என்ற தன்மையை மேற்கொண்ட சைதன்யத்தைக் குறிக்கும் வடிவமாக விளங்குபவள்.

விவரணம் :— ஜகத்தின் வியவஹாரங்கள் நாமம், ரூபம் என்ற இரண்டையும் சார்ந்திருக்கின்றன. ஜகத்திற்கு நிமித்த காரணம் (efficient cause) ஆகவும், உபாதான காரணம் (material cause) ஆகவும் இருப்பது மாயை என்ற உபாதியை மேற்கொண்ட சுத்தசைதன்யமேயாகும். இத்தகைய காரணவஸ்துவை 'ஹ்ரீம்' என்ற சப்தபீஜம் பிரதீகமாக (symbol) நின்று குறிக்கின்றது. இந்தப் பிரதீகத்தை உபாஸிப்பதால், அதனால் குறிக்கப்படும் வஸ்துவின் குணங்கள் உபாஸகனுக்குப் பலனாக ஏற்படுகின்றன. இங்ஙனம் இல்லாவிடில் மந்திரத்திற்கு சக்தி இல்லாமற் போய்விடும்.

முன் மந்திரத்தில் கால தேச, நாமரூப வேற்றுமைத் தன்மையதாகிய ஜகத்திற்கு முன்னமேயே பராசக்தி இருப்பதாகச் சொல்லப்பட்டது. இந்த மந்திரத்தினால்

அவள் ஜகத்தில் ஊடுருவி இருப்பதாகச் சொல்லப்படுகிறது. இதனால் 'பிரதானம்' என்று சொல்லப்படும் அசேதன வஸ்துவின் மாறுபாட்டினால் ஜகத் உண்டாகிறது என்னும் கொள்கை நிராகரிக்கப்படுகிறது.

ओं ह्रींमध्यायै नमः ।
ஓம் ஹ்ரீம்மத்யாயை நம: (203)

ह्रींशिखामणिः ।
ஹ்ரீம்ஶிகாமணி: 204

பராசக்தியைக் குறிக்கும் பல சப்தங்களிலும், 'ஹ்ரீம்' என்ற பீஜாக்ஷரத்தையே சூடாமணியாக வைத்துள்ளவள்.

விவரணம் :— உடலில் பல அங்கங்கள் இருக்கின்றன. அந்தந்த அங்கங்களுக்கு ஏற்றவாறு நகைகளை அணிகிறார்கள். ஆயினும் அவற்றில் மிகவும் உயர்ந்த ஆபரணத்தைச் சிரஸ்ஸிலேயே அணிகிறார்கள். அதைச் 'சிகாமணி' 'சூடாமணி' என்கிறார்கள். அதை ஒருவன் தரித்துக்கொண்டால் அவன் தனவந்தனாக மதிக்கப்படுகிறான். 'ஹ்ரீம்' என்ற பீஜம் (1) ஸ்ரீ வித்யா ராஜபீஜம் (2) அதிஸூக்ஷ்மமானது (3) சித் ஜட மிச்ரமாயுள்ள ஜகத்தின் பிரதீகம் (4) ஸச்சிதானந்தத்தைக் கருத்தாக உடைய பதம் (5) உபாஸகனுக்கு எல்லா இச்சைகளையும் நிறைவேற்றி, முக்தி பர்யந்தம் உள்ள எல்லா க்ஷேமங்களையும் நல்கும் தன்மையது. ஆகையால் அது சிகாமணி போல விளங்குகிறது. பராசக்தி 'ஹ்ரீம்' என்பதைச் சிகாமணியாகக் கொண்டுள்ளவள்.

ओं ह्रींशिखामणये नमः ।
ஓம் ஹ்ரீம்ஶிகாமணயே நம: (204)

ह्रींकारकुण्डाग्निशिखा ह्रींकारशशिचन्द्रिका ।
ह्रींकारभास्कररुचिर्ह्रींकाराम्भोदचञ्चला ॥ ३९ ॥

ஹ்ரீங்கார குண்டாக்னிஶிகா ஹ்ரீங்கார ஶஶிசந்த்ரிகா ।
ஹ்ரீங்கார பாஸ்கரருசிர் ஹ்ரீங்காராம்போதசஞ்சலா ॥

ह्रींकारकुण्डाग्निशिखा ।

**ஹ்ரீங்காரகுண்டாக்நிஶிகா** 205

'ஹ்ரீம்' காரமாகிய அக்கினி குண்டத்தில், அக்கினி ஜ்வாலையாக விளங்குபவள்.

விவரணம் :— அக்கினியை ஹோமகுண்டத்தில் வளர்த்து அதில் திரவியங்களினால் ஆஹுதி செய்யப் படுகிறது. மந்திர உச்சாரணம் அவசியம். இப்படிச் செய்வதால் அத்ருஷ்டம் (நேரில் தெரியாது பின்னர் விளையக்கூடியது) என்ற நற்பயன்கள் விளைகின்றன. இந்த மந்திரத்தில் 'ஹ்ரீம்' என்பது அக்கினி குண்டமாகக் கருதப்படுகிறது. ஆஹவநீயம் முதலான அக்கினி குண்ட மென்ற ஆதாரத்தில் அக்கினி ஜ்வாலைகள் வளர்க்கப் படுகின்றன. இந்த அக்கினி ஜ்வாலையாகப் பராசக்தி கருதப்படுகிருள். தன்னைக் குறிக்கும் 'ஹ்ரீம்' என்ற மந்திரத்துடன் தன்னிடம் ஆஹுதி செய்வதால் அத்ருஷ்ட பலன்கள் விளையும். ஜ்வாலையில்லாத அக்கினியில் ஆஹுதி செய்யக்கூடாது என்பதும் மந்திரமின்றி ஆஹுதி செய்யக்கூடாது என்பதும் விதிகள்.

ओं ह्रींकारकुण्डाग्निशिखायै नमः ।

ஓம் ஹ்ரீம்காரகுண்டாக்னிஶிகாயை நம: (205)

ह्रींकारशशिचन्द्रिका ।

**ஹ்ரீங்காரஶஶிசந்த்ரிகா** 206

'ஹ்ரீம்'காரமென்ற சந்திரனுடைய பிரகாச சைதன்யமாய் விளங்குபவள்.

விவரணம் :— சந்திரன் தனது அமிருத கிரணங் களினால் தேவலோகம் முதலிய எல்லா உலகங்களுக்கும் ஜீவாதாரமாய் விளங்குவதைப்போல், 'ஹ்ரீம்'காரத்தினால் குறிக்கப்படும் பரதேவதை, பிரபஞ்சத்திற்கு விவர்த்த காரணமாக இருந்துகொண்டு, ஸச்சிதானந்தஸ்வரூபி யாதலால், அனைத்தையும் ஜீவிக்கும்படி செய்கிருள் என்பது பொருள்.

ओं ह्रींकारशशिचन्द्रिकायै नमः ।
ஓம் ஹ்ரீங்காரமைசந்த்ரிகாயை நம: (206)

ह्रींकारभास्कररुचिः ।
**ஹ்ரீங்காரபாஸ்கரருசி:** 207

ஹ்ரீம்காரமாகிய ஸூர்யனுடைய அளவற்ற காந்தியாக விளங்குபவள்.

விவரணம் :— 'பாஸ்கர:' என்பதற்கு காந்தியைப் பரவச்செய்பவன் என்று பொருள். அதனுல் ஸூரியன் என்ற அர்த்தம் கிடைக்கிறது. வானத்தில் மேகம் அளாவி இருக்கும்பொழுது, ஸூரியனுடைய இருப்புத் தெரிவதில்லை. அஞ்ஞானம் இருக்குமளவும் பரமாத்ம வஸ்து புலப்படுவது இல்லை. பலத்த காற்று வீசி, மேகத்தை விரட்டியடித்தால், சூரியன் எப்படி நேர்முகமாய்க் காணப்படுகிருனே, அதைப் போல் பூர்வபுண்ய வசத்திஞல் குருகடாக்ஷம் உண்டாகி அஞ்ஞானமாகிய மேகம் அகன்றுவிட்டால், பரதேவதா ரூபம், ஹ்ரீம்கார பீஜமந்திர உபாஸனையினுல், நேர்முகமாக விளங்குகிறது என்பது கருத்து.

ओं ह्रींकारभास्कररुचये नमः ।
ஓம் ஹ்ரீங்காரபாஸ்கரருசயே நம: (207)

ह्रींकारांभोदचञ्चला ।
**ஹ்ரீங்காராம்போதசஞ்சலா** 208

ஹ்ரீம்காரம் என்ற மேகத்திற்கு மின்னல்கொடிபோல விளங்குபவள்.

விவரணம் :— மேகமானது மழையைப் பொழிந்து செழிப்பை உண்டுபண்ணுவதுபோல், ஹ்ரீங்காரம் தன்னை மந்திரவடிவமாய்த் தியானிப்பவனுக்கு எல்லா நன்மைகளையும் கொடுக்கிறது. மின்னல் மேகத்தைப் பிரகாசப் படுத்துவதுபோல், பராசக்தி ஹ்ரீம்காரத்தின் லக்ஷ்யார்த்த மாக நின்று அதற்கு மேற்குறித்த சக்தியைக் கொடுக்கிருள் என்பது கருத்து.

ओं ह्रींकाराम्भोदचञ्चलायै नमः ।
ஓம் ஹ்ரீங்காராம்போதசஞ்சலாயை நம: (208)

ह्रींकारकन्दाङ्कुरिका ह्रींकारैकपरायणा ।
ह्रींकारदीर्घिकाहंसी ह्रींकारोद्यानकेकिनी ॥ ४० ॥

ஹ்ரீங்கார கந்தாங்குரிகா ஹ்ரீங்காரைக பராயணா ।
ஹ்ரீங்கார தீர்கிகா ஹம்ஸீ ஹ்ரீங்காரோத்யான கேகினீ ॥

**ह्रींकारकन्दाङ्कुरिका ।**
**ஹ்ரீங்காரகந்தாங்குரிகா** 209

ஹ்ரீம்காரம் என்ற கிழங்கினின்றும் கிளர்பும் முளையாக இருப்பவள்.

விவரணம் :— கிழங்கின் சக்தியினின்று முளை கிளம்புகிறது. முளை பின்னர் தூறு, கிளைகள், இலைகள், புஷ்பம், பழம் முதலிய வேறுபாடுகளை அடைய அடையக் கிழங்கும் வலுத்து அதனின்றும் பல வேர்கள் கிளம்புகின்றன. எப்படிக் கிழங்கின் சக்தி, மரமென்ற விலாஸங்களை அடைவதற்கு முன்பே அதில் ஸ்வதஸ்ஸித்தமாயிருக்கிறதோ, அதுபோல் 'ஹ்ரீம்' என்பது வேதாம்சமாயிருப்பதனால் அது வேறு பிரமாணங்களை நாடாமல் தானே பராசக்தியைக் குறிப்பதாக விளங்குகிறது. ஆயினும் பற்பல ரூபங்களாய்த் தோன்றும் ஜகத்தில் புதிதுபுதிதாகக் காட்சிகள் காணப்படுகின்றன. இந்தச் சக்தியே மாயை எனப்படுகிறது. ஹ்ரீம் பீஜத்திற்கு மாயை என்பதும் பொருள். இந்த மாயையே 'அங்குரம்' அல்லது முளையாகச் சொல்லப்படுகிறது. ஆகவே ஸ்வதஸ்ஸித்தமாயிருக்கும் ஹ்ரீம்காரம் என்ற கிழங்காகவும், அதனின்றும் ஜகத்திற்குக் காரணமாயுள்ள 'அங்குரம்' அல்லது முளையாகிய மாயையாகவும், ஹ்ரீம்காரம் என்ற சப்தவடிவையுடைய பராசக்தி விளங்குகிருள் என்பது பொருள்.

ओं ह्रींकारकन्दाङ्कुरिकायै नमः ।
ஓம் ஹ்ரீங்காரகந்தாங்குரிகாயை நம: (209)

ह्रींकारैकपरायणा ।

ஹ்ரீங்காரைகபராயணா 210

தர்மம், அர்த்தம் காமம், மோக்ஷம் என்ற நான்கு புருஷார்த்தங்களையும் கொடுக்கும் சக்தியுள்ள, தனக்கே உரிமையான 'ஹ்ரீம்' என்னும் பீஜத்தைத் தன்னைக் காட்டும் சிறந்த பிரமாணமாக உடையவள்.

விவரணம்:— ஹ்ரீம் பீஜத்திற்கு மாயை என்பது பொருள். அடிப்படை வஸ்து ஒன்று இருந்தாலொழிய மாயை ஸித்திக்காது. கயிறு என்பது இருந்தாலொழிய அதில் பாம்பு என்ற பிரமை ஏற்படாது. ஆகையால் 'ஹ்ரீம்' என்பது பராசக்தியை ஆச்ரயித்து இருக்கிறது. மாயாரஹிதமான பராசக்தியை விளக்குவதாகவும் இருக்கிறது.

ओं ह्रींकारैकपरायणायै नमः ।

ஓம் ஹ்ரீங்காரைகபராயணாயை நம: (210)

ह्रींकारदीर्घिकाहंसी ।

ஹ்ரீங்காரதீர்கிகாஹம்ஸீ 211

ஹ்ரீம்காரம் என்ற ராஜ உத்யானவன தடாகத்தில் அன்னப்பக்ஷியாக விளங்குபவள்.

விவரணம்:— உத்யானவனத்தில் இருக்கும் தடாகம் எப்படிக் களைப்பைத் தவிர்க்குமோ, அதைப்போல் 'ஹ்ரீம்' என்ற பீஜமந்த்ரம் ஸம்ஸார தாபத்தை அகற்றுகிறது. ஆகையால் ஹ்ரீம் என்பது உத்யான தடாகத்திற்கு ஒப்பிடப்பட்டது. 'ஹம்ஸீ' என்றால் பெண் அன்னம். இதற்கு 'ஸாரம்' 'அஸாரம்' என்று தடாகங்களைப் பகுத்தறியும் சக்தி உண்டு. உத்தமமான தடாகங்களிலேயே காணப்படும். ஆகையால் ஒரு தடாகத்தில் அன்னப்பேடு வசிக்குமானால், அந்தத்தடாகம் தங்கத் தாமரைகளுள்ளது என்பதும் அரசனது தடாகம் என்பதும் ஞாபகத்திற்கு வரும். அதைப்போல் 'ஹ்ரீம்' என்ற மந்த்ரத்தின் பொருளாய் விளங்கும் அன்னம்போன்ற

பராசக்தி 'ஹ்ரீம்' என்ற தடாகத்தை உபாஸனு மார்க்கமாய் ஆசிரயிப்பவர்களுக்கு நித்யானந்தம் என்ற நிலையை அளிக்கிருள் என்பது கருத்து.

ॐ ह्रींकारदीर्घिकाहंस्यै नमः ।

ஓம் ஹ்ரீங்காரதீர்கிகாஹம்ஸ்யை நம: (211)

**ह्रींकारोद्यानकेकिनी ।**

**ஹ்ரீங்காரோத்யானகேகினீ** 212

'ஹ்ரீம்' காரமாகிய உத்யானவனத்தில் பெண்மயிலாக விளங்குபவள்.

விவரணம் :— உத்யானவனத்தில் அநுபவிப்பதற்குரிய பழங்கள், புஷ்பங்கள், நீரோடைகள் முதலியவைகள் இருந்துகொண்டு, சுகங்களை விளைவிப்பதுபோல், 'ஹ்ரீம்' என்ற பீஜமந்த்ரம் தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் என்ற புருஷார்த்தங்களைத் தருவதால், அது உத்யானவனத் திற்கு ஒப்பிடப்பட்டது.

உத்யானவனத்தில் பலவிதப் பக்ஷிகள் இருப்பினும், அழகினுலும் தொனியினுலும் பெண் மயிலே அவைகளில் சிறந்தது. கண்ணுக்கும் செவிக்கும் களிப்பை அளிக்கிறது. மயில் இல்லாத உத்யானம் உத்யானமன்று. அதைப் போல், 'ஹ்ரீம்' என்ற வடிவத்தினுல் விளக்கப்படும் பராசக்தி ஸச்சிதானந்தமாக இருந்துகொண்டு பரம புருஷார்த்தங்களை அளிக்கிருள்.

மேலும் மயில் எவ்விதம் உத்யானத்தில் இருக்கும் மரம், செடி, கொடி, புதர், முதலியவைகளில் யதேச்சையாக ஸஞ்சரிக்குமோ, அதைப்போல், சேதன, அசேதன வஸ்துக் களிலும், அஃறிணை, உயர்திணை ஜீவன்களிலும், பராசக்தி ஸர்வ வியாபியாக இருந்துகொண்டு 'நான்', 'எனது' என்ற நினைவுகளுக்குக் காரணமாயிருக்கிருள் என்பதாலும் அவளைப் பெண் மயிலுக்கு ஒப்பிடப்பட்டது.

ॐ ह्रींकारोद्यानकेकिन्यै नमः ।

ஓம் ஹ்ரீங்காரோத்யாநகேகிந்யை நம: (212)

ह्रींकारारण्यहरिणी ह्रींकारावालवल्लरी ।
ह्रींकारपञ्जरशुकी ह्रींकाराङ्गणदीपिका ॥ ४१ ॥

ஹ்ரீங்காராரண்ய ஹரிணீ ஹ்ரீங்காராவால வல்லரீ ।
ஹ்ரீங்கார பஞ்ஜரஶுகீ ஹ்ரீங்காராங்கணதீபிகா ॥

ह्रींकारारण्यहरिणी ।
**ஹ்ரீங்காராரண்யஹரிணீ** 213

ஹ்ரீம்காரமாகிய காட்டில் பெண்மானாக விளங்குபவள்.

விவரணம் :— காட்டில் சிங்கம், புலி, முதலிய கொடிய மிருகங்கள் வாழ்வதால் அதில் நுழையவொட்டாமல் எல்லோருக்கும் காடு பயத்தையுண்டுபண்ணுகிறது. அது போல் ஹ்ரீம் என்ற பதத்தால் குறிப்பிடப்படும மாயை யானது ஜீவாத்மாவுக்குத் தத்வ ஞானத்தை மறைத்து, ஸம்ஸாரத்திலாழ்த்திப் பயத்தை விளைவிக்கிறது. ஆகையால் 'ஹ்ரீம்' என்பது பயங்கரமான காட்டிற்கு ஒப்பிடப்பட்டது.

ஒருவன் காட்டினுள் பிரவேசிக்கும்பொழுது மான் கூட்டத்தைக் காண்பானாயின், அந்தக் காட்டில் புலி முதலிய துஷ்ட ஜந்துக்கள் இல்லை என்றும், தான் பயமின்றி உள்ளே புகுந்து தேவையான வஸ்துக்களைக் கிரஹித்துக் கொள்ளலாம் என்றும் ஊகிப்பதுபோல், மாயையினால் விளையும் பயத்தைப் பராசக்தி, மான்போல நின்று விரட்டி, ஜீவனுக்கு அபயம் அளிக்கிறாள் என்று பொருள். இந்த அபயத்தை அண்டி ஜீவன் பேரின்பநிலையாகிய முக்தியைப் பெறுகிறான். 'तमेव विदित्वाऽतिमृत्युमेति' (பராசக்தியை அறிந்ததனால் மாத்திரமே ஜனனமரணத்தினின்றும் விடுபடுகிறான்.)

ॐ ह्रींकारारण्यहरिण्यै नमः ।
ஓம் ஹ்ரீங்காராரண்யஹரிண்யை நம: (213)

ह्रींकारावालवल्लरी ।
**ஹ்ரீங்காராவாலவல்லரீ** 214

ஹ்ரீங்காரமாகிய பாத்தியில் செழித்து வளரும் கொடி போன்றவள்.

விவரணம் :— 'ஹ்ரீம்' என்ற பீஜமந்திரத்தை உபாஸிப்பவர்களுக்குப் பரதேவதை கண்கூடாகத் தோன்றுவதால், ஹ்ரீம்காரத்தைப் பாத்தியாகவும், பராசக்தியை அதினின்று செழித்தோங்கும் கொடியாகவும் கூறப்படுகிறது. பாத்தியைச் செப்பனிட்டு, உரமிட்டுக் களை எடுத்தாலன்றி, கொடி செழித்து வளராது. அதைப்போல் காமம், குரோதம் முதலான களைகளைப் பிடுங்கி, ஏகாக்ர தியானமாகிய உரத்தை இட்டு, ஹ்ரீம் என்ற பீஜத்தைப் பாத்திபோல் மனத்தில் கட்டினாலன்றி, பராசக்தியாகிய கொடி மனத்தில் கண்கூடாகத் தோன்றமாட்டாள் என்பது பொருள்.

ओं ह्रींकारालवाल्यै नमः ।

ஓம் ஹ்ரீங்காராவாலவல்லர்யை நமः (214)

ह्रींकारपञ्जरशुकी ।

ஹ்ரீங்காரபஞ்ஜரஶுகீ 215

ஹ்ரீம்காரம் என்ற கூட்டில் பெண் கிளியாக விளங்குபவள்.

விவரணம் :— ஹ்ரீம்காரமானது பராசக்தியை உபாஸிப்பதற்குப் ப்ரதீகமாய் இருப்பதுபோல. மந்தாதிகாரிகள் உபாஸிக்கும் பராசக்தியின் அம்சமான பார்வதி, லெக்ஷ்மி, பவானி முதலான தேவதைகளுக்கும் ப்ரதீகமாக விளங்குகிறது. ப்ரதீகங்கள் தாழ்மையான பக்குவ நிலையை அடைந்தவர்களுக்கே ஏற்பட்டுள்ளன. குழந்தைகள் கிளிக்கூட்டை வைத்து விளையாடுவதுபோல், இத்தன்மையான மந்தாதிகாரிகள் விக்கிரகங்கள் முதலிய ப்ரதீகங்களை வைத்து அவற்றை அலங்கரித்து அவற்றின் வழியாகப் பராசக்திக்கு ஷோடசோபசாரங்களைச் செய்கிறார்கள். கூட்டில் ஜீவசைதன்யத்துடன் வாழ்வது கிளி. அது பிறர் பேசுவதை ஒட்டித் தானும் பேசிக் களிப்பை உண்டுபண்ணுகிறது. அதைப்போல் ப்ரதீகங்களாகிய கூட்டில் சைதன்யத்துடன் பராசக்தி விளங்குகிறாள் என்றும்,

ப்ரதீக ஆராதனை செய்பவர்களுக்கும், அவரவர் சிரத்தைக்கு தக்கவாறு பயனை அளிக்கிருள் என்ற கருத்தும் கிடைக்கிறது.

ओं ह्रींकारपञ्जरशुक्यै नमः ।

ஓம் ஹ்ரீங்காரபஞ்ஜரஶுக்யை நம: (215)

ह्रींकाराङ्गणदीपिका ।

**ஹ்ரீங்காராங்கணதீபிகா** 216

ஹ்ரீம் என்னும் அங்கணத்தில் விளக்குப்போன்றவள்.

விவரணம்:— ஒரு வீட்டில் அங்கணம் என்பது விச்ராந்தி பண்ணும் இடம். ஹ்ரீம் என்பது ஸம்ஸாரக் கஷ்டங்களிலிருந்து களைப்பாறும் இடமாதலால், அதை அங்கணத்திற்கு ஒப்பிடப்பட்டது. அங்கணத்தில் ஏற்றி வைத்த விளக்கு அங்குள்ளவர்களுக்கு வஸ்துக்களைப் பிரகாசப்படுத்திக் காரியங்களைச் செய்ய உதவுகிறது. ஆகையால் அது அவர்களால் அணையாமல் காப்பாற்றப் படுகிறது. அதைப்போல் ஹ்ரீம் பீஜத்தின் அர்த்தத்தைக் கேட்டு சிந்தித்து, தியானித்து இடைவிடாது உபாஸிப் பதால், நேர்முகமாய் ஸ்வயம்பிரகாச ரூபமான பராசக்தி தோன்றி தனது பக்தர்களைப் பரம சிரேயஸ்ஸுடன் இணைக்கிருள் என்பதால் பராசக்தி அங்கணத்தில் ஏற்றி வைத்த தீபமாகக் கருதப்பட்டாள்.

ஸ்திரீகள் தீப பூஜை பண்ணுவது பழக்கத்தில் இருக்கிறது. அப்படிப் பண்ணும்பொழுது முற்கூறிய கருத்தை அறிந்து செய்தல் நலம். மேலும் கிருஹங்களில் காலையிலும் மாலையிலும் சிறிது நேரமாவது தீபத்தை ஏற்றி வைத்து வணங்கவேண்டும்.

ओं ह्रींकाराङ्गणदीपिकायै नमः ।

ஓம் ஹ்ரீங்காராங்கணதீபிகாயை நம: (216)

ह्रींकारकन्दरासिंही ह्रींकाराम्भोजभृङ्गिका ।

ह्रींकारसुमनोमाध्वी ह्रींकारतरुमञ्जरी ॥ ४२ ॥

ஹ்ரீங்கார கந்தரா ஸிம்ஹீ ஹ்ரீங்காராம்போஜப்ருங்கிகா ।
ஹ்ரீங்கார ஸுமனோமாத்வீ ஹ்ரீங்காரதருமஞ்ஜரீ ॥

ह्रींकारकन्दरासिंही ।
ஹ்ரீங்காரகந்தராஸிம்ஹீ 217

ஹ்ரீம்காரம் என்னும் குஹையில் பெண் சிங்கமாக விளங்குபவள்.

விவரணம்:— 'கந்தரம்' என்றால் பர்வதத்தின் உயர்ந்த சிகரத்திலுள்ள 'குஹை' என்பது பொருள். 'ஹ்ரீம்' என்ற பீஜாக்ஷரம் வேதங்களின் சிரஸ்ஸாக விளங்கும் உபநிஷத்துக்களில் ரஹஸியமாய் விளக்கப் பட்டிருக்கிறது. ஆகையால் 'ஹ்ரீம்' என்பது குஹைக்கு ஒப்பிடப்பட்டது.

குஹையில் வஸிக்கும் சிங்கம், மற்ற வன்மையற்ற மிருகங்களை வரவொட்டாமல் பிடரி மயிரின் சிலிர்ப்பினாலும், கர்ஜனையினாலும் எப்படித் தடுக்குமோ அதைப்போல் கிராம்யமான ஆசாபாசங்கள், சோம்பல் முதலியவற்றிற்கு உட்பட்ட ஜீவர்களினால், 'ஹ்ரீம்' என்ற மந்த்ரத்தின் கௌரவம் அறியப்படமாட்டாது. ஆனால் தைரியம் நிறைந்த ஒருவன் சிங்கத்தின் குஹைக்குப் போவானே யாயின், அதன் நகத்தினின்றும் சிதறும் முத்துக்கள் அவனால் எப்படி அடையப்படுமோ, அதைப்போல் யோக பலத்தினால், சித்தத்தை அடக்கிய தீரனுக்கு 'ஹ்ரீம்' என்ற மந்திரம் உபாஸனைக்கு உரியதாக விளங்கி அவனுக்கு பேரின்ப நிலையை அளிக்கும். ஆகையால் பராசக்தி குஹையில் வஸிக்கும் பெண் சிங்கத்திற்கு ஒப்பிடப் பட்டாள்.

ॐ ह्रींकारकन्दरासिंह्यै नमः ।
ஓம் ஹ்ரீங்காரகந்தராஸிம்ஹ்யை நம: (217)

ह्रींकाराम्भोजभृङ्गिका ।
ஹ்ரீங்காராம்போஜப்ருங்கிகா 218

ஹ்ரீம்காரம் என்ற தாமரையில் மொய்த்துக்கொண்டு இருக்கும் பெண் வண்டாக விளங்குபவள்.

விவரணம்:— 'ஹ்ரீம்'காரமானது அஷ்ட ஐசுவரியங்களையும், நான்கு புருஷார்த்தங்களையும் கொடுக்கும்

தன்மையது. பற்பல ஏனைய பீஜாக்ஷரங்களின் சக்திகளைத் தன்னில் கொண்டுள்ளது. ஆகையால், மகரந்தத்தை உடைய நறுமணம் கமழும் தாமரைக்கு ஹ்ரீம்காரம் ஒப்பிடப்பட்டது.

எல்லாப் புஷ்பங்களிலும் மது ஓரளவு இருக்கிறது. இந்த மதுவை நாடி வண்டு எல்லாப் புஷ்பங்களையும் மொய்ப்பினும், தாமரையில் மது மிகுந்திருப்பதாலும், வண்டுக்கு மதுவினிடம் மிகுந்த ஆசை இருப்பதாலும், தாமரையே வண்டுக்கு மிகுந்த பிரியமுள்ள புஷ்பம்.

ஒவ்வொரு பீஜாக்ஷரமும் ஒவ்வொரு தேவதைக்கு உரித்தானது. அத்தேவதைகள் பிரம்மத்தின் அம்ச சக்திகள். 'ஹ்ரீம்காரம்' ஸர்வ ஜகத் வடிவமாகிய ஸகுண ப்ரம்மத்தை விளக்குவதாலும், பராசக்தியின் தடஸ்த ஸ்வரூப லக்ஷணங்களை விளக்கும் தன்மையுடையதாதலாலும், பராசக்தி அந்தப் பீஜத்தில் அதிஷ்டான சக்தியாக இருந்துகொண்டிருப்பதால் ஹ்ரீம் என்ற தாமரையில் வண்டாக இருப்பவள் என்று சொல்லப்படுகிருள்.

ॐ ह्रींकाराम्भोजभृङ्गिकायै नमः ।

ஓம் ஹ்ரீங்காராம்போஜப்ருங்கிகாயை நம: (218)

ह्रींकारसुमनोमाध्वी ।

**ஹ்ரீங்காரஸுமனோமாத்வீ** 219

'ஹ்ரீம்'காரமாகிய புஷ்பத்தில் தேனாக அமைந்துள்ளவள்.

விவரணம் :— 'ஹ்ரீம்' காரம் விரும்பிய பலன்களைத் தரக்கூடியது. புஷ்பம் பழமாக மாறி நமக்குப் பலனைத் தருகிறது. ஆகையால், 'ஹ்ரீம்' என்பது புஷ்பத்திற்கு ஒப்பிடப்பட்டது. இரண்டுக்கும் மற்றொரு உவமையும் கூறலாம். புஷ்பத்தை ஸாவதானமாகக் கையாள வேண்டும். கௌரவப்படுத்திச் சிரஸ்ஸில் அணிய வேண்டும். அதைப்போல், 'ஹ்ரீம்' என்ற பீஜாக்ஷரத்தை உபாஸன காலத்தில் அதன் அளவற்ற சக்தியை தியானித்து, ஏகாக்ர சித்தத்துடன் பிரம்ம ரூபமாகத் தியானிக்கவேண்டும். இந்த நியமம் மிகவும் அவசியம்.

மேலும், காற்றினால் புஷ்பம்வாடுமேயாயின், அதனுள் இருக்கும் மது குன்றி, வண்டுகள் அதன்மீது ஆடாது. புஷ்பத்தைக் கர்ப்பம் தரிக்கச்செய்வது வண்டாதலால், வண்டு மொய்க்காத புஷ்பம் காயாக மாறாது. வண்டு மொய்ப்பதற்குத் தேன் மிகுதியாக வேண்டும். ஆகையால் பலனைத்தருவதற்குத் தேன் புஷ்பத்தில் மிகுந்திருக்க வேண்டும். பராசக்தி எல்லாப்பலனையும் தரும் சக்தி வாய்ந்தவளாதலால் 'ஹ்ரீம்' என்ற புஷ்பத்தில் தேனாக விளங்குபவள் என்று கௌரவிக்கப்பட்டாள்.

ओं ह्रींकारसुमनोमाध्व्यै नमः ।

ஓம் ஹ்ரீங்காரஸுமனோ மாத்வ்யை நம: (219)

ह्रींकारतरुमञ्जरी ।

ஹ்ரீங்காரதருமஞ்ஜரீ 220

ஹ்ரீம்காரமாகிய மரத்தில் பூக்கொத்தாய் விளங்குபவள்.

விவரணம் :—பழமென்ற பலனையடைய மரத்தில் ஏறும் பொழுது ஏறுபவன் கீழே விழாமல் தாங்கி அவன் எண்ணத்தை நிறைவேற்றும் தன்மையுடன் கூடியது 'தரு' அல்லது விருக்ஷம் என்பது. அல்லது 'ஓடம்' மரத்திலிருந்து செய்யப்படுவதாலும், ஓடத்தின் உதவியால் இடையூறின்றி நீரின் கரையை அடைவதாலும், 'தாரயதி' 'தாண்டி வைப்பது' என்ற கருத்தினாலும், 'தரு' என்ற பதத்திற்கு 'மரம்' என்பது பொருள். 'ஹ்ரீம்' என்பது இச்சித்த பலன்களைத் தருவதுடன் ஸம்ஸாரக்கடலைத் தாண்டிவைக்கும் ஓடமாக இருப்பதால் அது மரத்திற்கு ஒப்பிடப்பட்டது. இங்கே கற்பக விருக்ஷம் என்பது கருத்து.

ஒருவன் மரத்தின் கிளையில் புஷ்பக்கொத்தைப் பார்த்தால் அதில் காயும் பழமும் உண்டாகும் என்று ஊகித்து, கால அளவில் அவைகளை அடையப் பிரவர்த்திக்கிறான். அதைப்போல் பராசக்தியை உபாஸிப்பவர்களுக்கு நிச்சயமாகப் புருஷார்த்தங்களுடைய பிராப்தி கிடைப்பதால் குருவை அண்டி மந்திரோபதேசத்தை பெறப்

பிரவர்த்திக்கிறுள். மரத்தில் காணப்படும் பூக்கொத்துப் போல், அவனைத்தூண்டுவது பராசக்தியாதலால் அவள் பூக்கொத்துக்கு ஒப்பிடப்பட்டிருக்கிறுள்.

பொது விவரணம்:—205 முதல் 220 முடிய உள்ள மந்திரங்களில் பிரபஞ்சத்தில் காணப்படும் உத்தம வஸ்துக்களை 'ஹ்ரீம்' என்ற பீஜமந்த்ரத்திறுல் குறித்து, அவை ஒவ்வொன்றிலும் உத்கிருஷ்டமாயும் ஊர்ஜிதமாயும் உள்ள (essence) வஸ்துவாகப் பராசக்தியைக்குறிப்பிட்டிருக்கிறது. [1] ஸ்ரீ பகவத் கீதையில் பகவான் உபதேசிக்கும்பொழுது, 'உலகில் எந்த எந்த வஸ்துக்கள் ஸ்ரீமத்தாகவும், ஊர்ஜிதம் பொருந்தியனவாகவும் காணப்படுகின்றனவோ அவை அனைத்தும் பரமாத்ம தேஜஸ்ஸினுடைய அம்சங்கள் படைத்தவை' என்கிறுர். மாயாபத்தமான உலகில் மாயா ரஹிதமான ஆத்மசக்தியின் இருப்பை எல்லோரும் உணர வேண்டும் என்பது பொதுக்கருத்து.

ओं ह्रींकारतरुमञ्जर्यै नमः ।
ஓம் ஹ்ரீங்காரதருமஞ்ஜர்யை நமঃ (220)

सकाराख्या समरसा सकलागमसंस्तुता ।
सर्ववेदान्ततात्पर्यभूमिः सदसदाश्रया ॥ ४३ ॥

ஸகாராக்யா ஸமரஸா ஸகலாகம ஸம்ஸ்துதா ।
ஸர்வ வேதாந்த தாத்பர்ய பூமிঃ ஸதஸதாஸ்ரயா ॥

सकाराख्या ।
**ஸகாராக்யா** 221

ஸகாரத்துடன்கூடிய ஸ்ரீவித்யையாகிய 'காதிவித்யை' யாருடைய வாசக சப்தமோ, அதாவது யாரை விளக்குவதாக இருக்கிறதோ அந்தப் பராசக்தி.

ओं सकाराख्यायै नमः ।
ஓம் ஸகாராக்யாயை நமঃ (221)

समरसा ।
**ஸமரஸா** 222

1. கீதை 10-41

(i) எங்கும் அந்தர்யாமியாயிருக்கும் ஒரே ஸ்வரூபமாகிய பராசக்தி.

விவரணம் :— இனிப்பு என்ற சுவை இனிப்பாயுள்ள எல்லா வஸ்துக்களிலும், இனிப்பு என்ற ஒரே தன்மையதாய் விளங்குவதுபோல், பராசக்தி தன் சக்தியினால் உண்டாகும் ஜகத்திலுள்ள நான்குவிதப் பொருள்கள் அனைத்திலும் ஒரே தன்மையதாய் நிலைத்திருக்கிறாள் என்பது கருத்து. பொருள்களுக்கு விகாரங்கள் உண்டாயினும், ஆதாரமாயுள்ள பராசக்திக்கு விகாரம் இல்லை.

(ii) பரப்பிரம்மமேயாகும் பராசக்தி.

விவரணம் :— ஸ்தூலமாகிய ஸம்ஸார அவஸ்தையில் அறிந்தவன், அறியாதவன் என்பனபோன்ற வேற்றுமைகள் தோன்றுகின்றனவாயினும், வேதாந்த கிரந்தங்களைக்கேட்டு அறிந்தபின்னர், பேதமின்றி எங்கும் நிறைந்து நின்று, தானுமாகி நிற்கும் அகண்டாகார வடிவம் நேர்முகமாய்க் காணப்படுகிறது. அதுவே 'ரஸம்' எனப்படும். रसो वै सः என்பது தைத்திரீய வாக்கியம். அதாவது 'ரஸம்' என்பது 'பிரம்மமே'. அந்தப் பிரம்மத்தினின்றும் அபேதமாய் இருப்பவள் பராசக்தி.

ओं समरसायै नमः ।

ஓம் ஸமரஸாயை நம: (222)

सकलागमसंस्तुता ।

**ஸகலாகமஸம்ஸ்துதா** 223

எல்லா வேதங்களாலும் உள்ளது உள்ளபடியே போற்றப்படுபவள்.

விவரணம் :— வஸ்துக்களையும், வஸ்து விகாரங்களையும் ஸம்பூர்ணமாக விளக்கும் சாஸ்திரங்களே 'ஆகமங்கள்' அல்லது "வேதங்கள்' எனப்படும். 'ஸகல' என்ற பதத்தினால், வேதாங்கங்களும், உபாங்கங்களும், இதிஹாஸ புராணாதிகளும் தொகுத்து உரைக்கப்பட்டது. நிச்சயமாக ஸந்தேஹம் இன்றி, உள்ளதை உள்ளபடியே விவரிப்பது

'ஸ்துதி' எனப்படும். ஸம்பூர்ண சாஸ்திரங்களாகிய வேதங்களினால் பராசக்தி சுத்தசைதன்யமாகவும், முக்திக்கு காரணமாயிருக்கும் ஞானவடிவமாகவும் கூறப்பட்டிருக்கிறாள்.

ओं सकलागमसंस्तुतायै नमः ।

ஓம் ஸகலாகமஸம்ஸ்துதாயை நம: (223)

सर्ववेदान्ततात्पर्यभूमिः ।

**ஸர்வவேதாந்ததாத்பர்யபூமி:** 224

எல்லா வேதாந்தங்களின் தாத்பர்யத்திற்கு விஷயமாய் விளங்குபவள்.

*விவரணம்:—* எல்லா வேதங்களையும் நன்கு பரிசீலனை செய்து அவற்றின் தத்துவத்தை விசாரணை செய்வதன் மூலம் நான்கு மஹாவாக்கியங்கள் கிடைக்கின்றன. அவை (1) तत्वमसि (தத்துவமஸி) (2) अहं ब्रह्मास्मि (அஹம் பிரஹ்மாஸ்மி) (3) प्रज्ञानं ब्रह्म (பிரக்ஞானம் பிரம்ம) (4) अयमात्मा ब्रह्म (அயமாத்மா பிரம்ம) இவைகள் வேதாந்தங்கள் எனப்படுவன; அதாவது வேதங்களின் முடிவு. இந்நான்கு வாக்கியங்களின் அடிப்படைக்கருத்தும் ஒன்றே. அதுவே அவைகளின் உத்தமப்பொதுஅளவு (Greatest common measure). அதுவே ஸச்சிதானந்த அத்வயபிரஹ்மமாகும். பராசக்தியும் அதுவே.

ஒரு கிரந்தத்தினுடைய தாத்பர்யநிர்ணயத்திற்கு ஆறுவிதமான அடையாளங்கள் இருக்கின்றன. (1) உபக்ரமம், உபஸம்ஹாரம், அதாவது ஆரம்பம், முடிவு (2) அப்பியாஸம் (repetition) அதாவது திரும்பத்திரும்பச் சொல்லப்படுதல் (3) அபூர்வதை, அதாவது புதிதாய்ச் சொல்லப்படும் தன்மை (4) அர்த்தவாதம், அதாவது புகழ்ந்துபேசப்படுதல், அல்லது தெளிவாய்த்தாத்பரியமாகக் குறிப்பிடப்படுதல் (5) உபபத்தி அல்லது காரணங்களுடன் சித்தாந்தப்படுத்தல் (6) பலம் அல்லது உபயோகம்.

வேதாந்தக்கிரந்தங்களை முற்கூறிய ஆறுவகையாலும் விசாரணை செய்யுங்கால், சித்சக்தியே அவைகளின்

தாத்பரியம் என்பது தெளிவாகிறது. பிரஹ்மஸூத்திரங்களில் [1] तत्तु समन्वयात् என்று ஒரு ஸூத்ரம் இருக்கிறது. அதன் கருத்து "பிரஹ்மமே எல்லா வேதாந்தக்கிரந்தங்களின் தாத்பரியமும்" என்பது. பிரம்மத்திற்கும் சித்சக்திக்கும் வேற்றுமையே கிடையாது. ஆகையால் பராசக்தியே வேதாந்தக் கிரந்தங்களின் தாத்பரிய விஷயமாக இருக்கிருள்.

ओं सर्ववेदान्ततात्पर्यभूमये नमः ।

ஓம் ஸர்வவேதாந்ததாத்பர்யபூமயே நம: (224)

सदसदाश्रया ।

ஸதஸதாச்ரயா 225

பஞ்சபூதங்களாகிய பிருதிவீ, அப், தேஜஸ், வாயு, ஆகாசம் என்பவைகளுக்கு அதிஷ்டானமாக விளங்குபவள்.

விவரணம் :— திருஷ்டிக்கு விளங்கும் மூன்று பூதங்களாகிய பிருதிவீ, ஜலம், அக்னி என்பவைகளே 'ஸத்' எனப்படும். ஏனெனில் அவைகளின் இருப்பு நேர்முகமாய் தெரிகிறது. வாயு, ஆகாசம் என்ற இரண்டும் 'அஸத்' எனப்படும். ஏனெனில் அவை கண்ணுக்குப் புலப்படவில்லை. அவைகளின் இருப்பை ஸ்பர்சம், சப்தம் முதலிய உணர்ச்சிகளால் அறியவேண்டியிருக்கிறது. இந்தப் பஞ்சபூதங்களுக்கும், இருப்பு என்ற தன்மை ஏற்படுவதற்குக் காரணம், இவைகளுக்கு அதிஷ்டானமாக ஸச்சிதானந்தமாகிய பராசக்தி இருக்கிருள் என்பதே.

பரமேசுவரனுக்கு ஒன்பது பிரகிருதிகள் இருக்கின்றன. அவற்றில் மனம், புத்தி, அஹங்காரம், மஹத் என்பவை உயர்தரப் பிரகிருதிகள். பிருதிவீ, ஜலம், அக்னி, வாயு, ஆகாசம் என்ற ஐந்தும் தாழ்ந்த பிரகிருதிகள். இவைகள் ஈசுவர சைதன்யத்திற்கு உடல்கள்போல் இருக்கின்றன. அவற்றில் அதிஷ்டானமாயிருக்கும் வஸ்து பராசக்தியே.

ओं सदसदाश्रयायै नमः ।

ஓம் ஸதஸதாச்ரயாயை நம: (225)

---

1. ப்ரஹ்மஸூத்ரம் 1-1-4

सकला सच्चिदानन्दा साध्या सद्गतिदायिनी ।
सनकादिमुनिध्येया सदाशिवकुटुम्बिनी ॥ ४४ ॥

ஸகலா ஸச்சிதானந்தா ஸாத்யா ஸத்கதிதாயிநீ ।
ஸநகாதி முநித்யேயா ஸதாஶிவகுடும்பிநீ ॥

सकला ।

**ஸகலா** 226

(i) உபாஸனையின் பொருட்டு மனத்தினுல் கல்பிக்கப் பட்ட அவயவங்களுடன் கூடியவள்.

விவரணம்:— சாந்தோக்ய உபநிஷத்தில் ஜாபாலர் என்ற ஸத்யகாமருக்கு, பரமாத்மாவை எளிதில் உபாஸனை செய்யும்பொருட்டுப் பதினறு அவயவங்களுடன் கூடியிருப் பதாகத் தியானிக்கும் முறை உபதேசிக்கப்பட்டிருக்கிறது. உண்மையில் பரமாத்மாவுக்கு அவயவங்கள் கிடையா தெனினும், உபாஸகனின்பொருட்டு அவயவங்கள் பரமாத்மாவின்மீது ஆரோபிக்கப்படுகின்றன. இவ்வித ஆரோபித அவயவங்களுடன் பராசக்தி விளங்குகிருள் என்பது கருத்து.

(ii) 64 வித்யா கலைகளாக விளங்குபவள்.

(iii) சந்திரனுடைய கலைகளுடன் பொருந்தியவள்.

விவரணம்:— பரமேசுவரன் சந்திரனைச் சிரஸ்ஸில் ஏத்தியிருப்பதால், சந்திர கலைகளுடன் கூடியிருப்பதாகப் பராசக்தி கருதப்படுகிருள்.

(iv) இன்பம் முதலிய ஸுகானுபவங்களாக விளங்குபவள், அல்லது கூடியவள். ('கலை'யென்பதற்கு ஸுகம் முதலிய பிரகாசங்கள் என்று அர்த்தம் பண்ணி, நான்காவது பொருள் கிடைக்கிறது.)

ओं सकलायै नमः ।

ஓம் ஸகலாயை நம: (226)

सच्चिदानन्दा ।

**ஸச்சிதானந்தா** 227

ஸச்சிதானந்தஸ்வரூபியாயிருப்பவள்.

விவரணம்:— முக்காலத்திலும் பாதிக்கப்படாதது 'ஸத்' எனப்படும். அதாவது, என்றும் நிலைத்து, ஆதி அந்தம் இன்றி இருக்கும் வஸ்து.

ஸ்வயம்பிரகாசமாக இருந்துகொண்டு, மற்றவைகளுக்குப் பிரகாசத்தை அளித்து, தான் மற்றவைகளினால் பிரகாசிக்கப்படாமல் இருப்பது 'சித்' என்ற தன்மையாகும். [1] तमेव भान्तं अनुभाति सर्वं तस्य भासा सर्वमिदं विभाति । (ஸ்வயம்பிரகாசமாக இருக்கும் அந்தப் பரமாத்மாவை அண்டி அதன் பிரகாசத்தினால் அனைத்தும் பிரகாசிக்கின்றன.)

பரம ப்ரீதியின் பாவத்தை ஆனந்தம் என்பர்.

இம்மூன்றும் பராசக்தியின் ஸ்வரூப லக்ஷணங்கள். இவைகள் வெவ்வேறாகக் குறிப்பிடப்படினும் உண்மையில் ஒன்றேயாவன. ஏனெனில் 'ஸத்' பாவமில்லையாகில் ஆனந்தம் இருக்காது: ஆனந்த ரூபத்திற்கு 'சித்'பாவம் அவசியம்.

[2] 'सत्यं ज्ञानमनन्तम् ।' [3] विज्ञानमानन्दम् । [4] सदेव सोम्येदमग्र आसीत् ।

"ஸோம்ய! ஆதியில் (ஜகத் தோன்றுவதற்கு முன்பு) 'ஸத்' என்பதே இருந்தது"

[5] प्रज्ञा प्रतिष्ठा प्रज्ञानं ब्रह्म । [6] आनन्दो ब्रह्मेति व्यजानात् । [7] आनन्दं ब्रह्मणो विद्वान्न बिभेति कुतश्चन ।

"பிரஹ்மத்தை ஆனந்தமயமாக அறிந்தவனுக்குப் பயம் என்பது எக்காரணத்தினாலும் உண்டாகாது"

ॐ सच्चिदानन्दायै नमः ।

ஓம் ஸச்சிதானந்தாயை நமঃ (227)

---

1. கடோபநிஷத் 5-15. 2. தைத்திரீய உபநிஷத் ஆனந்த வல்லி, 3. ப்ருஹதாரண்யகம் 3-9-28 4. சாந்தோக்யம் 6-2-1 5. ஐதரேயம் 5-3 6. தைத்திரீயோபநிஷத் பிருகுவல்லி-6 7. தைத்திரீயோபநிஷத் ஆனந்தவல்லி-9

**साध्या ।**
**ஸாத்யா** 228

அதிகாரம் அடைந்தவர்களால் தங்கள் ஆத்மரூபமாக ஸாக்ஷாத்காரம் செய்யப்படுபவள்.

விவரணம் :— முதலில் நித்ய கர்மானுஷ்டானம், உபாஸனுதிகள் முதலியவைகளைச் செய்து சித்தசுத்தியைப் பெறவேண்டும். இதைப் பெறுவதுடன் நான்கு ஸாதனங்களை அப்பியாஸ மூலம் கைக்கொள்ளவேண்டும். அவை (1) नित्यानित्य वस्तुविवेचनं (நித்ய வஸ்து இன்னது, நசுவரமான வஸ்து இன்னது என்று அறியும் பகுத்தறிவு.) (2) इहामुत्रफलभोगविरागः (இந்த உலகிலும் மேலுலகிலும் இந்திரிய ஸுகங்களைக்குறித்து உதாசீனம் அல்லது வைராக்யம் அதாவது ஆசையின்மை. (3) शमादिषट्कं (சமம், தமம், உபரதி, திதிக்ஷை, சிரத்தை, ஸமாதானம் என்ற ஆறு ஆத்ம குணங்கள்.) (4) मुमुक्षुत्वं (முக்தி பெற வேண்டும் என்ற தீவிரமான ஆசை.) இதன்பின் ஸத்குருவை அண்டி மஹாவாக்கியங்களைக்கேட்டு, அவற்றின் கருத்தை அறிந்து அந்தத் தத்துவத்தை ஐயமறத் தனதாக ஆக்கிக்கொள்ளவேண்டும்.

மேற்கூறிய யோக்யதைகளை அடைந்தாலுங்கில், பராசக்தியை அடைய யோக்யதை உள்ளவனாக ஆகிறான். அக்ஞானம் நீங்கித் தனது ஜீவாத்மாவே பரமாத்மா என்ற திடமான உண்மையை அறிகிறான்.

'साध्या' என்பதற்குப் பதில் 'साध्वी' என்று ஒரு பாடாந்தரமும் இருக்கிறது. இதன் பொருள் என்னவெனில் ஸத்வகுணஸம்பன்னனாகிய பரமேசுவரனிடத்தில் உத்தமமான பதிவ்ரதா தர்மத்தைத் அநுஷ்டித்துக்கொண்டு ஸ்திரீகளைப் பாதிவ்ரத்யத்தை அநுஷ்டிக்கும்படி செய்பவள் என்பதாகும்.

ओं साध्यायै नमः ।
ஓம் ஸாத்யாயை நம: (228)

**सद्गतिदायिनी ।**
**ஸத்கதிதாயினீ** 229

(i) பரதேவதா ஸ்வரூபமாகிய முக்தி நிலையை அளிப்பவள்.

விவரணம் :— 'ஸத்கதி' என்பது உத்தமமான நற்கதி. அதாவது எந்த நிலையை அடைந்தால் மறுபிறவி உண்டாகாதோ அந்த நிலை. அதுவே முக்தி நிலை எனப்படும். பலனின் தன்மையை அறிந்தாலன்னியில் அதை அடைய ஒருவனும் முயற்சிக்கமாட்டான். முற்கூறிய முக்தியின் தன்மை, பரமாத்மஸ்வரூப்மே. இது பின்வரும் சுருதிகளிலிருந்து தெளிவுறும்.

[1] ब्रह्मविदाप्नोति परम्। "பிரம்மத்தை அறிந்தவன் முக்தியைப் பெறுகிறான்".

[2] ब्रह्म वेद ब्रह्मैव भवति। "பிரம்மத்தை அறிந்தவன் பிரஹ்மமாகவே ஆகிறான்".

ये पूर्वं देवा ऋषयश्च तद्विदुः ते तन्मया अमृता वै बभूवुः। "எந்தத் தேவர்களும் ரிஷிகளும் முதலில் அந்தப் பரமாத்மாவை அறிந்தார்களோ அவர்கள் பரமாத்ம பாவத்துடன் சாசுவத நிலையை அடைந்தார்கள்".

பராசக்தி இவ்வித முக்தியைக் கொடுக்கிறாள். எப்படியெனின், அஞ்ஞானத்தை அகற்றி ஆத்மாவின் ஸச்சிதானந்தஸ்வரூபத்தை விளக்குவதால். ஆகவே गतिः என்ற பதத்திற்கு 'ஞானம்' என்ற பொருள் பொருந்தும்.

(ii) ஸத்வகுணயுக்தமான தேவலோகத்தை அடையும்படி செய்பவள்.

விவரணம் :— இரண்டாவது கருத்தில் பராசக்தியை உபாஸிப்பதனால் தமோகுணமும் ரஜோகுணமும் நீங்கி ஸத்வகுண மிகுதி உண்டாகும் என்று விளங்குகிறது. உயரமாகக் குதிப்பவன் விசைப் பலகை (Spring Board) யினின்று குதித்தானாகில் மிகவும் உயர்ந்துள்ள பொருளையும் எட்டிப்பிடிப்பான். முக்தியை உயரத்தில் உள்ள பொருளாகக் கருதினால், ஸத்வகுண மேம்பாட்டினால் அதை எளிதில் அடையலாம். ரஜோகுணம், தமோகுணம்

1. தைத்திரீயோபநிஷத். 2. முண்டகம் 3-2-9.

என்பவற்றில் ஆழ்ந்தவர் முக்தியைப் பெறுவது கூடாத காரியம். ஸத்வத்தை அதிகரிப்பதால், பராசக்தி முக்தி ஸாதனத்தை உபாஸகனுக்கு அளிக்கிருள்.

ओं सद्गतिदायिन्यै नमः ।

ஓம் ஸத்கதிதாயின்யை நமః (229)

सनकादिमुनिध्येया ।

ஸநகாதிமுநித்யேயா 230

ஸனகர் முதலிய முனிவர்கள் யாரை வெகு ஆதரவுடன் தமது ஆத்ம வஸ்துவாகவே கண்டறிந்தார்களோ அந்தப் பராசக்தி.

விவரணம்:— மனனம், அதாவது சிந்தனை என்பதை வழக்கமாகச் செய்பவர்களே முனிவராவர். இப்படிச் செய்வதால் பிரஹ்ம ஸாக்ஷாத்காரம் செய்தவர்களாவர். ஸனகர், ஸனந்தனர், ஸநாதனர், ஸனத்குமாரர், முதலியவர்கள் பிரஹ்மாவின் புதல்வர்கள். பிரஹ்மாவின் மனத்திலிருந்து பிறந்தவர்கள். ஞானவைராக்கியம் பொருந்தி, முக்தி மார்க்கத்தை உலகில் உபதேசித்தவர்கள். இவர்களால் பராசக்தி தமது ஆத்மவஸ்துவாக அறியப் பட்டனள் என்பது கருத்து.

[1] क्षेत्रज्ञं चापि मां विद्धि "சரீரத்தினுள் உள்ளறிவாய் விளங்குவது நான் (பரமாத்மா) என்று, அர்ஜுனு! அறிந்துகொள்வாயாக".

[2] "अथ योऽन्यां देवतामुपास्तेऽन्योऽसावन्योऽहमस्मीति न स वेद यथा पशुः" "தனக்கு இதரமான தேவதையை 'இந்த தேவதை வேறு, நான் வேறு' என்ற பாவனையுடன் எவன் உபாஸிக்கிருனே அவன், உண்மையை எப்படி மிருகம் அறியமாட்டாதோ, அதைப்போல் (அவனும்) உண்மையை அறியமாட்டான்".

[3] मृत्योः स मृत्युमाप्नोति य इह नानेव पश्यति । "ஜகத்தில் ஸ்தூலமாகக் காணப்படும் வித்தியாஸங்களை எவன்

1. கீதை 13–2. 2. பிருஹதாரண்யம் 1–4–10
3. கடோபநிஷத் 4–10.

உண்மை என்று எண்ணுகிறுனே, அவன் திரும்பத்திரும்ப ஜனன மரணத்தை அனுபவிக்கிறுன் ".

ओं सनकादिमुनिध्येयायै नमः ।

ஓம் ஸநகாதிமுநித்யேயாயை நம: (230)

सदाशिवकुटुम्बिनी ।

**ஸதாஶிவகுடும்பிநீ** 231

யாருடைய குடும்பமாக ஸதாசிவன் இருக்கிருரோ அவள். (பரமாத்ம பராசக்தி ஸம்பந்தத்தை முன்னுரையில் பார்க்கவும்)

ओं सदाशिवकुटुम्बिन्यै नमः ।

ஓம் ஸதாஶிவகுடும்பிந்யை நம: (231)

सकलाधिष्ठानरूपा सत्यरूपा समाकृतिः ।
सर्वप्रपञ्चनिर्मात्री समानाधिकवर्जिता ॥ ४५ ॥

ஸகலாதிஷ்டாநரூபா ஸத்யரூபா ஸமாக்ருதி: ।
ஸர்வ ப்ரபஞ்ச நிர்மாத்ரீ ஸமாநாதிக வர்ஜிதா ॥

सकलाधिष्ठानरूपा ।

**ஸகலாதிஷ்டாநரூபா** 232

எல்லா வஸ்துக்களிலும் அதிஷ்டானம், அல்லது ஆதாரசக்தியாக விளங்குபவள்,

விவரணம் :- பரமாத்ம வஸ்து எது என்ற கேள்விக்குச் சுருதிகள் அளிக்கும் பதில் என்னவெனின்,

[1] अथात आदेशो नेति नेति । " 'இதில்லை' 'இதில்லை' யென்று நாம்ரூப வஸ்துக்கள் ஒன்றுமில்லை" யென்றும்,

[2] नेह नानास्ति किंचन । "ஜகத்தில் உண்மையாக வேற்றுமை என்பது இல்லை" என்றும்,

[3] सर्वं खल्विदं ब्रह्म । 'இவ்வனைத்தும் பிரஹ்மமே' என்பதுமே ஆகும். இவ்விடைகளிலிருந்து காரியங்களாகிய

1. பிருஹதாரண்யகம் 2-3-6. 2. கடோபநிஷத் 4-11.
3. சாந்தோக்யம் 3-14-1.

பிரபஞ்ச வஸ்துக்களுக்குக் காரணம் ஒன்றேயென்றும், நாமரூபபேதங்களை அகற்றிவிட்டால், காரணப்பொருள் நமக்கு விளங்குமென்றும் தெரிகிறது. இக்காரணவஸ்துவே அதிஷ்டானமாக இருக்கும் பராசக்தி.

ओं सकलाधिष्ठानरूपायै नमः ।

ஓம் ஸகலாதிஷ்டாநரூபாயை நம: (232)

सत्यरूपा ।

ஸத்யரூபா 233

(i) ஜடம், பொய் என்பவைகளுக்கு எதிரிடையாக ஸச்சிதானந்தஸ்வரூபமாக விளங்குபவள். அதாவது நித்ய சுத்த சைதன்யமாகப் பராசக்தி விளங்குகிறாள் என்பது.

(ii) பிருதிவி, அப்பு, தேஜஸ், வாயு, ஆகாசம் என்ற பஞ்சபூத வடிவமாய்த் தோன்றுபவள்.

விவரணம் :— பரிணாம (real transformation) வாதப்படி பரமாத்ம வஸ்து ஜகத்தாக மாறுபாடு அடைகிறது. இதையொட்டி இரண்டாவது அர்த்தம் விளைகிறது. 'ஸத்' என்பது கட்புலனுக்கு விஷயமாயிருக்கும் பிருதிவி, நீர், நெருப்பு என்ற மூன்று பூதங்கள். 'த்யத்' என்பது கட்புலனால் அறியமுடியாமல் இருந்துகொண்டு ஸ்பர்ச, சப்தங்களினால் ஊகிக்கப்படும் வாயு, ஆகாசம் என்பவை. 225ம் மந்திரத்தின்கீழ் இதன் விளக்கத்தைப் பார்க்கவும். [1] सच्च त्यच्चाभवत् । "'ஸத்' ஆகவும், 'த்யத்' ஆகவும் ஆயிற்று".

ओं सत्यरूपायै नमः ।

ஓம் ஸத்யரூபாயை நம: (233)

समाकृतिः ।

ஸமாக்ருதி: 234

(i) பேதமற்று ஒன்றாக இருக்கும் ஸச்சிதானந்த பாவமே யாருடைய வடிவமோ அவள்.

---

1. தைத்திரீய உபநிஷத் ஆனந்தவல்லி.

(ii) எவ்வித வடிவம் சாஸ்திரங்களில் மிகவும் உத்தம மாகக் கூறப்பட்டிருக்கிறதோ, அவ்வித வடிவத்தினின்றும் கூடுதல், குறைவுகள் அற்று, அதே வடிவத்துடன்கூடியவள்.

(iii) குணம், அழகு, பலம், வீர்யம், கீர்த்தி, காம்பீர்யம், தைரியம், இங்கிதம் முதலியவற்றை அறிந்து கொள்வது, ஸர்வக்ஞத்வம் முதலிய தர்மங்களில் ஸதாசிவனுக்குத் துல்யமான அமைப்புடன் கூடியவள்.

(iv) ஜராயுஜம், அண்டஜம், ஸ்வேதஜம், உத்பிஜ்ஜம் என்ற நான்கு விதமாய்ப் பிறக்கும் ஜீவராசிகளில், அதததற்கு உரிய வடிவத்தில் வேற்றுமையின்றி வசிக்கும் தன்மை வாய்ந்த பராசக்தி. எல்லாவற்றிலும் சைதன்யம் ஒன்று என்பது கருத்து.

(v) ஜீவராசிகளின் கர்மாவுக்குத் தக்கவாறு பக்ஷ பாதமின்றிப் பலனை அளிக்கும் மூர்த்தியாக விளங்குபவள்.

(vi) பால்யம், யௌவனம், முதுமை என்ற விகாரங்கள் இன்றி, ஒரே நிலையான யௌவன ரூபத்தை உடையவள்.

समः सर्वेषु भूतेषु मद्भक्तिं लभते पराम् । "எல்லாப் பூத கணங்களையும் பிரஹ்மத்தின் இருப்பிடமாக எண்ணுபவன் என்னிடம் உயர்ந்த பக்தி பாவனையைப் பெறுகிறான்.

[1] अङ्गुष्ठमात्रः पुरुषोऽन्तरात्मा सदा जनानां हृदये सन्निविष्टः । "எல்லாவற்றிலும் அந்தர்யாமியாய் இருக்கும் பரமாத்மா கட்டைவிரல் அளவுடன் எப்பொழுதும் ஜனங்களின் ஹ்ருதயத்தில் வஸிக்கிறான்".

ॐ समाकृत्यै नमः ।

ஓம் ஸமாக்ருத்யை நமః (234)

सर्वप्रपञ्चनिर्मात्री ।

ஸர்வப்ரபஞ்சநிர்மாத்ரீ 235

ப்ரபஞ்சம் அனைத்தையும் உண்டாக்குபவள்.

1. கடோபநிஷத் 6-17.

விவரணம் :— தோன்றி மறைவது ஸம்ஸாரசக்கரம் எனப்படும். பிரபஞ்சம் எத்தனையோ தடவை தோன்றி மறைந்திருப்பதாலும், முதல்முதலாக எப்பொழுது தோன்றிற்று என்று சொல்லுவதற்கு இயலாமல் அநாதியாய், விளங்குவதாலும், விகாரமற்ற சைதன்யத்தைத் தனது ஆதாரமாகக் கொண்டிருப்பதாலும் பிரபஞ்சத்தை 'ஸர்வம்' என்று சொல்லலாம். இதைத் தோற்றுவிப்பது பராசக்தியே. ஆதலால் அவ்வளப் பிரபஞ்சத்தை உண்டாக்குபவள் என்று மந்திரம் கூறுகிறது.

ஆயினும் 'உண்டாக்குகிருள்' என்பது உபசாரமாகச் சொல்லப்படும் வார்த்தையாகும். ஏனென்னில் எப்படி 'தேவதத்தன் சமைக்கிருன்' என்று சொல்லும்பொழுது உண்மையில் தேவதத்தன் சமைக்கவில்லையோ, அக்னியே சமைக்கிறதோ. அதைப்போல் பிரபஞ்சத்தில் நடக்கும் ஸம்பவங்கள் அனைத்தும் ஜீவனுல் நடைபெறுகிறது. ஜீவனுக்கு ஆதாரம் பராசக்தி. ஆகையால் உபசாரமாகப் பராசக்தி செய்கிருள் என்று கூறப்படுகிறது.

ஜீவன் ஸூக்ஷ்மமான அவஸ்தையிலிருந்து ஸ்தூலமான வஸ்துக்களாக மாறுபாடு அடைவதை ஆங்கிலத்தில் 'இவலூஷன்' (Evolution) என்பார்கள். இதன் விவரணத்தை முன்னுரையில் 5-ஆம் பகுதியில் பார்க்கவும்.

'பிரபஞ்சம்' என்ற பதத்திற்கே 'விஸ்தரிக்கப்பட்டது' என்று பொருள். ஒன்று பற்பலவாக ஆகுதல்.

एकं बीजं बहुधा यः करोति । "ஒரு வித்திலிருந்து அநேக ரூபங்கள் தோன்றும்படி யார் செய்கிருரே".

ॐ सर्वप्रपञ्चनिर्मात्र्यै नमः ।

ஓம் ஸர்வப்ரபஞ்சநிர்மாத்ர்யை நம: (235)

समानाधिकवर्जिता ।

ஸமாநாதிகவர்ஜிதா 236

(i) தனக்கு இணையாகவோ, உயர்வாகவோ வேறு ஒன்றும் இல்லாத தன்மை வாய்ந்தவள்.

விவரணம் :— ‘ ஸமானம் ’ என்றால் இணை. குலம், சீலம், ஜாதி, குணம் முதலியவற்றால் பராசக்திக்கு ஒப்பாக ஒன்றையும் கூறமுடியாது. இவ்வகைகளில் அவளுக்கு உயர்வாகவும் வேறு ஒன்றையும் கூறமுடியாது.

**न तस्य प्रतिमास्ति ।** “ பரமாத்மாவுக்கு இணை ஒன்றும் இல்லை ”.

[1] **विश्वाधिको रुद्रो महर्षिः ।** “ மஹரிஷியாகிய ருத்ரன் அனைத்தையும்விட மிகுந்தவன் ”.

**सर्वाधिपत्यं कुरुते महात्मा ।** “ பரமாத்மா அனைத்தையும் அடக்கியாள்பவன் ”.

[2] **एकमेवाद्वितीयम्** “ பரமாத்மா ஒன்றே. இரண்டல்ல. ”

[3] **न त्वत्समोऽस्त्यभ्यधिकः कुतोऽन्यो लोकत्रये ।** “பரமாத்மன்! மூவுலகிலும் உனக்கு இணையானது ஒன்றுமில்லை. மிகுந்தது எப்படியிருக்கமுடியும் ?”

(ii) பராசக்தியினால் கொண்டாடத்தக்க ஸமான வஸ்துவோ பூஜிக்கத்தக்க உயர்ந்த வஸ்துவோ ஒன்றும் கிடையாது.

குறிப்பு :— சிவாலயங்களில் ‘ நாத ’ ரூபமாய் இருக்கும் பரமேசுவரனை ‘ பிந்து ’ என்று கருதுவர். பராசக்தி இவரை நைவேத்ய, கர்ப்பூராராதனைகளினால் பூஜிப்பதாக சிவாகமங்களில் சொல்லப்படுகிறது. இது இந்த மந்திரத்திற்கு எதிர்மறையாக ஆகாது ; ஏனெனில் பரமாத்மாவின் சக்தியே பராசக்தி என்பது முன்னுரையில் பகுதி 6ல் விளக்கப்பட்டுள்ளது.

**ओं समानाधिकवर्जितायै नमः ।**

ஓம் ஸமானாதிகவர்ஜிதாயை நம: (236)

**सर्वोत्तुङ्गा सङ्गहीना सगुणा सकलेष्टदा ।**

**ककारिणी काव्यलोला कामेश्वरमनोहरा ॥ ४६ ॥**

---

1. தைத்திரீயாரண்யகம் 10-28. 2. சாந்தோக்யம் 6-2-1.
3. கீதை 11-43.

ஸர்வோத்துங்கா ஸங்கஹீநா ஸத்குணா ஸகலேஷ்டதா ।
ககாரிணீ காவ்யலோலா காமேஸ்வர மனோஹரா ॥

**सर्वोत्तुङ्गा ।**

**ஸர்வோத்துங்கா** 237

('ஸர்வம்' என்ற பிரபஞ்சத்திற்குக் காரணமாக இருப்பதால்) பிரபஞ்சத்தைவிட உயர்ந்தவள்.

விவரணம் :— காரணப்பொருள் காரியப்பொருள்களை விட உயர்ந்தது என்பதை உலகில் நாம் கண்டிருக்கிறோம். இந்த நியாயத்தால் ஸர்வபிரபஞ்ச காரணமான பராசக்தி உயர்ந்தவள்.

[1]**पादोऽस्य विश्वा भूतानि । त्रिपादस्यामृतं दिवि ।** "பரமாத்மா தனது சக்தியில் கால் பாகத்தினால் எல்லாப்பூதராசிகளையும், மீதி முக்கால் பாகத்தினால் விண் அனைத்தையும் ஜீவிக்கும்படி செய்கிறார்.

**ओं सर्वोत्तुङ्गायै नमः ।**

ஓம் ஸர்வோத்துங்காயை நமः (237)

**सङ्गहीना ।**

**ஸங்கஹீநா** 238

ஒன்றிலும் பற்றில்லாதவள்.

விவரணம் :— பராசக்திக்கு அவயவங்கள் இல்லை. வேறொன்றை ஆசிரயிக்கக் காரணம் இல்லாதவள். குணவேற்றுமைகள் அற்றவள். நித்திய சுத்தஞானஸ்வரூபி இத்தன்மைகள் வாய்ந்திருப்பின் வேறொன்றில் பற்று எப்படி இருக்கக்கூடும்?

[2] **असङ्गो न हि सज्जते ।** "பற்றற்று ஒன்றிலும் ஒட்டாது இருப்பவன் பரமாத்மா".

**न चास्य कश्चिज्जनिता न चाधिपः ।** "பரமாத்மாவை உண்டுபண்ணினவன் ஒருவனும் இல்லை. அவன் ஒருவனுக்கும் வசப்பட்டவன் அன்று".

---

1. புருஷஸூக்தம் 2. பிருஹதாரண்யகம் 4-4-22.

ओं सङ्गहीनायै नमः ।

ஓம் ஸங்கஹீனாயை நம: (238)

सगुणा ।

ஸகுணா 239

(i) ஏற்றத்தாழ்வு இன்றி, உத்தமமான குணம் பொருந்தியவள்.

விவரணம்:— 'ஸமா: குணா:' என்று பொருள்படுத்தி 'ஸமா:' என்பதற்கு 'ஒரே உத்தமத் தன்மை' என்று அர்த்தம் பண்ணி, இத்துடன் பொருந்திய 'ஸத்ய காமத்வம்', 'ஸத்யஸங்கல்பத்வம்' முதலிய குணங்களோடு கூடியவள் என்ற முற்கூறிய அர்த்தம் கிடைக்கிறது.

(ii) முறையே ஸத்வம், ரஜஸ் தமஸ் என்ற குணங்களோடு கூடிய விஷ்ணு, பிரஹ்மா, ருத்ரன் என்ற மும்மூர்த்தி ஸ்வரூபமாயிருப்பதால் முக்குணங்களுடன் கூடியவள்.

ओं सगुणायै नमः ।

ஓம் ஸகுணாயை நம: (239)

सकलेष्टदा ।

ஸகலேஷ்டதா 240

(i) இச்சிக்கப்படும் அனைத்தையும் தருபவள்.

விவரணம்:— பராசக்திக்கு ஸர்வக்ஞத்வம், ஸர்வ சக்தத்வம் இரண்டும் இருப்பதால், நமது இச்சைகளை அறியும் சக்தியும், அவற்றை நிறைவேற்றும் சக்தியும் பொருந்தியிருக்கிறாள். பலர் ஒரே இச்சையைக் கொண்டாலும், ஒருவனே பல இச்சைகளைக் கொண்டாலும் அனைத்தையும் பூர்த்தி செய்பவளாகப் பராசக்தி விளங்குகிறாள். ஆகையால் அனைவரும் அவளிடம் நம்பிக்கை வைத்து அவளை ஆராதிக்கின்றனர்.

(ii) எல்லா ஜீவர்களுக்கும், எல்லாவிதமான இச்சை இருந்தபோதிலும், அந்த அந்த ஜீவனின் வாழ்வினைக்குத் தக்கவாறு பயனை அளிப்பவள்,

விவரணம் :— ஆசைக்கோர் அளவில்லை என்பர். ஆனால் அவனவன் ஊழ்வினைக்குத் தக்கவாறே அவனவன் பாக்கியத்தின் அளவும் இருக்கும். இந்த நியதி இல்லையாகில், தர்மம் அழிந்துவிடும். பராசக்தி ஜகத்தைக் காப்பவளாதலால், கருணைவடிவமாக விளங்கினும், ஜீவராசிகளின் மனப்பான்மையை நன்கு உணர்ந்து, அதற்குத்தக்க அளவிலேயே பயனையும் அளிப்பாள் என்பது கருத்து.

(iii) எல்லோராலும் பூஜிக்கப்பெற்று அவர்களுக்கு பலனைத் தருபவள்.

விவரணம் :— யாக, யக்ஞங்களினாலோ, த்யானாதி ஆராதனைகளினாலோ, பிரஹ்மார்ப்பண பாவனையுடன் செய்யப்படும் பூஜையை உத்தமமாக அங்கீகரித்துக் கர்ம பந்தத்தை விலக்கி முக்தியை அளிப்பவளாயும், காமனையுடன் செய்யப்படும் கர்மாக்களுக்குப் புண்ய, பாப பலனை அளித்து ஜனனமரணாதி பந்தங்களுடன் இணைப்பவளாகவும் இருப்பவள்.

(iv) உடல், உடலிலுள்ள அவயவங்கள் இவ்விரண்டு வகைகளிலும் மிகவும் வேற்றுமைப்பட்ட ஜீவராசிகளுக்கு, தத்தம் அனுபவத்திற்கு ஏற்ற பலனை அளித்து எறும்பு முதல், பிரஹ்மா பரியந்தம் உள்ள இன்ப அநுபவங்களைத் தருபவள்.

ओं सकलेष्टदायै नमः ।

ஓம் ஸகலேஷ்டதாயை நமः (240)

ककारिणी ।

**ககாரிணீ** 241

காதி வித்யையில் மூன்றும் பாகத்தில், இரண்டாவது வர்ணமாகிய 'ககாரம்'யாரை விளக்குவதாக இருக்கிறதோ அவள்.

ओं ककारिण्यै नमः ।

ஓம் ககாரிண்யை நமः (241)

काव्यलोला ।

**காவ்யலோலா** 242

(i) வால்மீகி, வேதவ்யாஸர் முதலியவர்களால் செய்யப்பட்ட காவ்யங்களில், நாநாவித வாக் விலாஸங்களாகவும், அர்த்தபாவனைகளாகவும் விளங்குபவள்.

விவரணம் :— ஸௌந்தர்யலஹரியில் கீழ்க்கண்ட சுலோகம் இருக்கிறது.

सावित्रीभिर्वाचां शशिमणिशिलाभङ्गरुचिभिः
वशिन्याद्याभिः त्वां सह जननि साञ्चिन्तयति यः ।
स कर्ता काव्यानां भवति महतां भङ्गिरुचिभिः
वचोभिर्वाग्देवीवदनकमलामोदमधुरैः ॥

"தாயே! சந்திரகாந்தமணிபோல் காந்தியுடன் விளங்கும், வாக் வைபவத்தைக் கொடுக்கும் வசினி, காமேச்வரி, ஸர்வேச்வரி, கௌலினி, மோதினி, ஜயினி, அருணை, விமலா என்ற எட்டுத் தேவதைகளும் உனக்குப் பணிவிடை செய்துகொண்டிருக்கிறார்கள். இந்தக் கோலத்தில் உன்னைத் தியானிப்பவன் பங்கச்லேஷையுடன் கூடியதும், வாணியின் முகாரவிந்தத்தின் வாஸனைக்கு இணையான மதுரமாயும் உள்ள வாக்குகள் நிறைந்த மஹா காவ்யங்களைச் செய்யும் ஆற்றலை அடைகிறான்".

பராசக்தி உபாஸனையினால் விளையும் நற்பயன்களில் முற்கூறியதும் ஒன்று.

(ii) கவிகளால் இயற்றப்பட்ட ஸ்துதிப் பாடல்களில் மிகுந்த ப்ரீதியை வைத்திருப்பவள்.

விவரணம் :— ஒருவனிடமிருந்து நற்பயனையடைய அவனுக்குப் ப்ரீதியை உண்டுபண்ணவேண்டும். பராசக்தி ஸ்தோத்ரங்களையும், பாடல்களையும் சொல்லுவதால் அவளுக்குப் ப்ரீதியுண்டாகும். அவளுடைய அநுக்ரஹத்தைப் பெறலாம்.

இளம் வயதிலேயே ஸ்துதிப்பாடல்களை அர்த்தத்துடன் கற்பதன் நன்மை இதனின்று விளங்கும்.

ओं काव्यलोलायै नमः ।

ஓம் காவ்யலோலாயை நம: (242)

कामेश्वरमनोहरा ।

**காமேச்வரமநோஹரா** 243

காமேசுவரருடைய மனத்தை வசப்படுத்தியவள்.

விவரணம் :— இச்சாரூபியாக விளங்கும் காமேச்வரரின் இச்சைகளை, க்ரியாரூபிணியாகவும், சக்திரூபிணியாகவும் இருக்கும் பராசக்தி, பாதிவ்ரத்ய மேம்பாட்டுடன் நிறைவேற்றிவைப்பதால், அவருடைய மனத்தையே வசப்படுத்தியவளாக விளங்குகிருள்.

ओं कामेश्वरमनोहरायै नमः ।

ஓம் காமேச்வரமநோஹராயை நம: (243)

कामेश्वरप्राणनाडी कामेशोत्सङ्गवासिनी ।

कामेश्वरालिङ्गिताङ्गी कामेश्वरसुखप्रदा ॥ ४७ ॥

காமேச்வரப்ராணநாடீ காமேசோத்ஸங்கவாஸிநீ ।

காமேச்வராலிங்கிதாங்கீ காமேச்வரஸுகப்ரதா ॥

कामेश्वरप्राणनाडी ।

**காமேச்வரப்ராணநாடீ** 244

காமேசுவரருடைய ஜீவநாடியாக இருப்பவள்.

விவரணம் :— ஸௌந்தர்யலஹரியில்

शिवश्शक्त्या युक्तो यदि भवति शक्तः प्रभवितुं
न चेदेवं देवो न खलु कुशलः स्पन्दितुमपि ।

என்று கூறப்பட்டிருக்கிறது. அதாவது "சக்தியுடன் கூடி இருப்பதாலேயே பரமேசுவரனுல் சிருஷ்டியைச் செய்ய முடிகிறது. இப்படி இல்லையெனின் அவனுல் அசையக்கூட முடியாது" என்பது. ஆகையால் பராசக்தியே காமேசுவரருடைய ஜீவநாடி. பிராணன் எப்படி ஜீவநாடியின் வழியாக ஸஞ்சரிக்கிறதோ, அதைப்போல் பராசக்தியின் உதவியால் சிருஷ்டிவிலாஸங்கள் உண்டாகின்றன. பிராணிகளின் உடல் அமைப்பைப் பார்த்தால், ஹ்ருதயம் என்பது மாம்ஸகண்டமாயும், தாமரை மொக்கின் வடிவமாயும், உள்ளே துவாரத்துடன் கூடியதாயும், எட்டுத்

தளங்களோடு கூடியதாயும், கட்டைவிரல் அளவுள்ள துவாரம் பொருந்திய கர்ணிகையை (pericarp of a lotus) மத்தியில் கொண்டதாகவும் காணப்படுகிறது. அந்தக் கர்ணிகையினுடைய கேஸரங்கள் 101 நாடிகளின் உற்பத்திஸ்தானங்கள். இந்தக் கேஸரங்கள் கர்ணிகையின் துவாரத்தில் ஸம்பந்தப்பட்ட 'புரீதத்' என்ற நாடியில் பொருந்தியுள்ளன. ஸுஷும்நை என்ற ஒரு நாடி மூலாதாரத்திலிருந்து புறப்பட்டுக் கபாலத்திலிருக்கும் பிரஹ்மரந்த்ரம்வரை போகிறது. அதில் மூலாதாரம், ஸ்வாதிஷ்டானம், மணிபூரகம், அநாஹதம், விசுத்தி, ஆக்ஞை என்ற ஆறு சக்கரங்கள் இருக்கின்றன. இவைகள் முறையே பிருதிவீ, ஜலம், அக்னி, வாயு, ஆகாசம், மனஸ் என்ற ஆறு தன்மாத்திரைகளின் தன்மையாய் விளங்கிக்கொண்டு அததற்கு உரிய தேவதைகளுக்கு இருப்பிடமாயும், பீஜாக்ஷரங்களுடனும், தளங்களுடனும் இருப்பதாக யோக சாஸ்திரங்களில் கூறப்படுகிறது. சிவசக்தியே இவ்வித தேவதா ரூபமாக விளங்குகிருள். ஸூக்ஷ்மமான ஜீவன் ஸ்தூலமான தேஹத்தை எடுக்கும்பொழுது, முறையே ஆக்ஞையிலிருந்து மூலாதாரம் வரையிலுள்ள ஒவ்வொரு தன்மாத்திரையையும் வெளிப்படுத்திக்கொண்டு கடைசியில் பிருதிவீ என்ற ஸ்தூல வடிவை எடுத்துக் கொள்ளுகிறது. இத்துடன் ஸ்தூல வடிவம் பூர்த்தி அடைந்துவிடுவதால், பிருதிவீ தேவதை, குண்டலினீ என்ற பெயருடன், கீழ்நோக்கி, ஆவரண சக்தியாக இருந்துகொண்டு மூலாதாரத்தில் தாமரைத் தண்டில் இருக்கும் நூல்போல் இழைந்த ரூபத்துடன் இருக்கிருள். அவளை எழுப்பி பிரஹ்மரந்த்ரம் கொண்டுசேர்ப்பதையே யோகாப்பியாஸம் என்பார்.

முற்கூறிய ஸுஷும்ணுநாடி, முதுகெலும்புக்குள் உள்ள குழாய்போன்ற துவாரம் ஒன்றில் இருப்பதாகச் சொல்லப்படுகிறது. மூலாதாரம் முதுகெலும்பின்கீழ் நுனியில் இருக்கிறது. ஆக்ஞை புருவங்களின் நடுப்பாகத்திற்கு நேராக இருக்கிறது.

இந்த ஆறு சக்கரங்களுக்கும்மேல், பிரம்மரந்த்ரத்தை அடுத்து ஸஹஸ்ராரம் என்ற சக்கரம் இருக்கிறது. இதில் பரமாத்மா சுத்த சைதன்யமாக இருக்கிறார்.

குண்டலினியின் வலது பக்கத்தில் 'இடை' என்ற நாடி ஆக்ஞா சக்கரம்வரை செல்லுகிறது. அவளின் இடது பக்கத்தில் பிங்கலையென்ற நாடி செல்லுகிறது. இவ்விரண்டும் ஆக்ஞையில் சந்திக்கின்றன.

'இடை' என்பது அந்தக்கரணத்திலிருந்து வெளியே போகும் நாடி. பிங்கலையென்பது வெளியிலிருந்து அந்தக் கரணத்திற்கு உணர்ச்சிகளைக் கொண்டுபோகும் நாடி. விழித்துக்கொண்டிருக்கும்பொழுது, இவ்விரண்டு நாடிகளும் நேத்திரங்களில் தம்பதிகள்போல் தங்கள் நிலையை வைத்துக்கொண்டு விழித்துக்கொண்டிருக்கும் நிலையை (ஜாக்கிரதவஸ்தை) உண்டுபண்ணுகின்றன. ஸ்வப்னத்தில் மனத்தில் தங்கள் நிலையை வைத்துக்கொண்டும் நித்திரையில் அஞ்ஞானம் (ஒன்றையும் அறியாதிருத்தல்) என்பதைச் சார்ந்தும் இருக்கின்றன. இதை அநுபவிக்கும் ஜீவன் விழிப்பில், ஸ்தூல சரீரத்தை அபிமானமாகக் கொண்டு 'விசுவன்' என்று சொல்லப்படுகிறான். அதைப் போல், ஸ்வப்னத்தில் ஸூக்ஷ்ம சரீரத்தையும் நித்திரையில் காரண சரீரத்தையும் அபிமானத்துடன் அநுபவித்து, 'தைஜஸன்' 'பிராக்ஞன்' என்ற பெயர்களுடன் விளங்குகிறான்.

தூங்கும்பொழுது காரண சரீரத்தில் லயமடைந்திருந்த இந்திரியங்கள், பிராரப்த கர்மாக்களை ஜீவன் அநுபவிப்பதற்காக, புரீதத், நாடிகளின் வழியாகத் தத்தம் கோளங்களாகிய செவி, கண் முதலிய புலன்களுக்குத் தூக்கம் கலைந்ததும், சென்றுவிடுகின்றன. விழிப்பு என்பது முடிந்ததும், அரசன் எப்படித் தனது வேலைகளையும், லீலைகளையும் முடித்துக்கொண்டு அந்தப்புரம் சென்று துயிலுவானோ அதைப்போல் ஜீவனானவன் இந்திரியங்களுடன் நாடியின் வழியாக 'புரீதத்' சென்று ஹ்ருதயமென்ற உபாதி

யுடன் கூடிய பரமாத்மாவில் லயமடைகிருன். அப்பொழுது தூங்குவதாகச் சொல்லப்படுகிருன். ஆனுல் பரமாத்மா விடம் லயமானது அஞ்ஞானத்திஞல் அவனுக்கு விளங்குவ தில்லை. நித்திரையில் லிங்க சரீரம் காரண சரீரத்தில் மறைந்துவிடுகிறது. பிராணவாயுக்கள், 'ஆயுள்' என்ற ரூபமாக இருந்துகொண்டு சரீரத்தைக் காப்பாற்றுகின்றன. அதைப்போல் விழிப்பு, ஸ்வப்னம் என்ற இரண்டு அவஸ்தைகளிலும் பிராரப்த அநுபவத்திற்கு அவசியமான பிராணரக்ஷணம் என்பது, நித்திரையில் அஞ்ஞான ஸம்பந்தமுற்ற சைதன்யத்திஞலேயே உண்டாகிறது. அதாவது விழிப்பு, ஸ்வப்னம், நித்திரை என்ற மூன்று அவஸ்தைகளிலும் சைதன்யம் என்ற ஒரே ஆத்மசக்தியைச் சார்ந்தே அநுபவங்கள் உண்டாகின்றன. இந்தச் சைதன்யத்தின் 'ஸத்' என்ற லக்ஷணத்திஞலேயே நாடிகளுக்குப் பிராணன் தமதுள் செல்லும்படியான தன்மை உண்டாகிறது. ஆகையால் 'பிராண நாடி' என்ற பதம் உண்மையில் சைதன்யமாகிய பரமாத்மாவையே குறிக்கிறது. இந்த மந்திரத்தில் 'காமேசுவரருடைய பிராண நாடி' என்பதால் 'காமேசுவரருடைய அதிஷ்டான சைதன்யம்' என்ற திரண்ட பொருள் விளைகிறது.

[1] न प्राणेन नापानेन मर्त्यो जीवति कश्चन ।
इतरेण तु जीवन्ति यस्मिन्नेतावुपाश्रितौ ॥

"பிராணவாயு, அபானவாயு முதலிய பஞ்சப்பிராணன்களிஞல் ஒருக்காலும் பிராணிகள் ஜீவிக்கவில்லை. இவைகளுக்கு அன்னியமாகவும், இவைகளுக்கு ஆதாரமாகவும் யாதொன்று இருக்கிறதோ அதனுலேயேதான் பிராணிகள் ஜீவிக்கின்றன"

மேலும் 'ஜீவ' என்ற தாதுவுக்கு 'பிராணனைத் தரித்தல்' என்பது அர்த்தம். இதனின்றும் பிராணனை மற்ருென்று தரித்துக்கொண்டிருக்கின்றது என்பது விளங்குகிறது. அதையே 'சைதன்யம்', பரமாத்மா' என்கிருேம்.

1. கடோபநிஷத் 5-5.

ओं कामेश्वरप्राणनाड्यै नमः ।

ஓம் காமேச்வரப்ராணநாட்யை நம: (244)

कामेशोत्सङ्गवासिनी ।

காமேசோத்ஸங்கவாஸிநீ 245

காமேசுவரருடைய இடது தொடையில் வசிப்பவள்.

(57வது மந்திரத்தின் விவரணத்தைப் பார்க்கவும்.)

ओं कामेशोत्सङ्गवासिन्यै नमः ।

ஓம் காமேசோத்ஸங்கவாஸிந்யை நம: (245)

कामेश्वरालिङ्गिताङ्गी ।

காமேச்வராலிங்கிதாங்கீ 246

காமேசுவரரால் ஆலிங்கனம் பண்ணப்பட்ட அங்கத்தை உடையவள்.

ओं कामेश्वरालिङ्गिताङ्ग्यै नमः ।

ஓம் காமேச்வராலிங்கிதாங்க்யை நம: (246)

कामेश्वरसुखप्रदा ।

காமேச்வரஸுகப்ரதா 247

(i) காமேசுவரருக்குச் சுகத்தை அளிப்பவள்.

(ii) தன் பக்தர்களுக்குக் காமேசுவர அபேத ஞானத்தைக் கொடுத்து, தாங்களே ஸச்சிதானந்த ஆத்ம ரூபம் என்று ஸாக்ஷாத்காரம் பண்ணும்படி அருளி, நித்தியானந்த ஸுகத்தைக் கொடுப்பவள்.

ओं कामेश्वरसुखप्रदायै नमः ।

ஓம் காமேச்வரஸுகப்ரதாயை நம: (247)

कामेश्वरप्रणयिनी कामेश्वरविलासिनी ।
कामेश्वरतपःसिद्धिः कामेश्वरमनःप्रिया ॥ ४८ ॥

காமேச்வர ப்ரணயிநீ காமேச்வர விலாஸிநீ ।
காமேச்வர தபஸ்ஸித்தி: காமேச்வரமந:ப்ரியா ॥

कामेश्वरप्रणयिनी ।

காமேச்வரப்ரணயிநீ 248

காமேசுவரருடைய ப்ரீதிக்கு விஷயமாயிருப்பவள்; அதாவது யாரைக் காமேசுவரர் ப்ரீதியுடன் பாவிக்கிருரோ, அவள்.

விவரணம் :— பரமேசுவரன் ஆத்மாராமன். தனது நித்யானந்த ரூபத்திலேயே மகிழ்ந்திருப்பவன். பராசக்தியே பரமேசுவரனுடைய ஆத்மரூபமாய் இருக்கிருளாதலால், அவளிடம் பரமேசுவரன் மகிழ்ந்திருக்கிருர் என்பது கருத்து.

ॐ कामेश्वरप्रणयिन्यै नमः ।
ஓம் காமேச்வரப்ரணயிந்யை நம: (248)

कामेश्वरविलासिनी ।
காமேச்வரவிலாஸிநீ 249

காமேசுவரருடைய மாயா சக்தி விலாஸமாக விளங்குபவள்.

குறிப்பு :— முன்னுரையில் இந்தக் கருத்து விளக்கப் பட்டிருக்கிறது.

ॐ कामेश्वरविलासिन्यै नमः ।
ஓம் காமேச்வரவிலாஸிந்யை நம: (249)

कामेश्वरतपस्सिद्धिः ।
காமேச்வரதபஸ்ஸித்தி: 250

காமேசுவரர் ஜகத்தை ஸிருஷ்டிக்க வேண்டுமென்று செய்த தவத்திற்கு ஸாதனமாயிருந்து தவத்தை நிறைவேற்றுபவள்.

விவரணம் :— பிரச்னோபநிஷத்தில் "வைசித்ரியமான இந்த ஸ்ருஷ்டி எப்படி உண்டாயிற்று" என்ற கேள்விக்கு பிப்பலாதர் பதில் அளிப்பது, "प्रजाकामो वै प्रजापतिः स तपोऽतप्यत स तपस्तप्त्वा स मिथुनमुत्पादयते रयिं च प्राणं च" (१-४) (பிரஜாபதியானவர் பிரஜைகளை உண்டுபண்ண வேண்டுமென்ற விருப்பங்கொண்டவராய்த் தவம் புரிந்தார். தவம் புரிந்து பிராணன், ரயி என்ற இரண்டை உண்டு பண்ணினுர்) என்பது. பிராணன், ரயி என்பன பேத

ரூபங்களாக விளங்கும் புருஷன், ஸ்திரீ என்ற இரண்டுமானவை. இந்தப் பேதரூபங்களை உண்டுபண்ணும் பராசக்தி, பரமாத்மாவின் சக்திரூபமாய் நின்று அவர் தவத்துக்குப் பயனை அளிக்காள் என்று கருத்து.

ॐ कामेश्वरतपस्सिद्ध्यै नमः ।

ஓம் காமேச்வர தபஸ்ஸித்த்யை நம: (250)

कामेश्वरमनःप्रिया ।

காமேச்வரமந:ப்ரியா 251

அளவற்ற பிரியத்தைக் காமேசுவரர் யாரிடம் வைத்திருக்கிறாரோ அந்தப் பராசக்தி.

விவரணம்:— 'மன:' என்ற பதத்தை ஏன் உபயோகிக்கவேண்டுமென்றால், இங்கே குறிப்பிட்டிருக்கும் பிரியம் காரணமற்ற பிரியமன்று. விவேசன சக்தியுள்ள மனத்தினால் தீர்மானிக்கப்பட்ட பிரியம் என்று கருத்து. ஆதலால் என்றும் அழியாத பிரியமாகும்.

விவேகசூடாமணியில் (சு. 96) 'அந்தக்கரண'த்தின் விருத்திகள் நான்கு என்றும், அவை தத்தம் வேலைகளைச் சார்ந்து பெயர்பெற்றிருக்கின்றனவென்றும் சொல்லப் பட்டிருக்கிறது. அவை முறையே (1) மனம், (2) புத்தி, (3) அஹங்காரம், (4) சித்தம் என்பன. இவற்றில் 'मनस्तु सङ्कल्पविकल्पनादिभिः' ஸங்கல்பவிகல்பங்களைச் (விவேசன பூர்வம்) செய்வதால் மனம் என்ற பெயர் வந்தது.

ॐ कामेश्वरमनःप्रियायै नमः ।

ஓம் காமேச்வரமந: ப்ரியாயை நம: (251)

कामेश्वरप्राणनाथा कामेश्वरविमोहिनी ।

कामेश्वरब्रह्मविद्या कामेश्वरगृहेश्वरी ॥ ४९ ॥

காமேச்வர ப்ராணநாதா காமேச்வர விமோஹிநீ ।

காமேச்வர ப்ரஹ்மவித்யா காமேச்வர க்ருஹேச்வரீ ॥

कामेश्वरप्राणनाथा ।

காமேச்வரப்ராணநாதா 252

(i) காமேசுவரருடைய பிராணனாகிய ஹிரண்ய கர்ப்பத்தை ரக்ஷிப்பவள்.

விவரணம் :— அண்டங்கள் அனைத்தும் முதலில் 'ஹிரண்யகர்ப்ப' வடிவமாக இருந்தன. இதுவே பரமேசு வரனுடைய பிராணசக்தியின் முதலில் தோன்றிய உருவம். பராசக்தி, தாய் குழந்தையைக் காப்பதுபோல் இதைக் காத்து அண்டங்கள் உண்டாகும்படி செய்தனள். பரமாத்மாவையும், பராசக்தியையும் ஜகத்தின் பிதா, மாதாவாகக் கருதி அமைக்கப்படும் மந்திரம் இது.

(ii) (ஸ்தூலமாக) காமேசுவரருடைய பத்தினி யென்றும் பொருள்படுத்தலாம்.

ॐ कामेश्वरप्राणनाथायै नमः ।

ஓம் காமேச்வரப்ராணநாதாயை நமஃ (252)

कामेश्वरविमोहिनी ।

**காமேச்வரவிமோஹிநீ** 253

காமேசுவரருக்கு வியாமோஹத்தை உண்டுபண்ணு கிறவள்.

விவரணம் 1 :— இல்லாததை இருப்பதாகக் கருதுவது மோஹம் எனப்படும். உண்மையில், பரமாத்மாவும் பராசக்தியும் ஒன்றேயாயினும், தன்னை வேருக இருப்பது போல் காட்டி நாங்கள் பதி, பத்னியென்ற இருவர்கள் என்று எண்ணும்படி வியாமோஹத்தைப் பரமாத்மாவிடம் பராசக்தி உண்டுபண்ணுகிருள் என்பது ஓர் அர்த்தம்.

விவரணம் 2 :— மற்றது ; ஒரு விஷயத்திலேயே மனம் ஆழ்ந்து சென்றுவிட்டால் அப்பொழுது அவனுக்கு வேறு ஒன்றும் தோன்ருமலிருப்பதை உலகில் பார்க்கிரோம். பரமேசுவரன் தன் ஸ்வரூபமாயிருக்கும் பராசக்தியின் ஆனந்தத்தை நேரில் அறிந்து அதிலேயே ஆழ்ந்து வேறு ஒன்றும் தெரியாமல் தூண்போல் சலனமற்ற தன்மையில் இருக்கிருர். வேறென்றும் தெரியவில்லை என்ற காரணத் தால் இதை வியாமோஹம் என்று உபசாரமாக கூறப்படு

கிறது. அந்தப்புரத்திலிருக்கும் அரசனுக்கு வெளி விஷயங்கள் ஒன்றும் தெரியாமலிருப்பதால் பெண்ணால் மயக்கம் அடைந்தவன் என்று கூறுவதுபோல் பரமேச்வரனுக்கு ஸ்வஸ்வரூபானந்தத்தைக் காட்டி வேறொன்றும் தெரியவொட்டாதபடி செய்வதால் பராசக்தி பரமேசுவரனை மயக்குகிறாள் என்று உபசாரமாகக் கூறப்படுகிறது.

ओं कामेश्वरविमोहिन्यै नमः ।

ஓம் காமேச்வரவிமோஹிந்யை நம: (253)

कामेश्वरब्रह्मविद्या ।

**காமேச்வரப்ரஹ்மவித்யா** 254

மஹாவாக்கியங்களின் கருத்தை ஸாக்ஷாத்காரம் பண்ணுவதற்கு வழியைக்காட்டும் வித்யைக்குப் பிரஹ்ம வித்யை என்று பெயர். மஹாவாக்கியங்கள் யாரை விளக்குகின்றனவோ, அவரே காமேசுவரர். அவரை ஸாக்ஷாத்காரம்செய்ய வழியாக இருக்கும் பிரஹ்மவித்யை பராசக்தியேயாவள்.

ओं कामेश्वरब्रह्मविद्यायै नमः ।

ஓம் காமேச்வரப்ரஹ்மவித்யாயை நம: (254)

कामेश्वरगृहेश्वरी ।

**காமேச்வரக்ருஹேச்வரீ** 255

(i) பரமாத்ம தத்வஞானத்திற்கு ஈசுவரியாக விளங்குபவள்.

விவரணம் :—கிரஹிக்கப்படுவதால், 'க்ரஹ:' என்ற பதத்திற்கே ஞானம் என்ற அர்த்தம் பொருந்தும். यद् ज्ञात्वा सर्वमिदं ज्ञातं भवति तद्विजिज्ञासस्व तद्ब्रह्मेति । என்பது சுருதி. "எதை அறிந்தால் அனைத்தும் அறியப்பட்டதாக ஆகுமோ அதுவே பிரஹ்மம்". ஆகையால் 'காமேசுவரர் அல்லது பரமாத்மாவைப்பற்றிய ஞானம் ஸம்பூர்ண ஞானம்' அல்லது ஸர்வக்ஞத்வம். இதை அடையத் தூண்டுபவளாகவும், இந்த ஞானத்தைக் கொடுக்கும் சக்திவாய்ந்தவளாகவும் பராசக்தி விளங்குகிறாள்.

(ii) காமேசுவரரை எந்தக் கிருஹிணி (இல்லாள், மனைவி) அதிபதியாகப் பெற்றிருக்கிறாளோ அவள்.

விவரணம் :— லௌகிக ரீதியாகக் காமேசுவரரும், காமேசுவரியும் பதிபத்னிகளாகக் கருதப்படுகிறார்கள்.

ओं कामेश्वरगृहेश्वर्यै नमः ।
ஓம் காமேச்வரக்ருஹேச்வர்யை நம: (255)

कामेश्वराह्लादकरी कामेश्वरमहेश्वरी ।
कामेश्वरी कामकोटिनिलया काङ्क्षितार्थदा ॥ ५० ॥
காமேச்வராஹ்லாதகரீ காமேச்வர மஹேச்வரீ ।
காமேச்வரீ காமகோடி நிலயா காங்க்ஷிதார்த்ததா ॥

**कामेश्वराह्लादकरी ।**
**காமேச்வராஹ்லாதகரீ** 256

காமேச்வரருடைய நித்யதிருப்தத்வம் என்ற தன்மையாக விளங்கிக்கொண்டு, அவரை நித்யதிருப்தராக ஆக்குபவள்.

விவரணம் :— காமேச்வரர் அவாப்த ஸமஸ்தகாமர்; எல்லாவற்றையும் தன்வசம் ஆக்கியுள்ளவர். ஆகையால் நித்யதிருப்தர். திருப்தியிலிருந்து உண்டாகும் ஸுகத்திற்கு ஆஹ்லாதம் என்று பெயர். இந்த ஆஹ்லாதம் என்பது சக்தியின் ஒருவகை விலாஸமாகையாலும், பராசக்தியே ஸர்வசக்தியாய் விளங்குவதாலும், பராசக்தியே இவ்வித ஆஹ்லாதத்தை உண்டுபண்ணுபவளாக இந்த மந்திரத்தில் சொல்லப்பட்டது.

ओं कामेश्वराह्लादकर्यै नमः ।
ஓம் காமேச்வராஹ்லாதகர்யை நம: (256)

**कामेश्वरमहेश्वरी ।**
**காமேச்வரமஹேச்வரீ** 257

காமேசுவரருடைய மஹைச்வரியம் யாருடையதோ, அல்லது யாரிடமிருந்து உண்டாகிறதோ அந்தப் பராசக்தி.

விவரணம் :— மிகவும் பெரியதாயுள்ள ஐச்வர்யங்களுடன் கூடியிருப்பவள் மஹேச்வரீ. महान्प्रभुर्वै पुरुषः "பரமாத்மா மஹானாயும், பிரபுவாயும் இருக்கிறான்" என்பது சுருதி. பராசக்தியே காமேசுவரருடைய மஹத்வம், பிரபுத்வம் என்ற ரூபங்களோடு விளங்குகிறாள். ஆகையினாலேயே பராசக்தி 'பகவதி'யென்று சொல்லப்படுகிறாள்.

ऐश्वर्यस्य समग्रस्य वीर्यस्य यशसः श्रियः ।
ज्ञानवैराग्ययोश्चैव षण्णां भग इतीरणा ॥

"ஸம்பூர்ணமான ஐச்வரியம், வீர்யம், யசஸ், ஸ்ரீ, ஞானம், வைராக்யம் என்ற ஆறும் 'பகம்' (भगम्) என்று சொல்லப்படுவன"

"तमीश्वराणाम् परमं महेश्वरम्"

"ஈசுவராதிகளுக்குள் சிரேஷ்டரானவர் மஹேசுவரர்" என்பது சுருதி.

ओं कामेश्वरमहेश्वर्यै नमः ।
ஓம் காமேச்வரமஹேஸ்வர்யை நம: (257)

कामेश्वरी ।
காமேஸ்வரீ 258

மன்மதன் உபாஸித்த 'காதிவித்யா' ரூபமாக விளங்குபவள்.

स्मरोऽपि त्वां नत्वा रतिनयनलेह्येन वपुषा
मुनीनामप्यन्तः प्रभवति हि मोहाय महताम् ॥

"மன்மதன் உன்னை (பராசக்தியை) உபாஸித்து ரதிதேவியின் கண்களைக் கவரும் தனது ஸுந்தர சரீரத்தினால் மஹாமுனிவர்களின் சித்தத்திலுங்கூடக் காம வேதனையை உண்டுபண்ணும் சக்தியை அடைந்தான்" என்று ஸௌந்தர்யலஹரியில் பகவத்பாதாள் கூறுகிறார்.

ओं कामेश्वर्यै नमः ।
ஓம் காமேஸ்வர்யை நம: (258)

कामकोटिनिलया ।

**காமகோடி நிலயா** 259

ஸ்ரீ சக்கரத்தை உறைவிடமாகக்கொண்டவள்.

விவரணம் :— 96 சக்தி பீடங்கள் இருக்கின்றனவாம். அவற்றில் 'காமகோடி' என்பது ஒன்று. அதுவே 'ஸ்ரீ சக்கரம்' என்று சொல்லப்படும். பராசக்தி ஸ்ரீசக்கரத்தில் வசிக்கிறாள் என்பது கருத்து. எப்படி ஒரு பிரபு தனக்குப் பற்பல கிருஹங்கள் இருந்தாலும், அவற்றினுள் சிறந்த கிருஹத்திலேயே மிகுந்த பிரியத்துடன் வசிப்பானோ, அதைப்போல் பராசக்திக்கு ஸ்ரீசக்கரமே மிகவும் சிறந்த வாஸஸ்தலமாகும். ஸ்ரீ சக்கரத்தின் விவரணத்தை முன்னுரையிலும் பலசுருதியிலும் பார்க்கவும்.

ओं कामकोटिनिलयायै नमः ।

ஓம் காமகோடிநிலயாயை நமஃ (259)

काङ्क्षितार्थदा ।

**காங்க்ஷிதார்த்ததா** 260

பக்தர்களின் விருப்பங்களை நிறைவேற்றுபவள்.

விவரணம் :— சிறிதளவு அடையப்பட்டதோர் நன்மையைப் பெரிய அளவில் அடையவேண்டுமென்ற விருப்பம் 'காங்க்ஷை' எனப்படும். ஒருவன் பராசக்தியின் அருள் கிடைக்கவேண்டுமென்ற விருப்பங்கொண்டு அவளை உபாஸிப்பானாகில், அவள் தானாகவே அவனுக்குப் புருஷார்த்தங்கள் அனைத்தையும் பயக்கிறாள் என்பது பொருள்.

நமக்கு நன்மை எதுவென்று நமக்கே தெரியாது. நாம் நன்மையாயிருக்குமென்று கருதும் பொருள் ஒருக்கால் தீயதாகவும் முடியலாம். ஆகையால், நாம் ஒன்றையும் குறிப்பிடாமல், பராசக்தியின் கருணை வேண்டுமென்று உபாஸித்தால், அவள், தாய் சேயின் நலனை அறிவதுபோல் நமது நன்மை இன்னது என்பதை அறிந்து அதைத் தானாகவே தருவாள்.

ॐ काङ्क्षितार्थदायै नमः ।
ஓம் காங்க்ஷிதார்த்ததாயை நமஃ (260)

लकारिणी लब्धरूपा लब्धधीर्लब्धवाञ्छिता ।
लब्धपापमनोदूरा लब्धाहङ्कारदुर्गमा ॥ ५१ ॥

லகாரிணீ லப்தரூபா லப்ததீர் லப்தவாஞ்சிதா ।
லப்தபாபமனோதூரா லப்தாஹங்கார துர்கமா ॥

लकारिणी ।
**லகாரிணீ** 261

காதி வித்யையில் மூன்றாவது கண்டத்தில் மூன்றாவது வர்ணமாயிருக்கும் 'லகாரம்' யாரை விளக்குகிறதோ அந்தப் பராசக்தி.

ॐ लकारिण्यै नमः ।
ஓம் லகாரிண்யை நமஃ (261)

लब्धरूपा ।
**லப்தரூபா** 262

(i) ஸகுணத்தின் தடஸ்த லக்ஷணமும், நிர்குணத்தின் ஸ்வரூப லக்ஷணமும் பொருந்தியவள்.

விவரணம்:— எதனால் ஒன்று (ரூப்யதே) அறியப்படுகிறதோ, அது அதன் ரூபம், அதாவது லக்ஷணம். அந்த லக்ஷணத்துடன் கூடியதாக அதைச் சொல்லுகிறோம். பராசக்தி ஸச்சிதானந்த ஸ்வரூப லக்ஷணத்தினாலும் ,ஜகத்தாகிய தடஸ்த லக்ஷணத்தினாலும் அறியப்படுகிறாள். ஆதலால் அந்த லக்ஷணங்களுடன் கூடியிருக்கிறாள். 'ஸ்வரூப' 'தடஸ்த' லக்ஷணங்களின் விவரணத்தை 24-ஆம் மந்திரம் 4-ஆம் அர்த்தத்தில் பார்க்கவும்.

(ii) நாமரூபங்களை உடையவள்.

விவரணம்:— ரூப்யதே, அறியப்படுவது எதுவோ அது ரூபம் என்பதால், 'ரூபம்' என்பதற்கு 'அர்த்தம்' என்ற பொருள் கிடைக்கிறது உபலக்ஷணமாக, 'நாமாக்களும்'

'ரூபம்' என்ற பதத்தினால் குறிக்கப்படுகின்றன. பராசக்தி 'நாமரூபங்கள்' அற்றவளேனும், மாயாவிலாஸத்தினால், அவைகளுடன் கூடியிருப்பதாகத் தோன்றுகிறாள். இந்தத் தோற்றத்தினாலேயே, ஸ்துதிப் பாடல்களும், நாமாவளி களும் வழக்கத்தில் இருக்கின்றன. பராசக்தி மாயா விலாஸத்தினால், சப்தத்தையும் அர்த்தத்தையும் உண்டு பண்ணி பிறகு அவைகளை ஸ்பஷ்டமாக, ஸ்தூலமாக ஆக்கினாள்,

श्रीं लब्धरूपायै नमः ।

ஓம் லப்தரூபாயை நம: (262)

लब्धधीः ।

லப்ததீ: 263

(i) 'புத்தி' என்ற அந்தக்கரண விருத்திக்கு அதிஷ்டானமாக இருப்பதனால் அந்த விருத்தியுடன் கூடியவள்.

விவரணம்:— 'விவேகசூடாமணி' யில் அந்தக் கரணத்திற்கு நான்கு வகை விருத்திகள் (functions) உண்டென்றும், அந்த அந்த விருத்தியை ஒட்டி அதற்குப் பெயர் விளங்குகிறதென்றும் கூறப்பட்டிருக்கிறது. (சு. 96) இந் நான்கும் முறையே மனம், புத்தி, அஹங்காரம், சித்தம், எனப்படுவன. மனம் ஸங்கல்ப விகல்பங்களை ஆராயும் சக்தி வாய்ந்தது. புத்தி ஒரு செயலையோ, ஒரு விஷயத்தின் தத்வத்தையோ நிச்சயிக்கும் சக்தி வாய்ந்தது. அகங்கார மென்பது சரீர, இந்திரியாதிகளில் அபிமானம் வைத்து, தன்னைப் பிறரிலிருந்து தனித்ததாக உணரும் தன்மை வாய்ந்தது. சித்தம் புலன்களினால் உணரும் விஷயங்களில் எது எது தனக்கு உபயோகமோ, எது எதில் தனக்கு ருசி யிருக்கிறதோ அதை மட்டும் ஞாபகத்தில் ஊன்றிவைத்துக் கொள்ளும் சக்தி வாய்ந்தது.

முற்கூறிய நான்கு விருத்திகளுக்கும், பரமாத்ம சைதன்யம் அதிஷ்டானமாக இல்லாவிட்டால், அவைகள் உண்டாகவேமாட்டா. ஏனென்றால் அவற்றின் ஸ்வயமான

இயல்பு ஜடத்வம். விருத்தி மேம்பட்ட சைதன்யமே ஞானம். சைதன்யத்துடன்கூடிய அந்தக்கரணத்தின் வியாபாரங்களே விருத்திகளாவன. பராசக்தியின் ஸ்வரூப சைதன்யமே அந்தக்கரணத்திற்கு அடிப்படையாக இருந்து கொண்டு, விருத்திகளாகவும், அவற்றின் பலன்களாகவும் பிரகாசிக்கிறது. 'தத்வமஸி' முதலிய மஹாவாக்கியங்களின் விசாரணைக்கும், அஞ்ஞானத்தை அகற்றி பரமாத்ம தத்வத்தை அறிவதற்கும், அந்தக்கரண விருத்திகளே உபயோகப்படுகின்றன. பராசக்தியின் சைதன்யம் இவற்றின் அடிப்படையாக இல்லாவிடின், மஹாவாக்கிய விசாரணைகளைச் செய்யவும் முடியாது. அவை பயனற்றதாகவும் ஆகிவிடும். ஆகவே புத்தியென்ற அந்தக்கரண விருத்திக்கு அதிஷ்டானமாகப் பராசக்தி இருப்பதால், அத்துடன் கூடியிருப்பதாகப் பராசக்தி இந்த மந்திரத்தினுல் கூறப்படுகிருள்.

(ii) ஸர்வக்ஞத்வம் முதலிய சக்திகள் யாரிடம் விளங்குகின்றனவோ அந்தப் பராசக்தி.

விவரணம்:— 'தீ' என்ற பதத்திற்கு ஸர்வக்ஞத்வம் என்று அர்த்தம் பண்ணுவதால் இரண்டாவது அர்த்தம் கிடைக்கிறது.

ओं लब्धधिये नमः ।

ஓம் லப்ததியே நம: (263)

लब्धवाञ्छिता ।

**லப்தவாஞ்சிதா** 264

விரும்பப்படும் அனைத்தையும் முன்னமேயே அடைந்துள்ளவள். आप्तकामा "ஆப்தகாமா" என்று பொருள்.

ओं लब्धवांछितायै नमः ।

ஓம் லப்தவாஞ்சிதாயை நம: (264)

लब्धपापमनोदूरा ।

**லப்தபாபமனோதூரா** 265

பாபபுத்தியுடன் கூடினவர்களால், அறியமுடியாதவள்.

விவரணம் :— வர்ணாசிரம தர்மங்களை ஈசுவரார்ப்பண புத்தியுடன் செய்துவந்தால் சித்தசுத்தி உண்டாகி மனதில் உள்ள கல்மஷங்கள் அகன்றுவிடும். இவ்விதம் தெளிவுற்ற மனப்பான்மையை அடைந்தவர்களால் பராசக்தி எளிதில் அடையப்படுகிறாள். ஆனால் இதற்கு விபரீதமாய் நடப்பவர்களுக்குப் பாப வாஸனைகள் உண்டாகின்றன. அதன் பயனாய்ப் பராசக்தி அடையப்படாதவளாக ஆகிறாள்.

ॐ लब्धपापमनोदूरायै नमः ।

ஓம் லப்தபாபமனோதூராயை நமः (265)

लब्धाहङ्कारदुर्गमा ।

லப்தாஹங்காரதுர்கமா 266

'நான்', 'எனது' என்ற அபிமானத்துடன் கூடியவர்களால் அறியப்படாமலும், அடையப்படாமலும் இருப்பவள்.

விவரணம் :— அஹந்தை, மமதை என்பன ஆஸுர ஸ்வபாவங்களாகும். ரஜோகுணம், தமோகுணம் என்பவற்றின் அடையாளங்கள். இக்குணங்கள் பொருந்தியவர்கள் எவ்வளவு முயன்றாலும், அவர்களால் பராசக்தியை நன்கு அறியமுடியாது. ஸத்வகுணம் ஒருவனிடத்தில் இல்லாவிட்டால், மனதிற்கு சாந்தி இருக்காது. மனம் ஒருநிலையிலும் நிற்காது. ராஜஸ குணத்தின் பயனாகிய விக்ஷேபமும், தமோ குணத்தின் பயனாகிய ஆவரணமும் உண்டாகி அக்ஞானம் மேலோங்கி, நித்திரை, சோம்பல் என்பவைகளுக்கு ஆளாகி, முக்தி மார்க்கத்தை விளக்கும் ஆசாரியன், வேதங்கள் என்பவற்றில் சிரத்தை குறைந்து, அர்த்த லாபத்தில் மனதும் சென்று, லாப நஷ்டங்களினால் இன்பதுன்பங்களை அநுபவித்துக்கொண்டிருக்கும் அஸுர பிரகிருதிகளின் மனத்தில் பராசக்தி உதயமாகமாட்டாள். அவர்கள் ஸம்ஸாரக் கடலிலேயே உழன்றுகொண்டு இருப்பார்கள். ஆகையால் 'நான்', 'எனது' என்ற அபிமானங்களைக் கூடியவரை அகற்ற ஒவ்வொருவரும் முயலவேண்டும் என்பது கருத்து.

ஸௌந்தர்யலஹரியில் (சு. 21) मृदितमलमायेन मनसा महान्तः पश्यन्तो दधाति परमाह्लादलहरीम्" என்று சொல்லப் படுகிறது. அதாவது, "அஹந்தை, மமதை என்ற அக்ஞானமும், காமமும் அகன்ற மனத்துடன் விளங்கும் மஹான்கள் (பராசக்தியை) அறிந்ததன் பயனாக மிகுந்த ஆனந்த வெள்ளத்தை அநுபவிக்கிறார்கள்".

ओं लब्धाहङ्कारदुर्गमायै नमः ।
ஓம் லப்தாஹங்காரதுர்கமாயை நமः (266)

लब्धशक्तिर्लब्धदेहा लब्धैश्वर्यसमुन्नतिः ।
लब्धवृद्धिर्लब्धलीला लब्धयौवनशालिनी ॥ ५२ ॥

லப்தஶக்திர் லப்ததேஹா லப்தைச்வர்யஸமுந்நதிः ।
லப்தவ்ருத்திர் லப்தலீலா லப்தயௌவநஶாலிநீ ॥

लब्धशक्तिः ।
லப்தஶக்திः 267

ஸகல ஸாமர்த்தியங்களுடன்கூடிய மாயாசக்தியாக விளங்குபவள்.

விவரணம்:— மாயையின் ஸாமர்த்தியத்தை விவரிக்கும்பொழுது 'अघटितघटनापटीयसी' என்று சொல்லப் படுகிறது. அதாவது 'நேரக்கூடாததையும் நேரும்படி செய்யும் சக்தி வாய்ந்தவள்' என்பது.

[1] "ते ध्यानयोगानुगता अपश्यन् देवात्मशक्तिं स्वगुणैर्निगूढाम्"

"அவர்கள் யோகசித்தியினால், ஸத்வ, ரஜஸ், தமோ குணங்களினால் மறைக்கப்பட்ட பரமாத்மாவின் ஸ்வரூப லக்ஷணத்தை அறிந்தார்கள். மூன்று குணங்களாகிய மாயாசக்தியையும் அறிந்தார்கள்".

ओं लब्धशक्त्यै नमः ।
ஓம் லப்தஶக்த்யை நமः (267)

लब्धदेहा ।
லப்ததேஹா 268

1. ச்வேதாச்வதரம் 1-3.

சரீரத்தை உடையவள்.

விவரணம் :— ஜீவாத்மாக்கள் தங்கள் கர்மவசத்தால் சரீரத்தை அடைகிருர்கள். ஆனல் பராசக்தி இச்சா சக்தியினல் நினைத்த ரூபத்துடன் தோன்றுகிருள். தனக்கு வசப்பட்ட மாயா சக்தியினல் சிவன், சக்தியென்ற பதிபத்னி பாவமாகிய இரண்டாக, பக்தர்களுக்கு உபாஸனைக்கு எளியதாய் இருப்பதற்காக, உருகிய நெய் கெட்டியாவது போல் ஸ்வரூபங்களுடன் கூடியதுபோல் விளங்குகிருள்.

ॐ लब्धदेहायै नमः ।

ஓம் லப்ததேஹாயை நம: (268)

लब्धैश्वर्यसमुन्नतिः ।

**லப்தைஶ்வர்யஸமுந்நதி:** 269

ஐசுவரியாதிகளின் பராகாஷ்டை அதாவது உன்னத நிலை யாருடையதாக இருக்கிறதோ அந்தப் பராசக்தி.

விவரணம் :— பராசக்தியை உபாஸிக்கும் அகஸ்திய முனிவர் முதலிய மஹரிஷிகள் மாயா ரஹிதமான உயர்ந்த ஐச்வர்யாதிகளுடன் விளங்கும்பொழுது, பராசக்தியின் ஐசுவரிய விலாஸம் இத்தகையதென்று சொல்ல வேண்டுவதில்லை.

[1] तमीश्वराणां परमं महेश्वरम् ।

"ஈசுவராதிகளைக் காட்டிலும் சக்திவாய்ந்தவர் மஹேசுவரன்.

[2] नान्तोऽस्ति मम दिव्यानां विभूतीनां परन्तप ।

"எனது (பகவானது) திவ்ய சக்திகளுக்கு முடிவே இல்லை, அர்ஜுனா!".

[3] एष सर्वेश्वर एष सर्वज्ञ एषोऽन्तर्याम्येष योनिः सर्वस्य ।

"இவனே ஸர்வேசுவரன், ஸர்வக்ஞன், அந்தர்யாமி, அனைத்திற்கும் காரணம்".

---

1. சுவேதாச்வதரம் 6-7, 2. கீதை 10-40 3. மாண்டூக்யம்

ओं लब्धैश्वर्यसमुन्नत्यै नमः ।

ஓம் லப்தைஶ்வர்யஸமுந்நத்யை நம: (269)

लब्धवृद्धिः ।

**லப்தவ்ருத்தி:** 270

ஸர்வ வியாபியாக, (பரிபூர்ண ஸ்வரூபியாக) விளங்குபவள்.

விவரணம் :— வளரும் இயல்புடன்கூடிய சரீராதி அவயவங்களுடன் கூடியதாக அர்த்தமன்று. ஏனெனில் சரீரமும், அவயவங்களும் அவற்றின் வளர்ச்சியும், க்ஷயமும் கர்மபந்தத்திற்கு உட்பட்டவை. இந்த மந்திரத்தில் 'விருத்தி' என்ற பதத்திற்கு 'வியாபகத்வம்' ('பூர்ணத்வம்') என்று அர்த்தம்.

[1] स वा एष महान् अज आत्मा ... न वर्धते कर्मणा "மஹத்தாயும், அஜாத்யந்தமுமான ஆத்மா கர்மாவினால் வளருவதன்று"

'निष्क्रियं निष्कलं' "(ஆத்மா) க்ரியாரஹிதமானது, அவயவங்கள் அற்றது"

ओं लब्धवृद्ध्यै नमः ।

ஓம் லப்தவ்ருத்யை நம: (270)

लब्धलीला ।

**லப்தலீலா** 271

லீலையாடல் என்ற பாவனையையடைந்தவள்.

விவரணம் :— 'லீலை' யென்பது 1. இதரர்கள் பொருட்டுச் செய்யப்படும் செயல்களோ அல்லது 2. தனது சந்தோஷத்திற்கு மட்டுமே செய்யப்படுவதோ அல்லது 3. சிருங்காராதிரஸங்களைச் சார்ந்ததோ எனக்கருதப்படும். பராசக்தி பிரபஞ்சத்தையே லீலையாகக் கருதுபவள். முன்னுரையில் 18வது பாகத்தைப் பார்க்கவும்.

ओं लब्धलीलायै नमः ।

ஓம் லப்தலீலாயை நம: (271)

---

1. பிருஹதாரண்யகம் 4-4

लब्धयौवनशालिनी ।

**லப்தயௌவநஶாலிநீ** 272

பிறப்பு, வளர்தல், குறைதல், நாசம் முதலிய விகாரங்களற்று நித்ய யௌவந பாவத்துடன் கூடியவள். பராசக்திக்குச் சரீரம் இல்லாததால் முற்கூறிய விகாரங்கள் இல்லை.

ओं लब्धयौवनशालिन्यै नमः ।

ஓம் லப்தயௌவநஶாலிந்யை நம: (272)

लब्धातिशयसर्वाङ्गसौन्दर्या लब्धविभ्रमा ।
लब्धरागा लब्धपतिर्लब्धनानागमास्थितिः ॥ ५३ ॥

லப்தாதிஶய ஸர்வாங்க ஸௌந்தர்யா லப்தவிப்ரமா ।
லப்த ராகா லப்த பதிர் லப்த நாநாகம ஸ்திதி: ॥

लब्धातिशयसर्वाङ्गसौन्दर्या ।

**லப்தாதிஶயஸர்வாங்கஸௌந்தர்யா** 273

சாஸ்திரங்களில் கூறியவாறு எல்லா அவயவ அமைப்பையும் பெற்றிருப்பதால், அதிசயிக்கத்தக்க அழகுடன் விளங்குபவள். உபாஸனைக்காகமட்டுமே பராசக்தி சரீரத்துடன் கூடியதாகக் கருதப்படுகிருள்.

ओं लब्धातिशयसर्वाङ्गसौन्दर्यायै नमः ।

ஓம் லப்தாதிஶயஸர்வாங்கஸௌந்தர்யாயை நம: (273)

लब्धविभ्रमा ।

**லப்த விப்ரமா** 274

குழந்தைகள் விளையாட்டில் எப்படி ஈடுபட்டிருக்குமோ அதைப்போல் பிரபஞ்ச காரியங்களில் ஈடுபட்டிருப்பவள். 'விப்ரமா' என்ற பதத்திற்குப் 'பாலக்ரீடை' (குழந்தைகளின் விளையாட்டு) என்று அர்த்தம்.

ओं लब्धविभ्रमायै नमः ।

ஓம் லப்த விப்ரமாயை நம: (274)

लब्धरागा ।

**லப்த ராகா** 275

(ஜகத்தை உண்டுபண்ணவேண்டும் என்ற) காமனை யுடன் கூடியவள்.

ओं लब्धरागायै नमः ।

ஓம் லப்தராகாயை நமঃ (275)

**लब्धपतिः ।**

**லப்தபதிঃ** 276

தனது இச்சாபூர்வமாகக் காமேசுவரரைப் பதியாக அடைந்தவள்.

ओं लब्धपतये नमः ।

ஓம் லப்தபதயே நமঃ (276)

**लब्धनानागमस्थितिः ।**

**லப்தநாநாகமஸ்திதিঃ** 277

(i) யாரால் பல சாகைகளுடன்கூடிய வேதங்கள் ரக்ஷிக்கப்படுகின்றனவோ அந்தப் பராசக்தி.

விவரணம்:— கர்ம காண்டம், உபாஸனு காண்டம், ஞான காண்டம், அதன் அங்கங்கள் என்று பல பிரிவுகளாக பிரிந்து கருத்துக்களை வெளிப்படுத்தும் தன்மை வாய்ந்ததால், வேதங்கள் 'ஆகமங்கள்' என்று சொல்லப் படுகின்றன. அவைகள் அநேக சாகைகளுடன் கூடியவை. இந்த சாகைகளைப் பராசக்தி ரக்ஷிக்கிருள். அதாவது 'सर्वे वेदा यत्रैकं भवन्ति' (எல்லா வேதங்களும் ஒரே பொருளைச் சார்ந்திருக்கின்றன) என்ற சுருதி வாக்கியத்தின் படி தன் ஸ்வரூபமாயிருக்கும் ஸ்வதஸ்ஸித்தமான வேதங்களை மஹா ப்ரளய காலத்தில் காப்பாற்றி மறுபடியும் சிருஷ்டி ஆரம்பிக்கும்பொழுது முதலில் தோன்றிய ஹிரண்யகர்ப்பருக்கு, ஒருவித மாறுபாடுமில்லாமல் முன் இருந்ததுபோலவே அதை விளங்கும்படிசெய்து வேதங்களை காப்பாற்றுகிருள்.

(ii) ருக், யஜுஸ், ஸாமம், அதர்வம் என்ற நான்கு வேதங்களிலும் கர்மா, பக்தி, ஞானம், என்ற மூன்று

காண்டங்களைப்பற்றி உபதேசிக்கப்பட்ட விதிகளைக் காப்பாற்றுபவள்.

விவரணம் :—சிருஷ்டியின் ஆரம்பத்தில்தானே தம்பதிகளாயிருந்து வேதங்களில் கூறப்பட்ட தர்மங்களைத் தான் அநுஷ்டிப்பதுடன் பிறரையும் அனுஷ்டிக்கும்படி செய்து அவைகளைக் காப்பாற்றுகிறாள்.

वेदशास्त्रे ममैवाज्ञे வேதங்களும் சாஸ்திரங்களும் யான் (பராசக்தி) இட்ட கட்டளைகளேயாவன.

वर्त एव च कर्मणि। यदि ह्यहं न वर्तेयं जातु कर्मण्यतन्द्रितः।
उत्सीदेयुरिमे लोका न कुर्यां कर्म चेदहम्।

"நான் சோம்பற்பட்டு எப்பொழுதாவது கர்மாவைச் செய்யாதிருந்தால் இந்த உலகங்கள் அனைத்தும் நிலை பெயர்ந்துவிடும். ஆகையால் நான் (உலகங்களை ரக்ஷிக்கும்) கர்மாவைச் செய்துகொண்டிருக்கிறேன்" என்று கீதையில் (அத். 3) பகவான் சொல்லுகிறார்.

ओं लब्धनानागमस्थित्यै नमः।

ஓம் லப்தநாநாகமஸ்தித்யை நம: (277)

लब्धभोगा लब्धसुखा लब्धहर्षाभिपूरिता।
ह्रींकारमूर्तिर्ह्रींकारसौधशृङ्गकपोतिका ॥ ५४ ॥

லப்தபோகா லப்தஸுகா லப்த ஹர்ஷாபிபூரிதா।
ஹ்ரீங்கார மூர்த்திர் ஹ்ரீங்கார ஸௌதசிருங்க கபோதிகா ॥

लब्धभोगा।

லப்த போகா 278

நித்திய ஸித்தமான ஆனந்தானுபவத்துடன் கூடியிருப்பவள்.

விவரணம் :—ஜீவராசிகள் ஸுகதுக்கங்களைக் கலந்து அநுபவிப்பவர்கள். பராசக்தி நித்யானந்த ரூபி. 'லப்த' என்ற பதம் உபசாரமாகச் சொல்லப்பட்டது என்று கொள்ள வேண்டும்; அவளே ஆனந்தமாயிருக்கும்பொழுது, ஆனந்தத்தையடைவது என்பது பொருந்தாதல்லவா!

ॐ लब्धभोगायै नमः ।

ஓம் லப்த போகாயை நம: (278)

लब्धसुखा ।

**லப்தஸௌகா** 279

தனது ஸ்வரூபமாயிருக்கும் ஆனந்தமும் அதற்கு ஸாதனமாயிருக்கும் தர்மங்களும் யாரால் அடையப் பட்டுள்ளனவோ அந்தப் பராசக்தி.

விவரணம் :— 'आचारप्रभवो धर्मः धर्मस्य प्रभुः अच्युतः' என்ற பிரகாரம் அனுஷ்டிக்கவேண்டிய விதிகள் அனைத்தும் தர்மத்தை அடிப்படையாகக் கொண்டுள்ளன. தர்மம் பரமாத்ம தத்வத்தை அடிப்படையாகக் கொண்டுள்ளது. ஸௌகம் என்பது இங்ஙனம் வகுக்கப்பட்டுள்ள ஆசாரணைகளை பின்பற்றுவதால் விளையும் என்ற கருத்தும் இம்மந்திரத் திலிருந்து தொனிக்கிறது.

ॐ लब्धसुखायै नमः ।

ஓம் லப்த ஸௌகாயை நம: (279)

लब्धहर्षाभिपूरिता ।

**லப்த ஹர்ஷாபிபூரிதா** 280

எப்பொழுதும் ஸந்தோஷத்தால் நிரம்பியவள்.

விவரணம் :— 'ஹர்ஷம்' என்பது திருப்தியிலிருந்து விளையும் மனோல்லாஸம். நிர்மலமான முகம், சரீர புஷ்டி இவைகள் அதன் அறிகுறிகள். லௌகிக ரீதியாக அதை இச்சைகள் நிறைவேறுவதால் விளையும் ஸந்தோஷ மென்னலாம். பராசக்தியிடம் இத்தகைய ஹர்ஷம் பூர்ண மாயும், துக்கலேசமின்றியும் கூடியிருப்பதால், எப்பொழுதும் பிரஸன்ன முகத்துடன் பராசக்தி விளங்குகிறாள் என்பது பொருள்.

ॐ लब्धहर्षाभिपूरितायै नमः ।

ஓம் லப்த ஹர்ஷாபிபூரிதாயை நம: (280)

ह्रींकारमूर्तिः

**ஹ்ரீங்காரமூர்த்தி:** 281

வாக்கும், அர்த்தமும் எவ்விதம் அபின்னமாக இருக்கின்றனவோ, அவ்விதம் ஹ்ரீங்காரமும், பராசக்தியும் இருப்பதால், ஹ்ரீங்காரமே யாருடைய விக்கிரஹமோ அந்தப் பராசக்தி.

ओं ह्रीङ्कारमूर्त्यै नमः

ஓம் ஹ்ரீங்காரமூர்த்யை நமஃ (281)

**ह्रीङ्कारसौधशृङ्गकपोतिका**

**ஹ்ரீங்காரஸௌதஶ்ருங்ககபோதிகா** 282

ஹ்ரீங்காரம் என்ற மாளிகையின் சிகரத்தில் பெண் புருவாக விளங்குபவள்.

விவரணம்:— ஸௌதம் என்பது மாளிகை. அதன் சிருங்கம் என்பது சிகரம். அது ஸுகமாய் விச்ராந்தி செய்யும் இடமாகும். 'ஹ்ரீங்காரம்' மாயார்ரஹிதமான ஆனந்தத்தை உண்டுபண்ணுவதால் அது மாளிகையின் சிகரத்திற்கு ஒப்பிடப்பட்டது. ஹ்ரீங்காரத்திலுள்ள 'ஹ' காரம் வெண்மையாதலால் உப்பரிகைக்கு ஸமானம். 'ரேபம்' சிவப்பு வர்ணமாதலால் செங்கற்களால் செய்யப் பட்ட கீழ்ச் சுவர்களுக்கு இணை. 'ஹ' காரத்திற்கு மேலுள்ள 'ஈ' காரம் சிருங்கத்திற்கு ஒப்பிடப்பட்டது. இவற்றின் இறுதியிலிருக்கும் 'பிந்து' ('ம்' என்பது) பிரகிருதியைக் குறிப்பதாகும். சூக்ஷ்மமாயும், விசித்ரமாயும் இது உள்ளது. பராசக்தி பிந்துவடிவமாய் இருந்துகொண்டு எளிதில் காணப்படாத பெண் புருவைப்போல் இந்த 'ஹ்ரீம்'காரமாகிய சிகரத்தில், ஜகத்தை ரக்ஷிப்பதில் மிகவும் ஜாக்கிரதையாக வஸித்துக்கொண்டிருக்கிறாள்.

निद्रामुद्रां निखिलजगतीरक्षणे जागरूकाम् ।

"தூங்குவதுபோல் தோன்றினும் பிரபஞ்சம் அனைத்தையும் ரக்ஷிப்பதில் விழிப்புடன் இருக்கிறாள்."

ओं ह्रींकारसौधशृङ्गकपोतिकायै नमः ।

ஓம் ஹ்ரீங்கார ஸௌதசிருங்க
கபோதிகாயை நமஃ (282)

ह्रींकारदुग्धाब्धिसुधा ह्रींकारकमलेन्दिरा ।
ह्रींकारमणिदीपार्चिर्ह्रींकारतरुशारिका ॥

ஹ்ரீங்கார துக்தாப்தி ஸுதா ஹ்ரீங்கார கமலேந்திரா ।
ஹ்ரீங்கார மணிதீபார்சிர் ஹ்ரீங்கார தருஶாரிகா ॥

ह्रींकारदुग्धाब्धिसुधा ।

**ஹ்ரீங்கார துக்தாப்தி ஸுதா** 283

ஹ்ரீம்காரமாகிய பாற்கடலில் அமிருதமாக விளங்குபவள்.

விவரணம்:—க்ஷீராப்தியைத் தேவர்களும் அஸுரர்களும் கடைந்தபொழுது, பல பொருள்கள் வெளிவந்தன. கடைசியாக எதை அடைவதற்கு அவர்கள் முயன்றனரோ அந்த அமிருதம் கிடைத்தது. 'ஹ்ரீம்' என்பதனிலுள்ள 'ஹ'காரம் வெண்மையைக் குறிப்பதாலும், முக்தியென்ற அமிருதத்திற்குக் காரணமாயிருப்பதாலும் ஹ்ரீம் காரம் பாற்கடலுக்கு ஒப்பிடப்பட்டது. பாற்கடலில் தோன்றிய அமிருதம்போல் பராசக்தி விளங்குகிருள். 'ஹ்ரீம்' என்ற பீஜமந்திரத்தை அனுஸந்தானம் பண்ணுவதால், கடைசியாக அமிருதம் போன்ற நித்தியரூபியாக விளங்கும் பராசக்தி ஸாக்ஷாத்காரம் செய்யப்படுகிருள் என்பது கருத்து.

ओं ह्रींकारदुग्धाब्धिसुधायै नमः ।

ஓம் ஹ்ரீங்காரதுக்தாப்தி ஸுதாயை நம: (283)

ह्रींकारकमलेन्दिरा ।

**ஹ்ரீங்காரகமலேந்திரா** 284

'ஹ்ரீம்' காரமாகிய தாமரைப் பூவில் லக்ஷ்மிபோல் விளங்குபவள்.

விவரணம்:— தாமரைப்பூ பல வர்ணங்களோடுகூடி எல்லோராலும் பிரியத்துடன் கொண்டாடப்படுகிறது. ஹ்ரீம், ஹகாரம், ரேபம், ஈகாரம், பிந்து முதலிய பல அக்ஷரங்களோடுகூடிப் புருஷார்த்தங்களை நல்கும் சக்தி வாய்ந்ததால், அது தாமரைக்கு ஒப்பிடப்பட்டது.

தாமரை லக்ஷ்மிக்கு வாஸஸ்தானமாக இருப்பதுபோல், ஹ்ரீங்காரத்தில் 'பிரஹ்மவித்யா' ரூபமாகப் பராசக்தி வஸிக்கிருள்.

ओं ह्रींकारकमलेन्द्रायै नमः ।
ஓம் ஹ்ரீங்காரகமலேந்திராயை நம: (284)

**ह्रींकारमणिदीपार्चिः ।**
**ஹ்ரீங்காரமணிதீபார்சி:** 285

ஹ்ரீங்காரம் என்ற மணி விளக்கின் ஒளியாக இருப்பவள்.

விவரணம் :— ஜாதிரத்னங்களுக்கு ஸ்வயம் பிரகாசம் உண்டு. தீபம் ஒளியை வீசுவதுபோல் இத்தகைய ரத்னங்களும் ஒளியை வீசுவனவாம். ஆனால் தீபத்திற்குக் காற்று, நீர் முதலியவற்ருல் ஆபத்து உண்டு. இவற்ருல் தீபம் நின்றுவிடும். ரத்ன தீபம் அத்தகையதன்று. ஒரு விதத்திலும் அதன் ஒளி குன்ருது. சாசுவதமாக, அதிசயிக்கத்தக்க காந்தியை விடுத்துக்கொண்டே இருக்கும். இதைப்போல் ஹ்ரீங்காரமானது பராசக்தியைக் குறிக்கும் பீஜாக்ஷரமாகையாலும், பௌதிகமான ஜகத்தின் விகாரங்களுக்கு உட்படாமல் இருப்பதாலும், உபாஸகனுக்கு அளவற்ற சிரேயஸ்ஸைக் கொடுக்கும் தன்மையுடையதாகையாலும், ஹ்ரீங்காரம் மணி விளக்குக்கு ஒப்பிடப் பட்டது. அதன் கருத்தாக விளங்கும் பராசக்தி அக்ஞான இருளை அடியுடன் போக்கி எல்லா இஷ்டங்களையும் கொடுப்பதால், மணி விளக்கினின்றும் வெளிவீசும் காந்திக்கு ஒப்பிடப்பட்டாள்.

ओं ह्रींकारमणिदीपार्चिषे नमः ।
ஓம் ஹ்ரீங்காரமணிதீபார்சிஷே நம: (285)

**ह्रींकारतरुशारिका ।**
**ஹ்ரீங்காரதருஶாரிகா**

ஹ்ரீங்காரம் என்ற விருக்ஷத்தில் பெண் கிளிபோல் விளங்குபவள்.

விவரணம்:— விருக்ஷத்தின் உச்சியிலிருக்கும் கனிகளை விரும்புபவர்களுக்கு, அவர்கள் ஏறிப் பறிக்கும்படி, கிளை களின் தாங்கலை அளிக்கிறது. இவ்விதம் ஹ்ரீங்காரமாகிய பீஜாக்ஷரமும், உபாஸகர்களுக்கு ஸகல ஸுகானுபவங் களையும் அளித்து, பராசக்தியின் ஸாக்ஷாத்காரம் என்ற ஆனந்தக் கனியையும் அடைய உதவியைக் கொடுக்கிறது. ஆகையால் ஹ்ரீங்காரம் விருக்ஷத்திற்கு ஒப்பிடப்பட்டது. கிளி சிவந்த பாதங்கள், சிவந்த மூக்கு முதலிய வர்ணங்கள் பொருந்தி, கற்பிக்கப்படும் பாஷையை மனிதர்களைப்போலப் பேசவும் செய்கிறது. ஆரூட முறையில் முக்காலங்களிலும் ஏற்படும் நற்பயன், தீயபயன் இவற்றையும் தன் பாஷையில் எடுத்துச் சொல்லுகிறது. அதைப்போல் ஹ்ரீம்காரத்தினால் குறிக்கப்படும் பராசக்தி வேதங்களின் வாக்கால் அனைத்தையும் பிரகாசப் படுத்துகிறாள். ஆதலால் ஹ்ரீம்கார மரத்தில் பெண் கிளியாக விளங்குவதாக இம் மந்திரத்தினால் கருதப் படுகிறாள்.

ओं ह्रींकारतरुशारिकायै नमः ।

ஓம் ஹ்ரீம்காரதருஶாரிகாயை நம: (286)

ह्रींकारपेटकमणिर्ह्रींकारादर्शबिंबिता ।

ह्रींकारकोशासिलता ह्रींकारास्थाननर्तकी ॥ ५६ ॥

ஹ்ரீங்கார பேடகமணிர் ஹ்ரீங்காராதர்ஶ பிம்பிதா ।
ஹ்ரீங்கார கோஶாஸி லதா ஹ்ரீங்காராஸ்தான நர்தகீ ॥

ह्रींकारपेटकमणिः ।

ஹ்ரீம்காரபேடகமணி: 287

ஹ்ரீம்காரமாகிய பெட்டியில் வைக்கப்பட்டிருக்கும் ரத்தினமாக விளங்குகிறாள்.

விவரணம்:— பெட்டி தனக்குள் இருக்கும் பொருளை ரகசியமாகக் காத்துக்கொண்டிருப்பதுபோல் ஹ்ரீம்கார மாகிய பீஜாக்ஷரம் தனது உட்கருத்தாகிய பராசக்தியை

ரகசியமாகத் தனக்குள் அடக்கிவைத்துள்ளது. ஆகையால் ஹ்ரீம்காரம் பெட்டிக்கு இணையாகக் கூறப்பட்டது.

ரத்னம் பெட்டியின் உள்ளும், வெளியும் தனது ஸ்வயமான ஒளியைப் பரவச்செய்து, ஏனைய பெட்டிகளி னின்றும் தனது பெட்டியைப் பிரித்துக்காட்டுவதுபோல் பராசக்தி ஹ்ரீம்காரத்தின் சிறந்த சக்தியைத் தனது மஹிமையினுல் விளங்கும்படி செய்கிருள். ஆகையால் பராசக்தி பெட்டிக்குள் வைத்த ரத்தினத்திற்கு ஒப்பிடப் பட்டாள்.

ओं ह्रींकारपेटकमणये नमः ।

ஓம் ஹ்ரீம்காரபேடகமணயே நமः (287)

**ह्रींकारादर्शबिम्बिता ।**

**ஹ்ரீம்காராதர்ஶபிம்பிதா** 288

ஹ்ரீம்காரமாகிய கண்ணுடியில் பிரதிபலிக்கும் பிம்பமாக இருப்பவள்.

விவரணம்:— கண்ணுடி எப்படிச் சுத்தமாயும், தெளிவாயும் இருந்துகொண்டு வஸ்துக்களைப் பிரதிபிம்ப வடிவங்களால் விளக்குகிறதோ, அதைப்போல் ஹ்ரீங்கார மாகிய பீஜமந்திரம் வேதத்தின் சிகரமாக இருந்துகொண்டு பரதேவதையைத் தெளிவாக விளக்குகிறது. பிரதிபிம்பம் என்பது மூலப்பொருளின் ஒருவித உபாதியோடுகூடிய தோற்றமேயாகும். அதைப்போல் ஜகத் என்பது சுத்த சைதன்யமாகிய பராசக்தியின் மாயா ஸம்பந்தத்தினுல் விளையும் ஒருவகைத் தோற்றம். ஆகையால் ஹ்ரீங்கார மாகிய கண்ணுடியில் பராசக்தி பிரதிபிம்ப ரூபமாய் விளங்குகிருள் என்று சொல்லப்படுகிறது.

ओं ह्रींकारादर्शबिम्बितायै नमः ।

ஓம் ஹ்ரீங்காராதர்ஶபிம்பிதாயை நமः (288)

**ह्रींकारकोशासिलता ।**

**ஹ்ரீங்காரகோஶாஸிலதா** 289

ஹ்ரீங்காரமாகிய உறையில் மிகவும் நீண்ட வாளாக விளங்குபவள்.

விவரணம் :— வாள் சத்துருக்களால் உண்டாகும் துன்பத்தை அகற்ற வல்லமை பொருந்தியது. அதைப் போல் பராசக்தி அஞ்ஞானத்திலிருந்து விளையும் துக்கத்தை அகற்றிக் காமக்ரோதாதிகளாகிய சத்ருக்களை அழிப்பதால், அவள் வாளுக்கு ஒப்பிடப்பட்டாள். வாளை உறைக்குள் மறைத்துவைத்திருப்பதுபோல், பராசக்தி ஹ்ரீம் என்ற பீஜமந்திரத்தில் அந்தர்கதமாக இருப்பதனால், ஹ்ரீம் என்ற பீஜாக்ஷரம் வாளின் உறையாகக் கருதப்பட்டது.

'அஸி' அல்லது 'வாள்' என்ற பதம் எல்லாவித ஆயுதங்களையும் லக்ஷண ரீதியால் குறிக்கிறது.

[1] महद्भयं वज्रमुद्यतम् । "கையில் தூக்கிய வஜ்ராயுதத்தைக்கண்டு பயப்படுவதுபோல் பரமாத்மாவைக்கண்டு மிகுந்த பயம்கொண்டுதான் எல்லோரும் தன் தன் காரியங்களை நடத்திவருகின்றனர்".

[2] भीषास्माद्वातः पवते । "பராசக்தியினிடம் நடுங்கிக் கொண்டு காற்று வீசுகிறது" எல்லாத் தேவதைகளும் தத்தம் கடமைகளைச் செய்கிறார்கள்.

ओं ह्रींकारकोशासिलतायै नमः ।

ஓம் ஹ்ரீங்காரகோசாஸிலதாயை நம: (289)

ह्रींकारास्थाननर्तकी ।

**ஹ்ரீங்காராஸ்தாநநர்த்தகீ** 290

ஹ்ரீம்காரமாகிய ஸபா மண்டபத்தில் நடிகையாக விளங்குபவள்.

விவரணம் :— மனது விச்ராந்தியை அடைவதற்கு ஸபாமண்டபத்திற்கு அனைவரும் செல்லுவதுபோல்,

---

1. கடோபநிஷத் 6-2 2. தைத்திரீயோபநிஷத் ஆனந்த வல்லி 8-1

ஸுகத்தைப் பெறுவதற்கு 'ஹ்ரீம்' என்ற பீஜாக்ஷரத்தை அனைவரும் உபாஸிப்பதால், ஹ்ரீம்காரம் ஸபா மண்டபத்திற்கு ஒப்பிடப்பட்டது.

நடன சாஸ்திர விதிகளுக்கிணங்க, மேடையில் பாதாசனைகளுடன், தாளத்திற்கு ஒவ்வ, சரீர அவயவங்களுடைய அபிநயங்களைப் பிரகடனம் செய்வதற்கு நர்த்தனம் என்று பெயர். அதைச் செய்பவள் நர்த்தகீ. பராசக்தி ஹ்ரீம்காரத்தின் உட்கருத்தாக இருந்துகொண்டு, மாயா ஸம்பந்தப்பட்டும், படாமலும், அதிவிசித்திரமான ஜகத்தைத் தோன்றும்படி செய்வதால், ஹ்ரீம்காரம் என்ற மேடையில் நர்த்தகியாகச் சொல்லப்பட்டாள். நர்த்தகியின் நடனத்தை அனைவரும் பார்த்துக்கொண்டிருப்பினும் பார்ப்பவர் மனோபாவத்திற்கும் புத்தி நுட்பத்திற்கும் இணங்க அவரவர் ஸுகானுபவம் அடைவதுபோல் பராசக்தியின் மாயாவிலாசங்களை எல்லோரும் பார்த்தாலும், அவரவர் மனோவிருத்தி புத்தி நுட்பம், ப்ரீதி பாவம், புண்ணியபாபத்தின் அளவு, இவற்றின் வேறுபாட்டைச் சார்ந்தே அவரவருக்கு பல ப்ராப்தி அமைகிறது. இதனாலும் பராசக்தி நர்த்தகிக்கு இணையாகக் கருதப்படுகிறாள்.

ओं ह्रींकारास्थाननर्तक्यै नमः ।

ஓம் ஹ்ரீங்காராஸ்தானநர்த்தக்யை நம: (290)

ह्रींकारशुक्तिकामुक्तामणिर्ह्रींकारबोधिता ।

ह्रींकारमयसौवर्णस्तम्भविद्रुमपुत्रिका ॥ ५७ ॥

ஹ்ரீங்காரஶுக்திகா முக்தாமணிர் ஹ்ரீங்காரபோதிதா ।

ஹ்ரீங்காரமய ஸௌவர்ண ஸ்தம்ப வித்ருமபுத்ரிகா ।

ह्रींकारशुक्तिकामुक्तामणिः ।

ஹ்ரீங்காரஶுக்திகாமுக்தாமணி: 291

ஹ்ரீங்காரமென்ற சிப்பியில் நல்முத்தாக விளங்குபவள்.

விவரணம்:— முத்துச்சிப்பி பின்புறத்தில் நீல நிறத்துடன்கூடி முக்கோணவடிவமுள்ளது. ஸ்வாதி நக்ஷத்

திரத்தில், மழைத்துளி முத்துச்சிப்பிக்குள் விழுந்தால் அது நல்முத்தாக மாறுகிறது ஹ்ரீம்பீஜமானது ஸத்வ, ரஜஸ், தமோகுண லக்ஷணமாக இருந்துகொண்டிருக்கிறது. பராசக்தி எங்கும் வியாபித்திருப்பினும், ஹ்ரீம்பீஜாக்ஷரத்தில் மனோஹரமாயும், வர்ணிக்க இயலாத அழகுடன்கூடி விளங்குவதால், ஹ்ரீம்காரத்தைச் சிப்பிக்கும், பராசக்தியை நல்முத்துக்கும் ஒப்பிடப்பட்டது நல்முத்தைப்பெறுவதற்குச் சிப்பியையே சேகரிக்கவேண்டும் அதைப்போல் பராசக்தியை ஸாக்ஷாத்காரம் செய்யவேண்டுமானால், ஹ்ரீங்காரத்தை அநுஸந்தானம் பண்ணவேண்டும் என்பது கருத்து.

ओं ह्रींकारशुक्तिकामुक्तामणये नमः ।

ஓம் ஹ்ரீங்காரசுக்திகாமுக்தாமணயே நம: (291)

ह्रींकारबोधिता ।

**ஹ்ரீங்காரபோதிதா** 292

ஹ்ரீங்காரம் என்ற மூலமந்திரத்தினால் விளக்கப் படுபவள்.

விவரணம் :— ஒரு விஷயத்தைப்பற்றிய ஞானம் நமது உள்ளறிவின் சக்தியினாலேயே விளைகிறது. இது ஆத்ம லக்ஷணம். இது ஒரு காரியத்தைச் செய்வதுபோலவோ, ஒரு பொருளை ஈட்டுவதுபோலவோ அன்று. ஹ்ரீங்கார மானது வேதத்தின் அம்சமாக இருந்துகொண்டு, இதரப் பிரமாணங்களைச் சார்ந்து நிற்காமல், நமது அறிவுக்கு மறைந்திருக்கும் சுத்த சைதன்ய ஆனந்த ரூபமாகிய பராசக்தியைத் தோற்றுவித்து ஞாபகத்திற்குக் கொண்டு வருகிறது. ஹகாரம், ரேபம், ஈகாரம் இவைகள் தனித்த முறையில் வெவ்வேறு கருத்துக்களைக் கொண்டுள்ளன வெனினும், சேர்ந்து 'ஹ்ரீம்' என்ற பீஜமந்திரமாக விளங்கும்பொழுது அத்வைத சைதன்யத்தையே குறிக்கின்றது.

[1] नान्योऽतोऽस्ति द्रष्टा । "பராசக்தியைத் தவிர அறிவாய் விளங்குவது வேறு ஒன்றும் இல்லை.

[2] इदं सर्वं यदयं आत्मा । "ஆத்மாவே எல்லாம்".

[3] एक एव तु भूतात्मा भूते भूते व्यवस्थितः । एकधा बहुधा चैव दृश्यते जलचन्द्रवत् । "நீரில் பற்பலவாய்த் தோன்றும் சந்திரனைப்போல், ஒரே பரமாத்ம வஸ்து பற்பல ஜீவாத்மாக்களாகவும் பற்பல ரூபங்களாகவும் விளங்குகிறது.

[4] आत्मा वा अरे द्रष्टव्यः । "(எங்கும் வியாபித்திருக்கும்) ஆத்மாவின் இருப்பை நீ அறியவேண்டும்".

[5] तद्विजिज्ञासस्व । "(ஆத்மாவின் இருப்பை) அறிந்து கொள்".

आत्मानं पश्येत् । "நீ யார் என்பதைப் பார்த்து அறிந்து கொள்".

முற்கூறிய வாக்கியங்களிலிருந்து செயலின் பயனாக ஆத்மா இருக்கவில்லை என்பதும், அறிவுக்கு அர்ஹமாக இருக்கிறது என்பதும் தெரிகிறது.

ओं ह्रींकारबोधितायै नमः ।
ஓம் ஹ்ரீங்காரபோதிதாயை நம: (292)

ह्रींकारमयसौवर्णस्तम्बविद्रुमपुत्रिका ।
**ஹ்ரீங்காரமயஸௌவர்ணஸ்தம்பவித்ருமபுத்ரிகா** 293

ஹ்ரீங்காரமாகிய தங்கத் தூணில் பவழப் பதுமையாக விளங்குபவள்.

விவரணம் :— தங்கத் தூண் நவரத்ன மண்டபத்தைத் தாங்கிக்கொண்டு அந்த மண்டபத்துடன் ஒன்றாகவும் இருந்து அலங்காரமாகவும் இருக்கிறது. அதைப்போல்

---

1. பிருஹதாரண்யகம் 3-7-23 2. பிருஹதாரண்யகம் 2-4-6
3. ப்ரஹ்மபிந்துபநிஷத் 12 4. பிருஹதாரண்யகம் 4-5-6
5. பிருகுவல்லி

ஹ்ரீங்காரமானது ஜகத்திற்கு ஆதாரமாகவும், அதற்குக் காரணமாகவும், ஜகத்தில் அடங்கினதாகவும், பரமானந்த ஸாக்ஷாத்காரத்திற்கு ஹேதுவாகவும் இருப்பதால், தங்கத் தூணுக்கு ஒப்பிடப்பட்டது. பவழப் பதுமை தங்கத் தூணின் அழகை அதிகரித்து, எளிதில் அடையக்கூடாத தன்மை பொருந்தி, மண்டபம் அதன் யஜமானன் இவ்விரண்டையும் பிரகாசப்படுத்துவதுபோல், ஹ்ரீம் என்ற சப்தத்தின் உட்கருத்தாய் நின்று, பராசக்தி ஜகத்தை பிரகாசிக்கும்படி செய்து, தத்வஞ்ஞானத்தினாலன்றி வேறு எளிய வழியில் அறியக்கூடாதவளாக இருந்துகொண்டு, நிர்க்குண பரமாத்ம ஸாயுஜ்யத்திற்கு வழியைக் காட்டுகிருள். ஆகையால் பராசக்தி பவழப் பதுமைக்கு ஒப்பிடப்பட்டாள்.

ओं ह्रींकारमयसौवर्णस्तम्बाविद्रुमपुत्रिकायै नमः ।

ஓம் ஹ்ரீங்காரமயஸௌவர்ணஸ்தம்பவித்ரும
புத்ரிகாயை நம: (293)

ह्रींकारवेदोपनिषद्ध्रींकाराध्वरदक्षिणा ।
ह्रींकारनन्दनारामनवकल्पकवल्लरी ॥ ५८ ॥

ஹ்ரீங்காரவேதோபநிஷத் ஹ்ரீங்காராத்வர தக்ஷிணு ।
ஹ்ரீங்காரநந்தனுராம நவகல்பக வல்லரீ ॥

ह्रींकारवेदोपनिषत् ।
**ஹ்ரீங்காரவேதோபநிஷத்** 294

ஹ்ரீங்காரம் என்ற வேதத்திற்குப் பிரஹ்மவித்யை என்ற உபநிஷத்தாக விளங்குபவள்.

விவரணம்:— எதனுல் எல்லா நாமரூபங்களும் அறியப்படுகின்றனவோ அதுவே வேதம் எனப்படும். மாயா விலாஸத்துடன்கூடிய பிரபஞ்சம் 'ஹ்ரீம்' பதத்திற்கு ஓர் அர்த்தமாகையால், 'ஹ்ரீம்' என்பதே வேதம் எனப்படுகிறது. 'உபநிஷத்' என்பது வேதாந்தம் அல்லது வேதாந்த கிரந்தங்களினுல் விளக்கப்படும் பரமாத்ம வஸ்து.

நான்கு வேதங்களில் ஒவ்வொன்றும் கர்மகாண்டம், உபாஸனாகாண்டம், ஞானகாண்டம் என்ற மூன்று பிரிவினைகளுடன் கூடியுள்ளது. [1]तमेतं वेदानुवचनेन ब्राह्मणा विविदिषन्ति । "வேதங்களைக் கற்பதன்மூலம் பரமாத்மாவை அறியப் பிராஹ்மணர்கள் (பிரஹ்மதத்வத்தை அறிய முயல்பவர்கள்) இச்சிக்கின்றனர்". ஆகையால் கர்மாநுஷ்டானம், உபாஸனைக் கிரமங்கள் அனைத்தும் பிரஹ்ம ஞானத்தில் முடிவடைகின்றன.

[2]अन्धं तमः प्रविशन्ति येऽविद्यामुपासते ।
ततो भूय इव ते तमो य उ विद्यायां रताः ॥

"மாயை என்ற அஞ்ஞானத்தில் உழன்றுகொண்டிருப்பவர்களுக்கு விமோசனமே கிடையாது. அதைப் போலவே பிரபஞ்சஸாரமே வித்யை என்றும் அதற்கப்பால் அறியவேண்டியது ஒன்றும் இல்லை என்றும் சொல்பவர் இன்னும் அதிகமாக உழன்றுகொண்டிருப்பார்கள்"

[3]आत्मानं चेद्विजानीयात् अयमस्मीति पूरुषः ।
किमिच्छन् कस्य कामाय शरीरं अनुसंज्वरेत् ॥

"தன்னையே பரமாத்மாவாக அறிந்தவன் எந்தப் பலனை உத்தேசித்து, யார்பொருட்டு (உலகத்தில் காணப் படும்) மனோவேதனை, சரீரவேதனை, இவற்றை அநுபவிப்பான்" அநுபவிக்கமாட்டான் என்பது கருத்து.

[4]आत्मकाम आप्तकामः । "ஆத்மஞானத்தை விரும்புபவன் (அடைந்தவன்) எல்லாக் காமனைகளையும் பூர்த்தி பெற்றவனாக ஆகிறான்." அதாவது அவனுக்கு அடைய வேண்டியதொன்று இருக்கிறதென்றே தோன்றாது.

மேற்கூறிய சுருதி வாக்கியங்களிலிருந்து உபநிஷத்தின் பயன் மோக்ஷப்பிராப்தியே என்பது தெளிவாகிறது. வேதம், வேதாந்தம் என்ற வேதபாகங்களின் இருவிதப்

1. பிருஹதாரண்யகம் 4-4-22. 2. பிருஹதாரண்யகம் 4-4-10. 3. பிருஹதாரண்யகம் 4-4-12. 4. பிருஹதாரண்யகம் 4-4-6.

பலன்களினிடையே 'உபநிஷத்' என்ற வேதாந்தத்தினால் அடையப்படும் பயன் வேதங்களினால் அடையப்படும் பயனைவிடச் சிறந்ததாதலால், பராசக்தி 'ஹ்ரீம்' என்ற வேதத்தில் 'உபநிஷத்' என்ற வேதாந்தம் அல்லது 'பிரஹ்மவித்யா' என்று சொல்லப்படுகிறாள்.

'உபநிஷத்' என்ற பதத்தில் 'உப' என்ற பாகத்திற்கு 'ஜீவாத்மா' என்பது பொருள். ஏனெனில் 'உப' என்றால் 'ஸமீபம்' என்று அர்த்தம். மாயா உபாதி ஸம்பந்தத்தினால் ஒவ்வொருவனிடத்திலும் அந்தர்யாமியாக இருக்கும் பரமாத்மா, ஜீவாத்மாவாகத் தோன்றுவதால் பரமாத்மாவை வெகு அடுத்து ஜீவாத்மா இருப்பதால், 'உப' என்பது ஜீவாத்மாவைக் குறிக்கிறது. 'னி' 'நி' என்ற சப்தம் 'ஷத்' என்பதன் அடைமொழி. 'ஷத்' அல்லது 'ஸத்' என்பதற்கு (1) இருத்தல் அல்லது வஸித்தல் (2) அறிதல் (3) முடிவடைதல் என்ற மூன்று அர்த்தங்கள் உள்ளன. இம்மூன்று அர்த்தங்களையும் அநுஸரித்து 'உபநிஷத்' என்ற பதத்திற்கு மூன்று அர்த்தங்கள் கிடைக்கின்றன. அவை (1) ஜீவன் அஞ்ஞானத்தை அழித்து ப்ரஹ்மஸ்வரூபத்தில் இருப்பைப் பெறுதல் (2) ஜீவன் தன்னை பிரஹ்மஸ்வரூபம் என்று அறிந்துகொள்ளுதல். (3) ஜீவன் பிரஹ்மத்தில் லயம் அடைதல் என்பன. இப்படி 'உபநிஷத்' என்பதற்குப் 'பிரஹ்மவித்யா' என்பது பொருள். ஆகையால் ஹ்ரீங்காரம் என்பது வேதம். வேதத்தின் பிரதான பாகம் உபநிஷத். அதுவே பிரஹ்மவித்யாரூபம். இந்தப் பிரஹ்மவித்யாரூபமாகப் பராசக்தி விளங்குகிறாள்.

ओं ह्रींकारवेदोपनिषदे नमः ।

ஓம் ஹ்ரீங்காரவேதோபநிஷதே நம: (294)

ह्रींकाराध्वरदक्षिणा ।

ஹ்ரீங்காராத்வரதக்ஷிணா 295

(i) ஹ்ரீங்கார ஜபமாகிய யக்ஞத்தினால் உண்டாகும் புருஷார்த்தம் என்ற பயனுருவாய் விளங்குபவள்.

விவரணம் :— 'ஹ்ரீம்' காரத்தை ஜபிப்பதால் அந்த ஜபம் யஜன ரூபமாக (பலனைத் தரும்) மார்க்கத்தில் செல்லுகிறது. 'தக்ஷிணை' என்பது ஒவ்வொரு யக்ஞத்தின் முடிவில் யஜமானனால் ரித்விக்குகளுக்குக் கொடுக்கப் படுகிறது. அது ரித்விக்குகளின் சிரமத்திற்குப் பயனாக அவர்களைச் சேருகிறது. ஹ்ரீங்கார ஜபம் அக்ஞானத்தை அகற்றி முக்தி பலனைத் தரும் இயல்புவாய்ந்ததாகையால், ஹ்ரீங்காரமாகிய யக்ஞத்திற்கு, தக்ஷிணைபோன்ற பயனாய் முக்திரூபமாயிருக்கும் பராசக்தி விளங்குகிறாள் என்பது கருத்து. தர்ம, அர்த்த, காம, மோக்ஷம் என்ற நான்கு புருஷார்த்தங்களுக்குள் மோக்ஷம் என்பதே மிகச் சிறந்தது என்று சொல்லவேண்டுவதில்லை.

(ii) ஹ்ரீம்கார யக்ஞத்திற்குப் பத்னியாக விளங்குபவள்.

விவரணம் :— ஹ்ரீம்கார ஜபம் ஞானயக்ஞமாகும். அதனின்று விளையும் பலன் முக்யத்வம் வாய்ந்ததாகையால் அது யக்ஞத்திற்கு முக்கியமாக இருக்கும் தக்ஷிணையாகச் சொல்லப்பட்டது. இத்தகைய முக்கியத்வம் பொருந்தி ஞான பல ரூபமாய்ப் பராசக்தி விளங்குகிறாள்.

தேவதைகளை ப்ரீதிசெய்யும்பொருட்டுச் செய்யப்படும் திரவிய தியாகம் யாகம் எனப்படும். திரவியத்தை மந்திர உச்சாரணத்துடன் அக்னியில் இடுவதை 'ஹோமம்' என்பர். யாகசாலையில் ரித்விக்குகளுக்குக் கொடுக்கப்படும் வஸ்துவை 'தக்ஷிணை' என்பார்கள். யாகம் தவிற மற்ற இடங்களில் யாசகர்களுக்கு விநியோகஞ் செய்யும் பொருள் 'தானம்' என்று சொல்லப்படும்.

ॐ ह्रींकाराध्वरदक्षिणायै नमः ।

ஓம் ஹ்ரீங்காராத்வரதக்ஷிணாயை நம: (295)

ह्रींकारनन्दनारामनवकल्पकवल्लरी ।

**ஹ்ரீங்கார நந்தனாராம நவகல்பகவல்லரீ** 296

ஹ்ரீங்காரமாகிய நந்தனவனத்தில் புதிதாகத் தளிர் விட்டு விளங்கும் கல்ப லதையாக இருப்பவள்.

விவரணம் :— தேவேந்திரனுடைய உத்யானத்திற்கு நந்தனம் என்று பெயர். அதுவே விசித்ர ரூபங்களுடன் அமைந்து 'ஆராம' ஸ்தானம், அதாவது களைப்பாற்றி ஸுகத்தைத்தரும் பிரதேசமாக விளங்குகிறது. 'நவம்' என்றால் நூதனம். வெகு மிருதுவாயிருக்கும் இளமைத் தன்மை. உத்யானத்தில் பற்பல விருக்ஷங்கள், செடி, கொடிகள் இருப்பினும் 'கல்ப லதை' என்ற கொடி அனைத்திலும் சிறந்த்து. அதுவே பிரசித்திபெற்றது. ஏனெனில் அது உபாஸகர்களுக்கு அவரவர் பக்திக்குத் தக்கவாறு அபீஷ்டங்களைக் கொடுக்கும் சக்தி வாய்ந்தது.

'ஹ்ரீங்காரம்' பிரம்ம, விஷ்ணு, ருத்ராதிகளின் பீஜாக்ஷர வடிவங்களைத் தன்னில் வைத்துக்கொண்டு, தீர்க்காயுள், அஞ்ஞான நிவர்த்தி, ஆனந்த பிராப்தி முதலிய பலன்களைத் தரும் சக்தியுடன் கூடியதாகையால், அது நந்தன உத்யானத்திற்கு ஒப்பிடப்பட்டது. அதில் முக்தியுட்பட எல்லாப் புருஷார்த்தங்களையும் கொடுக்கும் சக்திவாய்ந்து காமேசுவரர் அணைத்துக்கொள்ளும் அழகு வடிவாய், எல்லாம் ஒருங்கேகூடிப் பராசக்தி விளங்குவதால், அவள் கற்பகக் கொடிக்கு இணையாகக் கூறப்பட்டாள்.

ओं ह्रींकारनन्दनारामनवकल्पकवल्ल्यै नमः ।

ஓம் ஹ்ரீங்காரநந்தனாராமநவகல்பகவல்லர்யை நம: (296)

ह्रींकारहिमवद्गङ्गा ह्रींकारार्णवकौस्तुभा ।
ह्रींकारमन्त्रसर्वस्वा ह्रींकारपरसौख्यदा ॥ ५९ ॥

ஹ்ரீங்கார ஹிமவத்கங்கா ஹ்ரீங்காரார்ணவ கௌஸ்துபா ।
ஹ்ரீங்காரமந்த்ர ஸர்வஸ்வா ஹ்ரீங்கார பரஸௌக்யதா ॥

ह्रींकारहिमवद्गङ्गा ।

**ஹ்ரீங்காரஹிமவத்கங்கா** 297

ஹ்ரீம்காரமாகிய ஹிமயமலையினின்றும் உற்பத்தியாகும் கங்கா நதியாக விளங்குபவள்.

விவரணம் :— ஹிமயமலை பனி உறைந்திருக்கும் இடம். சீதல பர்வதம். ஹ்ரீம்காரம் ஜனன மரணமற்ற அமிருத

நிலையைத் தரும் சக்தி வாய்ந்ததாகையால் அது சீதலத் தன்மை பொருந்தியதாகக் கருதப்படுகிறது. அதிலிருந்து, கங்கையைப்போல் எல்லாப் புருஷார்த்தங்களையும் நல்கி, பாபங்களை அழித்து, மந்திர ஸ்வரூபமாகப் பராசக்தி உபாஸகனுக்கு நன்மையை அளிப்பதால், ஹ்ரீம்காரமாகிய ஹிமயமலையினின்று உற்பத்தியாகும் கங்கா நதியாகச் சொல்லப்படுகிருள்.

ओं ह्रीँकारहिमवद्गङ्गायै नमः ।

ஓம் ஹ்ரீங்காரஹிமவத்கங்காயை நம: (297)

ह्रीँकारार्णवकौस्तुभा ।

**ஹ்ரீங்காரார்ணவகௌஸ்துபா** 298

ஹ்ரீம்காரமாகிய ஸமுத்திரத்தில் கௌஸ்துப மணியாக விளங்குபவள்.

விவரணம்:—திருப்பாற்கடலைக் கடைந்த காலத்தில் வெளிவந்த வஸ்துக்கள் பல. அவற்றில் பதினுன்கு வகை ரத்னங்களும் வெளிவந்தன. இவற்றில் மிகவும் சிறந்தது கௌஸ்துபம் என்ற மணி. அதைப்போல் மிகவும் மஹிமை வாய்ந்த ஹ்ரீம்கார ஜபத்தினின்றும் பராசக்தி ஸ்வயம் பிரகாசத்துடன் உபாஸகன் மனத்தில் உதிக்கிருள். ஆகையால் ஹ்ரீம்காரம் திருப்பாற்கடலுக்கும், பராசக்தி கௌஸ்துபத்திற்கும் ஒப்பிடப்பட்டன.

மஹாவிஷ்ணு கௌஸ்துப மணியை மார்பில் அணிந்து கொண்டார். லக்ஷ்மியும் அவர் மார்பில் வசிக்கிருள். அதைப்போல் ஹ்ரீம்கார உபாஸகன் நாராயணனென்ற பரமாத்ம வஸ்துவுக்கும் தனக்கும் இடையே தோன்றும் பேதபாவத்தை ஒழித்து அபேத ஞானத்தை அடைந்து, ஸ்ரீமானுகவும், ஸுந்தர வடிவத்துடனும் விளங்குகிருன் என்பது திரண்ட பொருள்.

ओं ह्रीँकारार्णवकौस्तुभायै नमः ।

ஓம் ஹ்ரீங்காரார்ணவகௌஸ்துபாயை நம: (298)

ह्रींकारमन्त्रसर्वस्वा ।

**ஹ்ரீங்காரமந்த்ரஸர்வஸ்வா** 299

அஷ்டஸித்திகளையும் எல்லாவித ஸம்பத்துக்களையும் கொடுக்கும் ஹ்ரீம்கார மந்திரத்தின் சக்தியாக விளங்குபவள்.

விவரணம் :—'வாக்' என்ற சப்தத்திற்கு 'அர்த்தம்' என்பது சக்தியாக இருப்பதுபோல், 'ஹ்ரீம்' என்ற சப்தத்தின் உட்கருத்தாகிய சக்தியாகப் பராசக்தி விளங்குகிறாள்.

ओं ह्रींकारमन्त्रसर्वस्वायै नमः ।

ஓம் ஹ்ரீம்காரமந்த்ரஸர்வஸ்வாயை நம: (299)

ह्रींकारपरसौख्यदा ।

**ஹ்ரீங்காரபரஸௌக்யதா** 300

(i) ஹ்ரீம்கார மந்திர ஜபத்தில் ஈடுபட்டவர்களோ, அல்லது ஹ்ரீம்காரம் அடங்கியுள்ள ஸ்ரீவித்யா உபாஸகர்களோ, அவர்களுக்கு நான்கு வகைப் புருஷார்த்தங்களை அடைவதால் உண்டாகும் ஆனந்தத்தை அளிப்பவள்.

(ii) 'ஹ்ரீம்' என்ற சப்தத்தில் அமைந்துள்ள ஹகாரம், ரேபம், ஈகாரம் இவற்றால் குறிப்பிடப்படும், மும்மூர்த்திகளின் பாவங்களை ஒன்றுசேர்த்து, அதனால் விளையும் அத்வைதானந்தத்தைத் தருபவள்.

[1] यत्र नान्यत् पश्यति नान्यच्छृणोति नान्यद्विजानाति स भूमा । यत्रान्यत् पश्यति अन्यत् शृणोति अन्यत् विजानाति तदल्पम् ॥

"எதொன்றைவிட்டு அந்நியமான வஸ்து காணப்படவில்லையோ, கேட்கப்படவில்லையோ, அறியப்படவில்லையோ அதுவே மஹத். எதொன்றைவிட்டு அந்நியமான வஸ்து காணப்படுகிறதோ, கேட்கப்படுகிறதோ, அறியப்படுகிறதோ அது அல்பம்".

[2] नाल्पे सुखमस्ति ।

"அல்பத்தில் ஆனந்தம் இருக்காது".

1. சாந்தோக்யம் 7-24. 2. சாந்தோக்யம் 7-23.

[1] आनन्दं ब्रह्मणो विद्वान् न बिभेति कुतश्चन ।

"பிரஹ்மானந்தத்தை அநுபவித்தவனுக்கு ஒருவிதத்திலும் பயம் என்பது கிடையாது".

[2] यदा ह्येवैष एतस्मिन्नदृश्ये अनात्म्ये अनिरुक्तेऽनिलयनेऽभयं प्रतिष्ठां विन्दते । अथ सोऽभयं गतो भवति ॥

"எப்பொழுது ஒருவன் காணக்கூடாததாயும், சரீராதி உபாதிகள் அற்றதும், வியவஹரிக்கக் கூடாததாயும், குறித்த இடத்தில் வசிக்காததாயும் உள்ள (ஆத்ம) வஸ்துவில் சரணம் அடைகிறானோ அவன் பயத்தை முற்றும் ஒழித்துவிடுகிறான்".

[3] विज्ञानमानन्दं ब्रह्म रातिर्दातुः परायणम् ।

"பிரஹ்மம் விஞ்ஞானரூபம், ஆனந்தமயம், மித்ரன், தானசீலர்களுக்கு உயர்ந்த கதியாக விளங்குபவன்".

[4] ब्रह्म वेद ब्रह्मैव भवति ।

"பிரஹ்மத்தை அறிபவன் பிரஹ்மமாகவே ஆகிவிடுகிறான்".

[5] तरति शोकमात्मवित् ।

"தனது ஆத்ம தத்வத்தை அறிந்தவனைத் துக்கம் பாதிக்காது".

[6] येन मामुपयान्ति ते । [7] तेषामहं समुद्धर्ता मृत्युसंसार-सागरात् ।

"என்னை அடைந்தவர்களை நான் ஜனன மரணமாகிய ஸம்ஸார ஸாகரத்தினின்றும் கரையேற்றுகிறேன்".

[8] ब्रह्मैव सन् ब्रह्माप्येति ।

---

1. ஆனந்தவல்லி 9. 2. ஆனந்தவல்லி 7. 3. பிருஹதாரண்யகம் 3-9-28. 4. முண்டகம் 3-2-9. 5. சாந்தோக்யம் 7-1. 6. கீதை 10-10. 7. கீதை 12-7. 8. பிருஹதாரண்யகம் 4-4-6.

"தனது பிரஹ்மபாவத்தை அநுஸந்தானம் பண்ணுவதால் ஒருவன் பிரஹ்மமாகவே ஆகிவிடுகிறான்.

முற்கூறிய வாக்கியங்களிலிருந்து திரிசதியின் கடைசி மந்திரத்தில் பிரஹ்மபாவத்தை அடைவது என்பதே புருஷார்த்தங்களை அடைவது என்பதன் கருத்தென்பது உறுதிப்படுகிறது.

ओं ह्रींकारपरसौख्यदायै नमः ।

ஓம் ஹ்ரீங்காரபரஸௌக்யதாயை நம: (300)

*இத்துடன்*

*ஸ்ரீமத் சங்கரபகவத்பாதர்களுடைய ஸ்ரீ லலிதா த்ரிசதீ ஸ்தோத்ரபாஷ்யத்தை அநுஸரித்து இயற்றப்பட்ட தமிழ் அகல உரை முற்றிற்று.*



## ॥ फलश्रुतिः ॥

इत्येवं ते मयाख्यातं देव्या नामशतत्रयम् ।
रहस्यातिरहस्यत्वाद्गोपनीयं त्वया मुने ॥ १ ॥

இத்யேவம் தே மயாக்யாதம் தேவ்யா நாமஶத த்ரயம் ।
ரஹஸ்யாதி ரஹஸ்யத்வாத் கோபநீயம் த்வயா முநே ॥

### பலச்ருதி

அகஸ்திய முனிவரே! முற்கூறியவண்ணம் ஸ்ரீ லலிதா தேவியின் முன்னூறு நாமாவளிகள் உங்களுக்கு என்னால் உபதேசிக்கப்பட்டன. அவை மிகவும் ரஹஸ்யமான மந்திரங்கள். ஆகையால் அவற்றை நீர் கவனத்துடன் ரக்ஷித்தல் வேண்டும். (1)

शिववर्णानि नामानि श्रीदेव्या कथितानि हि ।
शक्त्यक्षराणि नामानि कामेशकथितानि च ॥ २ ॥

उभयाक्षरनामानि ह्युभाभ्यां कथितानि वै ।
तदन्यैर्ग्रथितं स्तोत्रमेतस्य सदृशं किमु ॥ ३ ॥

ஶிவ வர்ணானி நாமாநி ஸ்ரீ தேவ்யா கதிதாநி ஹி ।
ஶக்த்யக்ஷராணி நாமாநி காமேஶ கதிதாநி ச ॥
உபயாக்ஷர நாமாநி ஹ்யுபாப்யாம் கதிதாநி வை ।
ததந்யைர் க்ரதிதம் ஸ்தோத்ரமேதஸ்ய ஸத்ருஶம் கிமு ॥

அவற்றில் சிவபரமாயுள்ள அக்ஷரங்களும், சக்திபரமாயுள்ள அக்ஷரங்களும் இருவர் பரமாயுள்ள அக்ஷரங்களும் இருக்கின்றன. சிவாக்ஷரங்கள் சக்தியினால் உரைக்கப்பட்டன. சக்தி அக்ஷரங்கள் சிவனால் சொல்லப்பட்டவையாகும். சிவ–சக்தி அக்ஷரங்கள் இருவராலும் சொல்லப்பட்டவை. ஆதலால் ஏனைய ஸ்தோத்ரங்கள் இவற்றிற்கு இணையாகுமா? (2–3)

नानेन सदृशं स्तोत्रं श्रीदेवीप्रीतिदायकम् ।
लोकत्रयेऽपि कल्याणं संभवेन्नात्र संशयः ॥ ४ ॥

நாமேந ஸத்ருஶம் ஸ்தோத்ரம் ஸ்ரீ தேவீ ப்ரீதி தாயகம் ।
லோக த்ரயேபி கல்யாணம் ஸம்பவேத் நாத்ர ஸம்ஶய: ॥

ஸ்ரீ தேவிக்கு சந்தோஷத்தையுண்டுபண்ணுவதும், மங்களமாயும் உள்ள இந்த ஸ்தோத்ரத்திற்கு இணையான ஸ்தோத்திரம் மூவுலகங்களிலும் இல்லை என்பதில் சந்தேகம் கிடையாது. (4)

इति हयमुखगीतं स्तोत्रराजं निशम्य
प्रगलितकलुषोऽभूच्चित्तपर्याप्तिमेत्य ।
निजगुरुमथ नत्वा कुम्भजन्मा तदुक्तं
पुनरधिकरहस्यं ज्ञातुमेवं जगाद ॥ ५ ॥

இதி ஹயமுக கீதம் ஸ்தோத்ர ராஜம் நிஶம்ய
ப்ரகலித கலுஷோபூத் சித்த பர்யாப்திமேத்ய ।
நிஜ குருமத நத்வா கும்ப ஜந்மா தது க்தம்
புநரதிக ரஹஸ்யம் ஞாதுமேவம் ஜகாத ॥

ஸூதர் சொல்லுகிறார் :—

இப்படி ஹயக்ரீவர் அருளிய ஸ்தோத்ரங்களில் மிகவும் சிறந்த இந்த ஸ்தோத்ரத்தைக் கேட்டுச் சித்தசாந்தியை அடைந்து, பாபம் அனைத்தும் தன்னைவிட்டு நழுவினவராய், தனது ஆசாரியனை வணங்கி அகஸ்திய முனிவர் தனக்குக் கிடைத்த உபதேசத்தில் இனியும் அதிகமான ரகசியங்களை அறிய எண்ணங்கொண்டு கீழ்கண்டவாறு மொழிந்தார். (5)

अगस्त्य उवाच —

अश्वानन महाभाग रहस्यमपि मे वद ।
शिववर्णानि कान्यत्र शक्तिवर्णानि कानि हि ॥ ६ ॥

उभयोरपि वर्णानि कानि वा वद देशिक ।
इति पृष्टः कुम्भजेन हयग्रीवोऽवदत्पुनः ॥ ७ ॥

அகஸ்த்ய உவாச :—

அச்வாநந மஹாபாக ரஹஸ்யமபி மே வத ।
ஶிவ வர்ணானி காந்யத்ர ஶக்தி வர்ணானி காநி ஹி ॥

உபயோரபி வர்ணானி காநி வா வத தேசிக ।
இதி ப்ருஷ்ட: கும்பஜேந ஹயக்ரீவோऽவதத் புந: ॥

அகஸ்தியர் சொல்லுகிறார் :—

குதிரை முகத்தவரே! தூய வடிவே! சிவாக்ஷரங்கள் எவை? சக்தி அக்ஷரங்கள் எவை? சிவ-சக்தி அக்ஷரங்கள் எவை? ஸத்குருவே! இந்த ரகசியத்தை எனக்கு விளக்க வேண்டும்.

இப்படி அகஸ்தியரால் வினவப்பட்டவராய் ஹயக்ரீவர் மறுபடியும் சொல்லலுற்றார். (6–7)

तव गोप्यं किमस्तीह साक्षादम्बानुशासनात् ।
इदं त्वतिरहस्यं ते वक्ष्यामि शृणु कुम्भज ॥ ८ ॥

தவ கோப்யம் கிமஸ்தீஹ ஸாக்ஷாதம்பானுசாஸநாத் ।
இதம் த்வதிரஹஸ்யம் தே வக்ஷ்யாமி ச்ருணு கும்பஜ ॥

ஹயக்ரீவர் சொல்லுவது :—

லோகமாதா ஆணையிட்டிருக்கும்பொழுது, அகஸ்தியரே! உமக்குத் தெரிவிக்கக்கூடாதது இருக்குமா? மிகவும் ரகசியமான இந்த விஷயத்தையும் உமக்குச் சொல்லுகிறேன்; கேளும். (8)

एतद्विज्ञानमात्रेण श्रीविद्या सिद्धिदा भवेत् ।
कत्रयं हद्वयं चैव शैवो भागः प्रकीर्तितः ॥ ९ ॥

ஏதத் விஞ்ஞான மாத்ரேண ஸ்ரீவித்யா ஸித்திதா பவேத் ।
கத்ரயம் ஹத்வயம் சைவ சைவோ பாக: ப்ரகீர்த்தித: ॥

இதை அறிந்துகொண்டால் மாத்திரமே ஸ்ரீ வித்யை பலஸித்தியை அளிப்பாள். மூன்று ‘க’ காரங்களும், இரண்டு ‘ஹ’ காரங்களும் சிவனுடைய பாகமென்று சொல்லப்படுகின்றன. (9)

शक्त्यक्षराणि शेषाणि ह्रींकार उभयात्मकः ।
एवं विभागमज्ञात्वा ये विद्याजपशालिनः ॥ १० ॥

न तेषां सिद्धिदा विद्या कल्पकोटिशतैरपि ।

ஶக்த்யக்ஷராணி ஶேஷாணி ஹ்ரீங்கார உபயாத்மக: ।
ஏவம் விபாகமக்ஞாத்வா யே வித்யாஜபஶாலிந:
ந தேஷாம் ஸித்திதா வித்யா கல்பகோடி ஶதைரபி ।

'ஹ்ரீம்' காரம் சிவ—சக்தி அக்ஷரம். மீதி அக்ஷரங்கள் சக்தியின் அக்ஷரங்களாவன. இவ்விதமான பிரிவினையை அறியாமல் யார் ஸ்ரீ வித்யையை ஜபிக்கின்றனரோ அவர்களுக்கு நூறு கோடி கல்பங்களாயினும் ஸ்ரீ வித்யையினுடைய பலன் ஸித்திக்காது. (10—10½)

चतुर्भिः शिवचक्रैश्च शक्तिचक्रैश्च पञ्चभिः ॥ ११ ॥

नवचक्रैश्च संसिद्धं श्रीचक्रं शिवयोर्वपुः ।
त्रिकोणमष्टकोणं च दशकोणद्वयं तथा ॥ १२ ॥

चतुर्दशारं चैतानि शक्तिचक्राणि पञ्च च ।
बिन्दुश्चाष्टदलं पद्मं पद्मं षोडशपत्रकम् ॥ १३ ॥
चतुरश्रं च चत्वारि शिवचक्राण्यनुक्रमात् ।

சதுர்பி: ஶிவசக்ரைச்ச ஶக்திசக்ரைச்ச பஞ்சபி: ॥
நவசக்ரைச்ச ஸம்ஸித்தம் ஸ்ரீசக்ரம் ஶிவயோர்வபு: ।
த்ரிகோணமஷ்டகோணம் ச தஶகோணத்வயம் ததா ॥
சதுர்தஶாரம் சைதாநி ஶக்திசக்ராணி பஞ்ச ச ।
பிந்துச்சாஷ்டதலம் பத்மம் பத்மம் ஷோடஶபத்ரகம் ॥
சதுரச்ரம் ச சத்வாரி ஶிவசக்ராண்யநுக்ரமாத் ।

சிவ—சக்திகளின் சரீரமாகிய ஸ்ரீ சக்கரம் நான்கு சிவ சக்கரங்களும், ஐந்து சக்தி சக்கரங்களுமாக ஒன்பது சக்கரங்களுடன் கூடியது. அப்படியே ஒரு திரிகோணம், எட்டுக் கோணங்கள், ஒவ்வொன்றிலும் பத்துக் கோணங்கள் அடங்கிய இரு தொகுதிகள், பிறகு பதினான்கு கோணங்கள், இவை ஐந்தும் சக்தியின் ஐந்து தொகுதிகளாகிய சக்கரங்கள், பிந்து, எட்டுத் தளங்களுடன் கூடிய

தாமரை, பிறகு பதினறு தளங்களுடன் கூடிய தாமரை, சதுரச்ரம் என்னும் நான்கும் சிவசக்கரங்கள் எனப்படும். (11–13½)

त्रिकोणे बैन्दवं श्लिष्टमष्टारेऽष्टदलाम्बुजम् ॥ १४ ॥
दशारयोः षोडशारं भूगृहं भुवनाश्रके ।
शैवानामपि शाक्तानां चक्राणां च परस्परम् ॥ १५ ॥
अविनाभावसंबन्धं यो जानाति स चक्रवित् ।

த்ரிகோணே பைந்தவம் ச்லிஷ்டமஷ்டாரேऽஷ்ட தளாம்புஜம் ॥
தசாரயோ: ஷோடசாரம் பூக்ருஹம் புவநாச்ரகே ।
சைவாநாமபி சாக்தாநாம் சக்ராணாம் ச பரஸ்பரம் ॥
அவிநாபாவஸம்பந்தம் யோ ஜாநாதி ஸ சக்ரவித் ।

திரிகோணத்தில் பிந்துவும், அஷ்டகோணத்தில் அஷ்டதளபத்மமும், இரண்டு தசகோணங்களில் பதினறு தளபத்மமும், பதினன்கு கோண சக்கரத்தில் சதுரச்ரம் என்ற பூபுரமும் பொருந்தியுள்ளன. இவ்விதம் சிவ சக்கரங்களும், சக்தி சக்கரங்களும் ஒன்றுக்கொன்று இணைக்கப் பட்டுள்ள சேர்க்கையை எவன் அறிகிருனே, அவனே சக்கரத்தின் தத்வத்தை அறிந்தவன். (14–15½)

त्रिकोणरूपिणी शक्तिर्बिन्दुरूपपरः शिवः ॥ १६ ॥
अविनाभावसंबन्धस्तस्माद्बिन्दुत्रिकोणयोः ।
एवं विभागमज्ञात्वा श्रीचक्रं यः समर्चयेत् ॥ १७ ॥
न तत्फलमवाप्नोति ललिताम्बा न तुष्यति ।
ये च जानन्ति लोकेऽस्मिन्श्रीविद्याचक्रवेदिनः ॥ १८ ॥
सामान्यवेदिनः सर्वे विशेषज्ञोऽतिदुर्लभः ।
स्वयं विद्याविशेषज्ञो विशेषज्ञं समर्चयेत् ॥ १९ ॥
तस्मै देयं ततो ग्राह्यमशक्तस्तस्य दापयेत् ।

த்ரிகோண ரூபிணீ ஶக்திர் பிந்துரூப பர: ஶிவ: ॥
அவிநாபாவஸம்பந்தஸ்தஸ்மாத் பிந்துத்ரிகோணயோ: ।
ஏவம் விபாகமஜ்ஞாத்வா ஶ்ரீசக்ரம் ய: ஸமர்சயேத் ॥

ந தத்பலமவாப்நோதி லலிதாம்பா ந துஷ்யதி ।
யே ச ஜாநந்தி லோகேऽஸ்மிந் ஶ்ரீவித்யாசக்ரவேதிந: ॥

ஸாமாந்ய வேதிந: ஸர்வே விஶேஷஜ்ஞோऽதிதுர்லப: ।
ஸ்வயம் வித்யா விஶேஷஜ்ஞோ விஶேஷஜ்ஞம் ஸமர்சயேத் ॥

தஸ்மைதேயம் ததோ க்ராஹ்யமஶக்தஸ்தஸ்ய தாபயேத்।

சக்தியானவள் திரிகோண வடிவமுடையவள், சிவம் என்பது பிந்து வடிவம். ஆகையால் திரிகோணத்திற்கும் பிந்துவுக்கும் இடையே பிரிவினை இல்லாத ஸம்பந்தம் இருக்கிறது. எவன் இந்த ஸம்பந்தத்தை அறியாமல் ஸ்ரீ சக்கரத்தைப் பூஜிக்கிறானோ, அவன் பலனை அடைய மாட்டான். லலிதாதேவி சந்தோஷத்தை அடைய மாட்டாள். இவ்வுலகில் யார் சிவசக்திகளுடைய ஒருமைப் பட்ட தன்மையை அறிகிறார்களோ அவர்களே ஸ்ரீவித்யா சக்கரத்தை அறிந்தவர்கள். பெரும்பாலோர் இதை ஸாமான்யமாக அறிகிறார்கள். சிறந்தவண்ணமாய் அறிந்தவர்கள் அபூர்வம். நன்கு அறிந்தவன் நன்கு அறிந்தவனைப் பூஜிக்கவேண்டும். அவனுக்குத் தானம் செய்து, தானும் தானம் பெறுதல் வேண்டும். தானம் செய்யச் சக்தியற்றவன் ஏனையோரைக்கொண்டு தானம் செய்வித்தல் வேண்டும். (16–19½)

अन्धं तमः प्रविशन्ति येऽविद्यां समुपासते ॥ २० ॥

इति श्रुतिरपाहैनानविद्योपासकान्पुनः ।
विद्यान्योपासकानेव निन्दत्यारुणिकी श्रुतिः ॥ २१ ॥

அந்தம் தம: ப்ரவிஶந்தி யேऽவித்யாம் ஸமுபாஸதே ॥

இதி ச்ருதிரபாஹைநாநவித்யோபாஸகாந் புந: ।
வித்யாந்யோபாஸகாநேவ நிந்தத்யாருணிகீ ச்ருதி: ॥

அஞ்ஞான மார்க்கத்தில் செல்லுபவர்கள் இருளடைந்த இடத்தையே அடைவார்கள் என்று வேதங்கள் இவர்களை நிராகரிக்கின்றன. ஆருணிகீ சுருதியும் இவர்களையே நிந்திக்கிறது. (20-21)

अश्रुता सश्रुतासश्च यज्वानो येऽप्ययज्वनः ।
स्वर्यन्तो नापेक्षन्ते इन्द्रमग्निं च ये विदुः ॥ २२ ॥

सिकता इव संयन्ति रश्मिभिः समुदीरिताः ।
अस्माल्लोकादमुष्माच्चेत्याह चारण्यकश्रुतिः ॥ २३ ॥

அச்ருதா ஸச்ருதாஸச்ச யஜ்வாநோ யேऽப்யயஜ்வந: ।
ஸ்வர்யந்தோ நாபேக்ஷந்தே இந்த்ரமக்நிம் ச யே விது:॥

ஸிகதா இவ ஸம்யந்தி ரச்மிபி: ஸமுதீரிதா: ।
அஸ்மாத் லோகாதமுஷ்மாச்சேத்யாஹ சாரண்யகச்ருதி: ॥

வேத வித்தாயிருந்தாலும், இல்லாமற்போனாலும், யாகம் செய்தாலும், செய்யாமற்போனாலும், தத்வஞானிகள். ஸ்வர்க்கபோகங்களையும், இந்திர பதவியையும், அக்கினி பதவியையும் விரும்பமாட்டார்கள். அஞ்ஞானத்தினால் பாதிக்கப்பட்டவர்கள் இந்த ஜன்மத்திலும், ஜன்மாந்தரத்திலும் மணல்போல் நொறுக்கப்பட்டு யமபாசங்களுக்கு ஆளாகிறார்கள் என்று ஆரண்யக சுருதி கூறுகிறது (22-23)

यस्य नो पश्चिमं जन्म यदि वा शंकरः स्वयम् ।
तेनैव लभ्यते विद्या श्रीमत्पञ्चदशाक्षरी ॥ २४ ॥

इति मन्त्रेषु बहुधा विद्याया महिमोच्यते ।
मोक्षैकहेतुविद्या तु श्रीविद्या नात्र संशयः ॥ २५ ॥

யஸ்ய நோ பச்சிமம் ஜந்ம யதி வா ஶங்கர: ஸ்வயம் ।
தேநைவ லப்யதே வித்யா ஶ்ரீமத் பஞ்சதஶாக்ஷரீ ॥

இதி மந்த்ரேஷு பஹுதா வித்யாயா மஹிமோச்யதே ।
மோக்ஷைக ஹேது வித்யா து ஶ்ரீவித்யா நாத்ர ஸம்ஶய: ॥

பஞ்சதசாக்ஷரீயென்ற காதிவித்யையானது, யாரொருவருக்குப் புனர்ஜன்மம் கிடையாதோ, அவராலும் அல்லது ஈசுவராவதாரம் யாரோ அவராலுமேதான் அடையமுடியும். இவ்விதம் மந்திர சாஸ்திரங்களில் ஸ்ரீவித்யையின் மஹிமை பலவிதமாக வர்ணிக்கப்பட்டிருக்கிறது. ஸ்ரீவித்யையானது மோக்ஷப் பிராப்தியைத் தருகிறது என்பதில் சந்தேகமே கிடையாது. (24–25)

न शिल्पादिज्ञानयुक्ते विद्वच्छब्दः प्रयुज्यते ।
मोक्षैकहेतुविद्या सा श्रीविद्यैव न संशयः ॥ २६ ॥

ந ஶில்பாதிஞாநயுக்தே வித்வச்சப்த: ப்ரயுஜ்யதே ।
மோக்ஷைகஹேது வித்யா ஸா ஸ்ரீவித்யைவ ந ஸம்ஶய: ॥

சில்பம் முதலிய கலைகளை அறிந்தவனை வித்வான் என்று சொல்லுவதில்லை. வித்யையென்பது மோக்ஷத்திற்கு ஸாதனமாக இருக்கவேண்டும். அதுவே ஸ்ரீவித்யை என்பதில் ஸந்தேகம் இல்லை. (26)

तस्माद्विद्याविदेवात्र विद्वान्विद्वानितीर्यते ।
स्वयं विद्याविदे दद्यात्ख्यापयेत्तद्गुणान्सुधीः ॥ २७ ॥

தஸ்மாத் வித்யாவிதேவாத்ர வித்வான் வித்வானிதீர்யதே ।
ஸ்வயம் வித்யாவிதே தத்யாத் க்யாபயேத் தத்குணான்
ஸுதீ: ॥

ஆகையால் ஸ்ரீவித்யையை அறிந்தவனே 'வித்வான்' 'வித்வான்' என்று சொல்லப்படுகிறான். புத்திமான் ஸ்வயமாகவே ஸ்ரீவித்யையை அறிந்தவனுக்குத் தானம் கொடுத்தல்வேண்டும். அவன் நற்குணங்களைப் பரவச் செய்தலும்வேண்டும். (27)

स्वयं विद्यारहस्यज्ञो विद्यामाहात्म्यवेद्यपि ।
विद्याविदं नार्चयेच्चेत्को वा तं पूजयेज्जनः ॥ २८ ॥

ஸ்வயம் வித்யா ரஹஸ்யக்ஞோ வித்யாமாஹாத்ம்ய
வேத்யபி ।

வித்யாவிதம் நார்சயேத்சேத் கோ வா தம் பூஜயேஜ்ஜநः ॥

ஸ்ரீவித்யையின் ரஹஸ்யத்தை அறிந்தவன், வித்யா மாஹாத்மியத்தையும் அறிந்திருக்கும்பொழுது, ஸ்ரீவித்யையை அறிந்தவனைப் பூஜிக்காவிடில், அப்படிச் செய்பவனை யார் பூஜிப்பார்கள்? (28)

प्रसङ्गादिदमुक्तं ते प्रकृतं शृणु कुम्भज ।
यः कीर्तयेत्सकृद्भक्त्या दिव्यनामशतत्रयम् ॥

तस्य पुण्यमहं वक्ष्ये शृणु त्वं कुम्भसंभव ।
रहस्यनामसाहस्रपाठे यत्फलमीरितम् ॥ ३० ॥

तत्फलं कोटिगुणितमेकनामजपाद्भवेत् ।

ப்ரஸங்காதிதமுக்தம் தே ப்ரக்ருதம் ச்ருணு கும்பஜ ।
யः கீர்தயேத் ஸக்ருத் பக்த்யா திவ்யநாமமுதத்ரயம் ॥
தஸ்ய புண்யமஹம் வக்ஷ்யே ச்ருணுத்வம் கும்பஸம்பவ ।
ரஹஸ்யநாம ஸாஹஸ்ர பாடே யத் பலமீரிதம் ॥
தத்பலம் கோடி குணித மேகநாம ஜபாத் பவேத் ।

நாம் பேசிக்கொள்ளும் விஷயத்திற்கு அந்நியமாக, பிரசங்கரூபமாக இவை சொல்லப்பட்டன. இப்பொழுது குறிப்பிட்ட விஷயத்தைக் கேளும், அகஸ்தியரே! யாரொருவன் பக்தியுடன் திரிசதீ திவ்ய நாமாவளியைக் கீர்த்தனம் பண்ணுகிருனே, அவன் செய்த புண்ணியத்தின் அளவைக் கேளும், சொல்லுகிறேன்:— ரஹஸ்யமாயுள்ள லலிதாஸஹஸ்ரநாமத்தைப் படிப்பதால் எந்த அளவு புண்ணியம் விளைவதாகச் சொல்லப்பட்டிருக்கிறதோ, அந்தப் புண்ணிய பலனின் கோடியளவு இந்த திரிசதியில் ஒரு நாமாவைச் சொல்லுவதால் உண்டாகும். (29-30½)

कामेश्वरीकामेशाभ्यां कृतं नामशतत्रयम् ॥ ३१ ॥

नान्येन तुलयेदेतत्स्तोत्रेणान्यकृतेन च ।

காமேச்வரீ காமேசாப்யாம் க்ருதம் நாமசதத்ரயம் ॥
நாந்யேன துலயேதேதத் ஸ்தோத்ரேணாந்ய க்ருதேந ச ।

காமேசுவரி, காமேசுவரர் என்ற இருவர்களாலும் செய்யப்பட்ட திரிசதீ ஸ்தோத்ரத்திற்கு ஏனையோரால் செய்யப்பட்ட ஏனைய ஸ்தோத்ரங்கள் இணையாகுமா?

श्रियः परंपरा यस्य भावि वा चोत्तरोत्तरम् ॥ ३२ ॥
तेनैव लभ्यते चैतत्पश्चाच्छ्रेयः परीक्षयेत् ।

ஸ்ரிய: பரம்பரா யஸ்ய பாவி வா சோத்தரோத்தரம் ॥
தேநைவ லப்யதே சைதத் பச்சாத் ச்ரேய: பரீக்ஷயேத் ।

எவனுக்கு மேன்மேலும் க்ஷேம பரம்பரை உண்டாகப் போகிறதோ அவனாலேயேதான் திரிசதீ என்ற மஹா வித்யை அடையப்படும். பின்னால் சிரேயஸ் உண்டாவதைப் பரீக்ஷை செய்து பார்க்கலாம். (32-32½)

अस्या नाम्नां त्रिशत्यास्तु महिमा केन वर्ण्यते ॥ ३३ ॥
या स्वयं शिवयोर्वक्त्रपद्माभ्यां परिनिःसृता ।

அஸ்யா நாம்நாம் த்ரிசத்யாஸ்து மஹிமா கேநவர்ண்யதே ॥
யா ஸ்வயம் சிவயோர் வக்த்ரபத்மாப்யாம் பரிநிஸ்ஸ்ருதா ।

இந்த திரிசதீ நாமாக்களின் மஹிமையை யாரால் வர்ணிக்கமுடியும்; எந்த திரிசதீ சிவசக்திகளின் முகார விந்தங்களினின்று உற்பத்தியாயிற்றோ. (33-33½)

नित्यं षोडशसंख्याकान्विप्रानादौ तु भोजयेत् ॥ ३४ ॥
अभ्यक्तांस्तिलतैलेन स्नातानुष्णेन वारिणा ।
अभ्यर्च्य गन्धपुष्पाद्यैः कामेश्वर्यादिनामभिः ॥ ३५ ॥
सूपापूपैः शर्कराद्यैः पायसैः फलसंयुतैः ।
विद्याविदो विशेषेण भोजयेत्षोडश द्विजान् ॥ ३६ ॥

एवं नित्यार्चनं कुर्यादादौ ब्राह्मणभोजनम् ।
त्रिशतीनामभिः पश्चाद्ब्राह्मणान्क्रमशोऽर्चयेत् ॥ ३७ ॥

तैलाभ्यङ्गादिकं दत्वा विभवे सति भक्तितः ।
शुक्लप्रतिपदारभ्य पौर्णमास्यवधि क्रमात् ॥ ३८ ॥

दिवसे दिवसे विप्रा भोज्या विंशतिसंख्यया ।
दशभिः पञ्चभिर्वापि त्रिभिरेकेन वा दिनैः ॥ ३९ ॥

त्रिंशत्षष्टिः शतं विप्राः संभोज्यास्त्रिशतं क्रमात् ।
एवं यः कुरुते भक्त्या जन्ममध्ये सकृन्नरः ॥ ४० ॥

तस्यैव सफलं जन्म मुक्तिस्तस्य करे स्थिरा ।

நித்யம் ஷோடஶ ஸங்க்யாகான் விப்ராநாதௌ து போஜயேத் ॥

அப்யக்தாம்ஸ்தில தைலேந ஸ்நாதாநுஷ்ணேன வாரிணா ।
அப்யர்ச்ய கந்த புஷ்பாத்யைः காமேச்வர்யாதி நாமபிः ॥

ஸூபாபூபைः ஶர்கராத்யைः பாயஸைः பல ஸம்யுதைः ।
வித்யாவிதோ விஶேஷேண போஜயேத் ஷோடஶ த்விஜான் ॥

ஏவம் நித்யார்சனம் குர்யாதாதௌ ப்ராஹ்மண போஜநம் ।
த்ரிஶதீ நாமபிः பச்சாத் ப்ராஹ்மணான் க்ரமஶோர்சயேத் ॥

தைலாப்யங்காதிகம் தத்வா விபவே ஸதி பக்திதः ।
ஶுக்ல ப்ரதிபதாரப்ய பௌர்ணமாஸ்யவதி க்ரமாத் ॥

திவஸே திவஸே விப்ரா போஜ்யா விம்ஶதி ஸங்க்யயா ।
தஶபிः பஞ்சபிர் வாபி த்ரிபிரேகேந வா திநைः ॥

த்ரிம்ஶத் ஷஷ்டிः ஶதம் விப்ராः ஸம்போஜ்யாஸ்த்ரிஶதம் க்ரமாத் ।
ஏவம் யः குருதே பக்த்யா ஜந்ம மத்யே ஸக்ருந்நரः ॥

தஸ்யைவ ஸபலம் ஜந்ம முக்திஸ்தஸ்ய கரே ஸ்திரா ।

திரிசதீ நாமாக்களைக்கொண்டு பிராஹ்மண போஜனம் செய்வித்தற்குரிய விதி கீழே விவரிக்கப்படுகிறது:—

ஆரம்பதினத்தில் (அமாவாசையன்று) பதினாறு பிராஹ்மணர்களுக்குப் போஜனம் பண்ணுவித்தல் வேண்டும். வெந்நீரில் அவர்களை அப்யங்க ஸ்நானம் செய்வித்து, காமேசுவரி முதலிய பதினாறு சக்தி நாமாக்களால் வரித்து, அவர்களை அர்ச்சித்து, வடை, பாயஸம் பழவர்க்கங்களுடன் அவர்களுக்கு அன்னமிடவேண்டும். அவர்கள் ஸ்ரீவித்யையைக் கற்றுணர்ந்தவர்களாயிருத்தல் சிறந்தது. பிறகு நித்யார்ச்சனம் திரிசதீ நாமாக்களால் க்ரமேண செய்யவேண்டும். சுக்கிலபக்ஷ பிரதமையில் ஆரம்பித்துப் பௌர்ணமி முடிய நடத்தவேண்டும். ஒவ்வொரு தினத்திற்கும் இருபது பிராஹ்மணராக பதினைந்து தினத்திற்கோ, முப்பது பிராஹ்மணராகப் பத்து நாட்களுக்கோ, அறுபது வீதம் ஐந்து நாட்களுக்கோ, முன்னூறும் ஒரே தினத்தன்றே பிராஹ்மணர்களை வரித்து, விபவமுள்ளவர்கள் ஸ்நான வஸ்திராதிகளைக் கொடுத்து உபசரித்து, பிறகு திரிசதீ நாமாக்களினால் முறையே அர்ச்சித்துப் போஜனம் செய்வித்தல் வேண்டும். எவனொருவன் ஜீவகாலத்தில் இவ்விதம் ஒருதட்வை யாகிலும் செய்கிறானோ, அவன் ஜன்மம் ஸபலமாய், மோக்ஷம் அவன் கையில் ஸ்திரமாய் வந்துவிடுகிறது. (34-40½)

आदौ नित्यबलिं कुर्यात्पश्चाद्ब्राह्मणभोजनम् ।
रहस्यनामसाहस्रभोजनेऽप्येवमेव हि ॥ ४१ ॥

ஆதௌ நித்ய பலிம் குர்யாத் பச்சாத் ப்ராஹ்மண போஜநம் ।
ரஹஸ்ய நாம ஸாஹஸ்ர போஜநேऽப்யேவமேவ ஹி ॥

லலிதாஸஹஸ்ரநாமபரமாய்ச் செய்யவேண்டிய பிராஹ்மண போஜன விதியும் இதுபோலவேதான். ஆரம்பதினத்தன்று நித்யாதேவிகளை பிராஹ்மணர்களிடம்

வரித்துப் பூஜிக்கவேண்டும். பிறகு ஸஹஸ்ர பிராஹ்மண போஜனத்தை விதிபூர்வமாய்ச் செய்வித்தல் வேண்டும். (41-41½)

रहस्यनामसाहस्रमहिमा यो मयोदितः ॥ ४२ ॥

स शीकराणुरत्रैकनाम्नो महिमवारिधेः ।
वाग्देवीरचिते नामसाहस्रे यद्यदीरितम् ॥ ४३ ॥

तत्फलं कोटिगुणितं नाम्नोऽप्येकस्य कीर्तनात् ।
एतदन्यैर्जपैः स्तोत्रैरर्चनैर्यत्फलं भवेत् ॥ ४४ ॥

तत्फलं कोटिगुणितं भवेन्नामशतत्रयात् ।
वाग्देवीरचिते स्तोत्रे तादृशो महिमा यदि ॥ ४५ ॥

साक्षात्कामेशकामेशीकृतेऽस्मिन्गृह्यतामिति ।

ரஹஸ்யநாம ஸாஹஸ்ர மஹிமா யோ மயோதித: ॥

ஸ பீகராணுரத்ரைக நாம்நோ மஹிம வாரிதே: ।
வாக்தேவீ ரசிதே நாம ஸாஹஸ்ரே யத்யதீரிதம் ॥

தத்பலம் கோடிகுணிதம் நாம்நோऽப்யேகஸ்ய கீர்தனாத் ।
ஏததந்யைர் ஜபை: ஸ்தோத்ரைரர்சனைர்யத் பலம் பவேத் ॥

தத்பலம் கோடிகுணிதம் பவேத் நாமஶத த்ரயாத் ।
வாக்தேவீ ரசிதே ஸ்தோத்ரே தாத்ருஶோ மஹிமா யதி ॥

ஸாக்ஷாத் காமேஶ காமேஶீ க்ருதேஸ்மின் க்ருஹ்யதாமிதி ।

லலிதாஸஹஸ்ரநாமத்தின் மஹிமை என்னால் எவ்விதம் சொல்லப்பட்டதோ, அது இந்த திரிசதியிலுள்ள ஒரு நாமாவின் மஹிமா ஸமுத்திரத்தில் ஒரு திவிலைக்கு இணை. வாக்தேவிகளால் செய்யப்பட்ட ஸஹஸ்ரநாமத்திற்கு என்ன பலன் சொல்லப்படுகிறதோ அதைப்போல் கோடி மடங்கு கூட திரிசதியில் ஒவ்வொரு நாமாவை உச்சரிப்பதாலும் உண்டாகிறது. இதர ஜபங்கள், ஸ்தோத்திரங்கள், அர்ச்சனைகள் இவைகளால் என்ன

பயன் கிடைக்கிறதோ, அதைவிடக் கோடி மடங்குள்ள பயன் திரிசதியினின்றும் விளைகிறது. வாக்தேவியினால் செய்யப்பட்ட ஸ்தோத்திரத்திற்கு இத்தகைய மஹிமை யென்றால், ஸாக்ஷாத் காமேசுவரரும் காமேசுவரியும் செய்திருக்கும் திரிசதியின் மஹிமை இத்தகையதென்று அறிந்துகொள்ளட்டும். (42-45½)

सकृत्सङ्कीर्तनादेव नाम्नामस्मिञ्शतत्रये ॥ ४६ ॥

भवेच्चित्तस्य पर्याप्तिर्नूनमन्यानपेक्षिणी ।

न ज्ञातव्यमितोऽप्यन्यन्न जप्तव्यं च कुम्भज ॥ ४७ ॥

ஸக்ருத் ஸங்கீர்தநாதேவ நாம்நாமஸ்மின் ஶதத்ரயே ॥
பவேத் சித்தஸ்ய பர்யாப்திர் நூநமந்யாநபேக்ஷிணீ ।
ந ஞாதவ்யமிதோப்யந்யத் ந ஜப்தவ்யம் ச கும்பஜ ॥

த்ரிசதீ நாமாவளியை ஒரு தடவை ஸங்கீர்த்தனம் செய்தால் அதுவே வேறொன்றையும் அபேக்ஷிக்காமல் சித்த சாந்தியைத்தரும். அகஸ்தியரே! இதைத்தவிர வேறு எதுவும் அறியவேண்டுவதில்லை. ஜபிக்கவேண்டுவதில்லை. (46—47)

यद्यत्साध्यतमं कार्यं तत्तदर्थमिदं जपेत् ।

तत्तत्फलमवाप्नोति पश्चात्कार्यं परीक्षयेत् ॥ ४८ ॥

யத் யத் ஸாத்யதமம் கார்யம் தத்ததர்த்தமிதம் ஜபேத் ।
தத்தத்பலமவாப்நோதி பச்சாத் கார்யம் பரீக்ஷயேத் ॥

எளிதில் அடையக்கூடாத காரியங்களையும் திரிசதீ ஜபத்தினால் அடையலாம். இதைப் பரீக்ஷித்தும் பார்க்கலாம். (48)

ये ये प्रयोगास्तन्त्रेषु तैस्तैर्यत्साध्यते फलम् ।

तत्सर्वं सिध्यति क्षिप्रं नामत्रिशतकीर्तनात् ॥ ४९ ॥

யே யே ப்ரயோகாஸ்தந்த்ரேஷு தைஸ்தைர் யத் ஸாத்யதே பலம் ।

தத் ஸர்வம் ஸித்யதி க்ஷிப்ரம் நாம த்ரிஶத கீர்தநாத் ||

த்ரிசதீ பாராயணத்தினால் தந்த்ர பிரயோகங்களினால் அடையக்கூடிய பலன்கள் எல்லாம் விரைவாக ஸித்திக்கும். (49)

आयुष्करं पुष्टिकरं पुत्रदं वश्यकारकम् ।
विद्याप्रदं कीर्तिकरं सुकवित्वप्रदायकम् ॥ ५० ॥

सर्वसम्पत्प्रदं सर्वभोगदं सर्वसौख्यदम् ।
सर्वाभीष्टप्रदं चैव देव्या नामशतत्रयम् ॥ ५१ ॥

ஆயுஷ்கரம் புஷ்டிகரம் புத்ரதம் வச்யகாரகம் ।
வித்யாப்ரதம் கீர்த்திகரம் ஸுகவித்வப்ரதாயகம் ||

ஸர்வஸம்பத் ப்ரதம் ஸர்வ போகதம் ஸர்வ ஸௌக்யதம் ।
ஸர்வாபீஷ்ட ப்ரதம் சைவ தேவ்யா நாமஶதத்ரயம் ||

தேவியின் திரிசதீ நாமாவளி ஆயுள், புஷ்டி, புத்திரப் பேறு, வசீகரசக்தி, வித்யை, புகழ், கவனசக்தி, தனம், போகங்கள், ஸௌக்யம், எல்லா அபீஷ்டங்களையும் தரும். (50—51)

एतज्जपपरो भूयान्नान्यदिच्छेत्कदाचन ।
एतत्कीर्तनसंतुष्टा श्रीदेवी ललिताम्बिका ॥ ५२ ॥

भक्तस्य यद्यदिष्टं स्यात्तत्तत्पूरयते ध्रुवम् ।
तस्मात्कुम्भोद्भवमुने कीर्तय त्वमिदं सदा ॥ ५३ ॥

ஏதஜ்ஜபபரோ பூயாத் நாந்யதிச்சேத் கதாசந ।
ஏதத் கீர்த்தந ஸந்துஷ்டா ஸ்ரீதேவீ லலிதாம்பிகா ||

பக்தஸ்ய யத்யதிஷ்டம் ஸ்யாத் தத்தத் பூரயதே த்ருவம் ।
தஸ்மாத் கும்போத்பவ முநே கீர்தய த்வமிதம் ஸதா ||

ஆகையால் திரிசதீ ஜபத்தில் ஈடுபடுவீராக. வேறு ஒன்றையும் ஒருபொழுதும் இச்சிக்கவேண்டாம். த்ரிசதீ பாராயணத்தினால் ஸ்ரீதேவியாகிய லலிதாம்பிகை

சந்தோஷத்தை அடைந்து, விரைவில் பக்தர்களின் அபீஷ்டங்களை நிறைவேற்றுவாள். ஆகையால், அகஸ்தியரே! எப்பொழுதும் திரிசதீ பாராயணம் செய்வீராக. (52—53)

नापरं किञ्चिदपि ते बोद्धव्यमवशिष्यते ।
इति ते कथितं स्तोत्रं ललिताप्रीतिदायकम् ॥ ५४ ॥

நாபரம் கிஞ்சிதபி தே போத்தவ்யமவஶிஷ்யதே ।
இதி தே கதிதம் ஸ்தோத்ரம் லலிதா ப்ரீதி தாயகம் ॥

உம்மால் அறியவேண்டுவது மீதி ஒன்றுமில்லை. இவ்வாறு லலிதாப்ரீதியைத் தருவதான இந்த ஸ்தோத்திரத்தை உமக்கு நான் சொன்னேன். (54)

नाविद्यावेदिने ब्रूयान्नाभक्ताय कदाचन ।
न शठाय न दुष्टाय नाविश्वासाय कर्हिचित् ॥ ५५ ॥
यो ब्रूयात्त्रिशतीं नाम्नां तस्यानर्थो महान्भवेत् ।
इत्याज्ञा शांकरी प्रोक्ता तस्माद्गोप्यमिदं त्वया ॥ ५६ ॥
ललिताप्रेरितेनैव मयोक्तं स्तोत्रमुत्तमम् ।
रहस्यनामसाहस्रादपि गोप्यमिदं मुने ॥ ५७ ॥

நாவித்யா வேதிநே ப்ரூயாத் நாபக்தாய கதாசந ।
ந ஶடாய ந துஷ்டாய நாவிச்வாஸாய கர்ஹிசித் ॥
யோ ப்ரூயாத் த்ரிஶதீம் நாம்னாம் தஸ்யாநர்தோ மஹான் பவேத் ।
இத்யாஜ்ஞா ஶாங்கரீ ப்ரோக்தா தஸ்மாத் கோப்யமிதம் த்வயா ॥
லலிதா ப்ரேரிதேநைவ மயோக்தம் ஸ்தோத்ரமுத்தமம் ।
ரஹஸ்ய நாம ஸாஹஸ்ராதபி கோப்யமிதம் முநே ॥

ஒருபொழுதும் இதை ஸ்ரீவித்யா ஞானமற்றவனுக்கும், பக்தியில்லாதவனுக்கும், ரஹஸ்யமாகத் தீங்கு செய்பவனுக்கும், துஷ்டனுக்கும், நம்பிக்கை அற்றவனுக்கும் சொல்லக்

கூடாது. யார் திரிசதியை இவர்களுக்குச் சொல்லுகிருனே அவனுக்கு மஹத்தான கெடுதி நேரிடும் என்று சங்கரியின் ஆக்ஞை. ஆகையால் இது உம்மால் ரஹஸியமாக வைத்துக்கொள்ளப்படவேண்டும். லலிதாதேவியின் ஆணையினுலேயேதான் இந்த உத்தமமான ஸ்தோத்ரம் என்னுல் சொல்லப்பட்டது. முனிவரே! ரஹஸ்யமான ஸஹஸ்ரநாமத்தைவிட இது அதி ரஹஸ்யமாக வைத்துக் கொள்ளப்படவேண்டும். (55-57)

एवमुक्त्वा हयग्रीवः कुम्भजं तापसोत्तमम् ।
स्तोत्रेणानेन ललितां स्तुत्वा त्रिपुरसुन्दरीम् ।
आनन्दलहरीमग्नमानसः समवर्तत ॥ ५८ ॥

इति श्रीललितात्रिशतीस्तोत्रं सम्पूर्णम् ॥

ஏவமுக்த்வா ஹயக்ரீவ: கும்பஜம் தாபஸோத்தமம் ।
ஸ்தோத்ரேணுநேந லலிதாம் ஸ்துத்வா த்ரிபுரஸுந்தரீம் ।
ஆனந்த லஹரீ மக்ந மாநஸ: ஸமவர்தத ॥

ஹயக்ரீவர் உத்தம தபஸ்வியான அகஸ்தியரிடம் இப்படி உரைத்து, லலிதா திரிபுரஸுந்தரியை திரிசதீ பூர்வமாக துதித்து, ஆனந்தவெள்ளத்தில் மூழ்கிய மனத்துடன் தமது உபதேசத்தை முடித்துக்கொண்டார். (58)

प्रदीपज्वालाभिर्दिवसकरनीराजनविधिः
सुधासूतेश्चन्द्रोपलजललवैरर्घ्यरचना ।
स्वकीयैरम्भोभिः सलिलनिधिसौहित्यकरणं
त्वदीयाभिर्वाग्भिस्तव जननि वाचां स्तुतिरियम् ॥
—(ஸௌந்தர்யலஹரீ)

ॐ तत्सत् ।
ब्रह्मार्पणमस्तु ।



॥ श्रीः ॥

## ॥ श्रीललितात्रिशतीस्तोत्रनामावलिः ॥

ओं ककाररूपायै नमः
कल्याण्यै नमः
कल्याणगुणशालिन्यै नमः
कल्याणशैलनिलयायै नमः
कमनीयायै नमः
कलावत्यै नमः
कमलाक्ष्यै नमः
कल्मषघ्न्यै नमः
करुणामृतसागरायै नमः
कदम्बकाननावासायै नमः १०
कदम्बकुसुमप्रियायै नमः
कन्दर्पविद्यायै नमः
कन्दर्पजनकापाङ्ग-
वीक्षणायै नमः
कर्पूरवीटिसौलभ्य-
कल्लोलितककुप्तटायै नमः
कलिदोषहरायै नमः
कञ्जलोचनायै नमः
कम्रविग्रहायै नमः
कर्मादिसाक्षिण्यै नमः
कारयित्र्यै नमः
कर्मफलप्रदायै नमः २०

ओं एकाररूपायै नमः
एकाक्षर्यै नमः
एकानेकाक्षराकृतये नमः
एतत्तदित्यनिर्देश्यायै नमः
एकानन्दचिदाकृतये नमः
एवमित्यागमाबोध्यायै नमः
एकभक्तिमदर्चितायै नमः
एकाग्रचित्तनिर्ध्यातायै नमः
एषणारहितादृतायै नमः
एलासुगन्धिचिकुरायै नमः ३०
एनःकूटविनाशिन्यै नमः
एकभोगायै नमः
एकरसायै नमः
एकैश्वर्यप्रदायिन्यै नमः
एकातपत्रसाम्राज्यप्रदायै नमः
एकान्तपूजितायै नमः
एधमानप्रभायै नमः
एजदनेकजगदीश्वर्यै नमः
एकवीरादिसंसेव्यायै नमः
एकप्राभवशालिन्यै नमः ४०
ईकाररूपायै नमः
ईशित्र्यै नमः

ओं ईप्सितार्थप्रदायिन्यै नमः
ईदृगित्यविनिर्देश्यायै नमः
ईश्वरत्वविधायिन्यै नमः
ईशानादिब्रह्ममय्यै नमः
ईशित्वाद्यष्टसिद्धिदायै नमः
ईक्षित्र्यै नमः
ईक्षणसृष्टाण्डकोटये नमः
ईश्वरवल्लभायै नमः ५०
ईडितायै नमः
ईश्वरार्धाङ्गशरीरायै नमः
ईशाधिदेवतायै नमः
ईश्वरप्रेरणकर्यै नमः
ईशताण्डवसाक्षिण्यै नमः
ईश्वरोत्सङ्गनिलयायै नमः
ईतिबाधाविनाशिन्यै नमः
ईहाविरहितायै नमः
ईशशक्तये नमः
ईषत्स्मिताननायै नमः ६०
लकाररूपायै नमः
ललितायै नमः
लक्ष्मीवाणीनिषेवितायै नमः
लाकिन्यै नमः
ललनारूपायै नमः
लसद्दाडिमपाटलायै नमः
ललन्तिकालसत्फालायै नमः
ललाटनयनार्चितायै नमः
लक्षणोज्ज्वलदिव्याङ्ग्यै नमः

ओं लक्षकोट्यण्डनायिकायै नमः
लक्ष्यार्थायै नमः
लक्षणागम्यायै नमः
लब्धकामायै नमः
लतातनवे नमः
ललामराजदलिकायै नमः
लम्बिमुक्तालताञ्चितायै नमः
लम्बोदरप्रसुवे नमः
लभ्यायै नमः
लज्जाढ्यायै नमः
लयवर्जितायै नमः ८०
ह्रींकाररूपायै नमः
ह्रींकारनिलयायै नमः
ह्रींपदप्रियायै नमः
ह्रींकारबीजायै नमः
ह्रींकारमन्त्रायै नमः
ह्रींकारलक्षणायै नमः
ह्रींकारजपसुप्रीतायै नमः
ह्रींमत्यै नमः
ह्रींविभूषणायै नमः
ह्रींशीलायै नमः ९०
ह्रींपदाराध्यायै नमः
ह्रींगर्भायै नमः
ह्रींपदाभिधायै नमः
ह्रींकारवाच्यायै नमः
ह्रींकारपूज्यायै नमः
ह्रींकारपीठिकायै नमः

ओं ह्रींकारवेद्यायै नमः
ह्रींकाराचिन्त्यायै नमः
ह्रीं नमः
ह्रींशरीरिण्यै नमः १००
हकाररूपायै नमः
हलधृक्पूजितायै नमः
हरिणेक्षणायै नमः
हरप्रियायै नमः
हराराध्यायै नमः
हरिब्रह्मेन्द्रवन्दितायै नमः
हयारूढासेविताङ्घ्र्यै नमः
हयमेधसमर्चितायै नमः
हर्यक्षवाहनायै नमः
हंसवाहनायै नमः ११०
हतदानवायै नमः
हत्त्यादिपापशमन्यै नमः
हरिदश्वादिसेवितायै नमः
हस्तिकुम्भोत्तुङ्गकुचायै नमः
हस्तिकृत्तिप्रियाङ्गनायै नमः
हरिद्राकुङ्कुमादिग्धायै नमः
हर्यश्वाद्यमरार्चितायै नमः
हरिकेशसख्यै नमः
हादिविद्यायै नमः
हालामदालसायै नमः १२०
सकाररूपायै नमः
सर्वज्ञायै नमः
सर्वेश्यै नमः

ओं सर्वमङ्गलायै नमः
सर्वकर्त्र्यै नमः
सर्वभर्त्र्यै नमः
सर्वहन्त्र्यै नमः
सनातनायै नमः
सर्वानवद्यायै नमः
सर्वाङ्गसुन्दर्यै नमः १३०
सर्वसाक्षिण्यै नमः
सर्वात्मिकायै नमः
सर्वसौख्यदात्र्यै नमः
सर्वविमोहिन्यै नमः
सर्वाधारायै नमः
सर्वगतायै नमः
सर्वावगुणवर्जितायै नमः
सर्वारुणायै नमः
सर्वमात्रे नमः
सर्वभूषणभूषितायै नमः १४०
ककारार्थायै नमः
कालहन्त्र्यै नमः
कामेश्यै नमः
कामितार्थदायै नमः
कामसंजीविन्यै नमः
कल्यायै नमः
कठिनस्तनमण्डलायै नमः
करभोरवे नमः
कलानाथमुख्यै नमः
कचजिताम्बुदायै नमः १५०

ओं कटाक्षस्यन्दिकरुणायै नमः
कपालिप्राणनायिकायै नमः
कारुण्यविग्रहायै नमः
कान्तायै नमः
कान्तिधूतजपावल्यै नमः
कलालापायै नमः
कम्बुकण्ठयै नमः
करनिर्जितपल्लवायै नमः
कल्पवल्लीसमभुजायै नमः
कस्तूरीतिलकाञ्चितायै नमः
हकारार्थायै नमः
हंसगत्यै नमः
हाटकाभरणोज्ज्वलायै नमः
हारहारिकुचाभोगायै नमः
हाकिन्यै नमः
हल्यवर्जितायै नमः
हरित्पतिसमाराध्यायै नमः
हठात्कारहतासुरायै नमः
हर्षप्रदायै नमः
हविर्भोक्त्र्यै नमः १७०
हार्दसंतमसापहायै नमः
हल्लीसलास्यसंतुष्टायै नमः
हंसमन्त्रार्थरूपिण्यै नमः
हानोपादाननिर्मुक्तायै नमः
हर्षिण्यै नमः
हरिसोदर्यै नमः
हाहाहूहूमुखस्तुत्यायै नमः

ओं हानिवृद्धिविवर्जितायै नमः
हय्यङ्गवीनहृदयायै नमः
हरिगोपारुणांशुकायै नमः १८०
लकाराख्यायै नमः
लतापूज्यायै नमः
लयस्थित्युद्भवेश्वर्यै नमः
लास्यदर्शनसंतुष्टायै नमः
लाभालाभविवर्जितायै नमः
लङ्घ्येतराज्ञायै नमः
लावण्यशालिन्यै नमः
लघुसिद्धिदायै नमः
लाक्षारससवर्णाभायै नमः
लक्ष्मणाग्रजपूजितायै नमः १९०
लभ्येतरायै नमः
लब्धभक्तिसुलभायै नमः
लाङ्गलायुधायै नमः
लग्नचामरहस्तश्रीशारदा-
परिवीजितायै नमः
लज्जापदसमाराध्यायै नमः
लम्पटायै नमः
लकुलेश्वर्यै नमः
लब्धमानायै नमः
लब्धरसायै नमः
लब्धसंपत्समुन्नत्यै नमः २००
ह्रींकारिण्यै नमः
ह्रींकाराद्यायै नमः
ह्रींमध्यायै नमः

ओं ह्रींशिखामणये नमः
ह्रींकारकुण्डाग्निशिखायै नमः
ह्रींकारशशिचन्द्रिकायै नमः
ह्रींकारभास्कररुचये नमः
ह्रींकाराम्भोदचञ्चलायै नमः
ह्रींकारकन्दाङ्कुरिकायै नमः
ह्रींकारैकपरायणायै नमः २१०
ह्रींकारदीर्घिकाहंस्यै नमः
ह्रींकारोद्यानकेकिन्यै नमः
ह्रींकारारण्यहरिण्यै नमः
ह्रींकारावालवल्ल्यै नमः
ह्रींकारपञ्जरशुक्यै नमः
ह्रींकाराङ्गणदीपिकायै नमः
ह्रींकारकन्दरासिंह्यै नमः
ह्रींकाराम्भोजभृङ्गिकायै नमः
ह्रींकारसुमनोमाध्व्यै नमः
ह्रींकारतरुमञ्जर्यै नमः २२०
सकाराख्यायै नमः
समरसायै नमः
सकलागमसंस्तुतायै नमः
सर्ववेदान्ततात्पर्यभूमये नमः
सदसदाश्रयायै नमः
सकलायै नमः
सच्चिदानन्दायै नमः
साध्यायै नमः
सद्गतिदायिन्यै नमः
सनकादिमुनिध्येयायै नमः
ओं सदाशिवकुटुम्बिन्यै नमः
सकलाधिष्ठानरूपायै नमः
सत्यरूपायै नमः
समाकृतये नमः
सर्वप्रपञ्चनिर्मात्र्यै नमः
समानाधिकवर्जितायै नमः
सर्वोत्तुङ्गायै नमः
सङ्गहीनायै नमः
सगुणायै नमः
सकलेष्टदायै नमः २४०
ककारिण्यै नमः
काव्यलोलायै नमः
कामेश्वरमनोहरायै नमः
कामेश्वरप्राणनाड्यै नमः
कामेशोत्सङ्गवासिन्यै नमः
कामेश्वरालिङ्गिताङ्ग्यै नमः
कामेश्वरसुखप्रदायै नमः
कामेश्वरप्रणयिन्यै नमः
कामेश्वरविलासिन्यै नमः
कामेश्वरतपःसिद्ध्यै नमः २५०
कामेश्वरमनःप्रियायै नमः
कामेश्वरप्राणनाथायै नमः
कामेश्वरविमोहिन्यै नमः
कामेश्वरब्रह्मविद्यायै नमः
कामेश्वरगृहेश्वर्यै नमः
कामेश्वराह्लादकर्यै नमः
कामेश्वरमहेश्वर्यै नमः

